4th March 1961]

III—GOVERNMENT BILL.

THE MADRAS AGRICULTURAL INCOME-TAX (AMENDMENT) BILL, 1961.

* THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I beg leave to introduce the Madras Agricultural Income-tax (Amendment) Bill, 1961. 9.30 a.m.

MR. SPEAKER : Motion moved—

"That leave be granted to introduce the Madras Agricultural Income-tax (Amendment) Bill, 1961".

The motion was put and carried and leave was granted.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I introduce the Bill.

MR. SPEAKER : The Bill is introduced.

IV.—GENERAL DISCUSSION ON THE BUDGET FOR THE YEAR 1961-62.

MR. SPEAKER : இன்றைய தினம் சோஷலிஸ்டுக் கட்சித் தலைவர் ஸ்ரீ பக்கிரிசாமி பிள்ளை அவர்கள் பேசப்போகிறார்கள். அரை மணி நேரம் அவருக்காக ஒதுக்கியிருக்கிறேன். மொத்தம் 16 அங்கத்தினர்கள் பேசுவதற்கு இதுவரைக்கும் பெயர் கொடுத்திருக்கிறார்கள். பத்து மணியில் இருந்து 1½ மணிவரையில் உள்ள நேரத்தில் அவர்கள் பேசவேண்டும். ஆகவே ஒரு அங்கத்தினருக்கு 10 நிமிஷம் என்று ஒதுக்குகிறேன். இன்னும் அதிக அங்கத்தினர்கள் பேசப் பெயர் கொடுத்தால் 5 நிமிஷமாக அதைக் குறைக்க நேரிடும். தயவுசெய்து என்னிடம் யாரும் கோபித்துக் கொள்ளக்கூடாது என்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

* SRI S. PAKKIRISAMI PILLAI : கனம் தலைவர் அவர்களே, இந்த ஆண்டு நிதிநிலை அறிக்கையைச் சமர்ப்பித்த கனம் நிதி அமைச்சர் அவர்கள் தன் அறிக்கையில் வெகு விளக்கமாக எல்லோரும் எளிதில் புரிந்துகொள்ளும் நிலைமையில் விஷயங்களை எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். இதில் உள்ள எல்லா விவரங்களையும் வாசித்துத் தெரிந்துகொள்ளவே மனசு செல்கிறது. இந்த மாதிரியான ஒரு விளக்கவுரை, அவர் மேல்நாடுகளுக்குச் சென்று வந்தபின் தம் அநுபவங்களை பத்திரிகையில் எழுதி வருகிறார். அரசியல் ஞானக் கண்ணோட்டத்துடன் அந்தக் கட்டுரைகளை எவ்வளவு தெளிவாக, விளக்கமாக எழுதி வருகிறாரோ அதே ரீதியில் இந்த அறிக்கையும் அமைந்திருப்பதற்காக அவரைப் பாராட்டுகிறேன்.

(Sri S. Ranganatha Mudaliar in the Chair.)

பொதுவாக இந்த பட்ஜெட்டானது சர்வசாதாரணமானது. சர்வசாதாரணம் என்று சொன்னால் பண வருவாய்க்கு ஏற்ற மாதிரியான செலவினங்களைச் சரிக்கட்டிக் கொடுக்கப்பட்ட பட்ஜெட்தான். வருவாயை அதிகப்படுத்த எவ்வித நடவடிக்கையும் இல்லை. ஆனால் ஒரு விசேஷம் 11-வது வகுப்புவரையில் ஏழை பிள்ளைகளுக்கு இலவசக் கல்வி அளிக்க வசதி செய்திருப்பதுதான். ஆனால் இதில் ஏழைப் பிள்ளைகள் யார் என்று நிர்ணயிப்பதில்தான் கஷ்டம் இருக்கிறது. சுமார் 100 ரூபாய் வருமானம் உள்ளவர்கள்,

[Sri S. Pakkirisami Pillai] [4th March 1961]

அதற்குக் குறைந்த வருமானம் உள்ளவர்களுக்கு இந்தச் சலுகை என்றால் கொஞ்சம் அதற்குமேல் வருமானம் என்றால் அவர்களுக்குக் கிடையாது என்பது சரியாக இருக்காது. 1939-ம் வருஷத்தில் 26 ரூபாய் சம்பளம் வாங்கியவர்கள் என்றால் இன்றைக்கு 100 ரூபாய் வாங்குபவர்களுக்குச் சமம். நூறு ரூபாய் சம்பளம் என்பது எந்தவகையிலும் சிறப்பானது இல்லை. அதுவும் இரண்டு, மூன்று பிள்ளைகள் அவர்களுக்கு இருந்துவிட்டால் அவர்களுடைய குழந்தைகளுக்கு சர்க்கார் உதவி இல்லாமல் எப்படி கல்வி வசதி அளிக்க முடியும்? அவர்கள் குடும்பம் நடத்துவதே மிகவும் கஷ்டமாக இருக்கும். ஆகவே இப்போதுள்ள முறைப்படி 11-வது வகுப்புவரை இலவசக் கல்வி பெறும் மாணவர்கள் எண்ணிக்கையில் குறைவாகவேதான் இருப்பார்கள். இதனால் உண்மையிலேயே ஏழை மாணவர்களுக்கு நாம் உதவி செய்ய வேண்டுமென்று விரும்பினால் குறைந்தபட்சம் அந்த வருமான வரம்பு 150 ரூபாயாகவாவது உயர்த்தப்படவேண்டும் என்று இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

உணவுப் பொருள்களின் விலையும் இப்போது ஏறிக்கொண்டே போகிறது. அதைத் தடுப்பதற்கு எந்த முயற்சியும் அரசாங்கத்தார் எடுத்துக்கொண்டார்கள் என்று நாம் சொல்ல முடியவில்லை. நம் ராஜ்யத்தில் மாத்திரம் இல்லை. இதர ராஜ்யங்களிலும் விலைவாசிகளைக் கட்டுப்படுத்த எவ்வித நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளவில்லை. இதனால் விலை நாளுக்குநாள் ஏறிக்கொண்டே போகிறது. இப்படி விலை ஏறிக்கொண்டே போகும்போது நாம் தொழிலாளர்களுக்கு சம்பளத்தோடு பஞ்சப்படியும் வாழ்க்கைப் புள்ளி விவரக் கணக்குப்படி அதிகமாகக்கொடுக்க ஏற்பாடு செய்திருக்கிறோம். சமீபத்திலே டிசெம்பர் மாதத்தில் வாழ்க்கைப் புள்ளி 488 ஆக உயர்ந்திருந்தது. இதனால் இதற்கேற்ப பஞ்சப்படியை சுமார் 2 லட்சம் தொழிலாளர்கள் பெற்றுக்கொண்டிருந்தார்கள். ஆனால் திடீரென்று இந்தப் புள்ளி 18 குறைந்துவிட்டதாக ஜனவரியில் அதிகாரிகள் அறிவித்தார்கள். இதனால் சுமார், 4, 4½ ரூபாய்வரையில் ஒவ்வொரு தொழிலாளருடைய பஞ்சப்படியும் குறைந்தது. அந்த ஒரு ரூபாயை வாங்க தொழிலாளர்கள் கட்டுப்பாட்டை உண்டாக்கி வேலை நிறுத்தஞ்செய்யப் போவதாக பயமுறுத்தி வாங்கும் நிலைமையில் இருக்கிறது. ஒரு ரூபாய் கூட்டிக்கொடுப்பது என்றால் எந்த முதலாளியும் சம்மதிப்பதில்லை. ஆனால் இப்படி திடீரென்று அதிகாரிகள் வாழ்க்கைப் புள்ளி குறைந்ததாகக் கணக்குக் காட்டி அவர்கள் சம்பளம் 4 ரூபாய்க்கு மேல் குறைய வழி செய்துவிட்டதானது—முதலாளிகள் இதில் ஏதோ சூழ்ச்சி செய்திருக்கிறார்கள். முதலாளிகளுக்கு அனுகூலம் செய்வதற்காகவே அரசாங்க டிபார்ட்மெண்டைச் சேர்ந்தவர்கள்கூட இப்படிச் சூழ்ச்சி செய்கிறார்கள். இல்லாவிட்டால் விலைவாசிகள் உயர்ந்த நிலையிலேயே இருக்கும்போது வாழ்க்கைப் புள்ளி எப்படி 18-க்கு மேல் திடீரென குறைய முடியும் என்று எல்லோரும் சந்தேகப்படுகிறார்கள்.

THE HON. SRI R. VENKATARAMAN: அப்போதே அதுபற்றி கேள்வி போட்டிருப்பதுதானே.

4th March 1961]

SRI S. PAKKIRISAMI PILLAI : (Statistical) ஸ்டாடிஸ்டிகல் டிபார்ட்மென்டில் இருந்து இரண்டு குமாஸ்தாக்கள் குறிப்பிட்ட சில கடைகளைப் பார்த்து மிளகாய் விலை, புளி விலை முதலியவை களை விசாரித்து கணக்குப்போட்டு மாதாமாதம் கஜட்டில் பதிவு செய்வது வழக்கம். இம்மாதிரி சிறுக சிறுக பல அரசியல் காரண மாக வாழ்க்கை புள்ளி விவரம் உயர்ந்துக்கொண்டுபோவதை நாம் பார்க்கிறோம். உயர்ந்துபோனபின் சாதாரணமாக குறைவது கிடையாது. ஜனவரி மாதத்தில் 18 புள்ளி குறைந்திருக்கிறது என்று சொன்னார்கள். முதலாளிகளுக்குச் சாதகமாக அதிகமான வீழ்ச்சி ஏற்பட்டிருக்கிறது. இந்தச் சமயத்தில்தான் கனம் நிதி அமைச்சர் அவர்களும் திடீர் என்று விறகு, எண்ணை கடைகளையும் பார்வை செய்திருக்கிறார். அவர் பார்வையிட்ட நாளில் இருந்து இந்த நாள்வரையிலும் விறகின் விலையும், எண்ணை விலையும் ஏறிக் கொண்டுதான் போகிறது. ஒன்றும் குறைந்தவிடவில்லை. 18 புள்ளி குறைவு என்று சொல்வதற்கு எந்த நிலைமை ஏற்பட்டி ருக்கிறது. இதேமாதிரியான நிலைமை மேல் நாடுகளிலும் இருந்துக்கொண்டிருக்கிறது. ஆஸ்த்ரேலியா போன்ற நாடுகளில் வாழ்க்கை புள்ளி விவரம் உயர உயர அதற்கேற்ப பஞ்சப்படி கொடுக்கும் திட்டம் அங்கேயும் இருக்கிறது. மேல்நாடுகளில் பொறுப்புள்ள தொழிற்சங்கங்கள் கூடி விலை விவரத்தைத் தயார் செய்து புள்ளி விவரங்களைத் தயாரிக்கின்றன. இதனால் முதலாளி களுக்கும் சந்தேகம் கிடையாது. ஆனால் நம் நாட்டில் சாதாரண குமாஸ்தாக்கள் கணித்துக்கொண்டு வருகிறார்கள். அதை மாற்று வதற்கு மேல் அதிகாரிகளுக்கு அதிகாரம் இருக்கிறது. இங்கும் இதற்கு ஒரு நீதிபதியை ஏற்பாடு செய்யவேண்டும். தொழிலாளர் களுக்கும் டிபார்ட்மெண்டின்மீது நம்பிக்கை ஏற்படும். ஸ்ரீ ராஜாஜி அவர்கள் முதல் மந்திரியாக இருக்கும்போது இந்தமாதிரி புகார் வந்தது. டிபார்ட்மெண்ட் அதிகாரியைக் கூப்பிட்டு அவர்கள் எச்சரிக்கை செய்தார்கள். மறுமாதம் முதல்கொண்டு புள்ளி விவரம் சரியாகக் கிடைத்துக்கொண்டு வந்தது. இந்த நிலைமையில் 18 புள்ளி வளர்ச்சி அடைந்ததற்கு காரணம் என்ன என்று தெரிவிக்கும்படியான பொறுப்பில் இருக்கிறார்கள். இந்த விஷயத் தில் நீதிபதியை அமர்த்துவதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக நம் நாட்டில் இதர ராஜ்யங்களில் வீடுகள் கட்டி வசதிகள் அதிகமாக செய்யப்பட்டு இருக்கின்றன. நம் ராஜ் யத்தில் வீடுகட்டும் திட்டம் ஆரம்பித்த பிறகு நிலத்தின் விலை அதிகமாகிவிட்டது. கட்டட மனைகளின் விலை அதிகமாக உயர்ந்துக்கொண்டே போகிறது. மொத்தமாக பணம் கொடுத்து வாங்கக்கூடிய ஸ்தாபனம்தான் வீடுகட்டும்படியான நிலைமையில் இருந்துகொண்டிருக்கிறது. தொழிலாளிகளுக்கு வீடுகட்டு வதற்கு மத்திய அரசாங்கத்திலிருந்து உதவி கிடைத்தும் சில முதலாளிகள் வீடுகள் கட்டிக்கொடுக்காமலேயே இருந்துக் கொண்டிருக்கிறார்கள். தொழிலாளர்கள் ஸ்தாபனத்திற்கு இது மாதிரி மான்யம் கிடைத்தும், கூட்டுறவு ஸ்தாபனங்கள் இருந்தும், வீடுகள் கட்டும்படியான நிலைமையில் இல்லை. இந்த நிலைமையிலே

[Sri S. Pakkirisami Pillai] [4th March 1961

அரசாங்கம் குடிசைப் பிரதேசங்களை சீர்த்திருத்திக்கொள்வதற்கு திட்டம் போட்டிருக்கிறது. ஆனால் ஒரு பிரத்தியேக குடிசைப் பிரதேசம்கூட திருத்தப்படவில்லை—அரசாங்கத்தாராலும், கார்ப்பொரேஷனாலும் முடியவில்லை. ஏனென்றால் நிறைய கஷ்டம் இருக்கிறது. குடிசைப் பிரதேசங்களில் தொழிலாளர்கள் வீடுகள் கட்டுவதற்குண்டான நிலைமையில் வசதிகள் இல்லாது இருக்கின்றன. கனம் ஸ்ரீ ஆர். வெங்கடராமன் சொன்னமாதிரி 100 ரூபாய்க்குமேல் வருமானம் பெறக்கூடிய தொழிலாளர் குடும்பங்கள் இருந்து வருகின்றன. மிகச் சிறிய வீடாக கட்டிக்கொள்ளவேண்டுமானால் கூட வசதிகள் கிடையாது. சாதாரணமாக இண்டஸ்ட்ரியல் ஹவுசிங் ஸ்கீம்லே மத்திய அரசாங்கம் மான்யம் கொடுப்பதன் மூலமாக வசதிகள் செய்து வருகிறது. அந்தமாதிரி திட்டத்தின் மூலமாக கூட்டுறவு சங்கங்களை ஏற்படுத்தி குடிசைப் பிரதேசங்களில் வாழும் மக்களும் சொந்த வீடுகள் கட்டும்படியான சூழ்நிலையை அரசாங்கம் ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, தொழிலாளர்களுக்குண்டான இன்ஷூரன்ஸ் திட்டம் தமிழ்நாட்டில் பல இடங்களில் அமுலுக்குக்கொண்டு வரப்பட்டிருக்கிறது. இன்ஷூரன்ஸ் திட்டம் தொழிலாளர்களுக்கென்று அவர்கள் தேக ஆரோக்கியத்தைக் காப்பாற்றப்படுவதற்காக என்று சொல்லி அவர்களிடமிருந்து பணம் வசூலிக்கப்படுகிறது. இந்த இன்ஷூரன்ஸ் கார்ப்பரேஷனில் பணம் நிறைய சேர்க்கப்பட்டிருக்கிறது. செலவு கொஞ்சம்தான் இருக்கிறது. பணம் நிறைய இருக்கும்போது தொழிலாளர்களுக்கு சரியான மருந்து கொடுக்கும்படி செய்யவேண்டும். இன்ஷூரன்ஸ் டிபார்ட்மெண்டு இலாகா சாதாரணமாக ஒரு தொழிலாளர்களுக்கு லீவு கொடுக்கும்படியான ஸ்தாபனமாக இருந்துக்கொண்டுதான் இருக்கிறதே தவிர, கொஞ்சம் கடுமையான நோய்களை குணமாக்கும் நிலைமையில் உயர்தர மருந்துகள் கொடுக்கப்படுகிறதில்லை.

உயர்தர மருந்துகள் வாங்குகிறார்கள், விநியோகிக்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. ஆனால் அங்கு போய் பார்த்தால், சாதாரண லோக்கல் பண்ட் டிஸ்பன்ஸரி அல்லது கார்ப்பரேஷன் டிஸ்பன்ஸரிகளில் உள்ள மருந்துகள், மலிவான மருந்துகள் எப்படி கொடுக்கப்படுகிறதோ அந்த நிலைதான் அங்கும் இருந்து கொண்டிருக்கிறது. ஆரோக்கியத்தை கொடுக்கும் முறையில் இந்த இன்ஷூரன்ஸ் டிஸ்பன்ஸரிகள் இல்லை. லீவ் கொடுக்கும் ஸ்தாபனமாகத்தான் இது இருந்துகொண்டு வருகிறது. இவைகளை போதுமான அளவு நன்கு ஸூப்பரவைஸ் செய்து கட்டுத்திட்டத்திற்கு கொண்டு வருவதற்கு ஆள் இல்லை. டயரக்டர்ஸ், மெடிகல் ஆபீஸர்கள் இவர்கள் எல்லாம் ஆபீஸ்களில் இருந்து கொண்டு வேலை செய்கிறார்களே தவிர சுற்றி வந்து பார்ப்பதில்லை. அடுத்தபடியாக, நிதி அமைச்சர் அவர்கள் மேல்நாடுகளுக்கு சென்றுவிட்டு வந்த பிற்பாடு அங்கு அரசாங்க அதிகாரிகள் அதிகாலையில் போய் தங்கள் ஆபீஸ் காரியங்களை பார்க்கிறார்கள் என்று தெரிந்துகொண்டு அம்மாதிரியான ஒரு திட்டத்தை நம்

4th March 1961] [Sri S. Pakkirisami Pillai]

ராஜ்யத்திலும் ஏற்படுத்தவேண்டுமென்ற எண்ணத்தை வெளிப் படுத்தியிருக்கிறார்கள். ஆனால் இங்கு 8½ அல்லது 9 மணிக்கு ஆபீஸுக்கு வரும் நிலையில் அரசாங்க சிப்பந்திகள் இருக்கிறார்களா? மேல்நாடுகளில் உள்ள சூழ்நிலை வேறு. அவர்களுக் கெல்லாம் வீடுகள் ஆபீஸ் அருகாமையில் கட்டிக்கொடுக்கப்பட்டி ருக்கின்றன. அவர்களுக்கு நல்ல வாகன வசதிகள் இருக்கின்றன. ஆனால் இங்கோ வில்லிவாக்கம், அரக்கோணம், திருவள்ளூர், பொன்னேரி, செங்கல்பட்டு போன்ற இடங்களிலிருந்து, தொலைவி லிருந்து வந்து உத்தியோகம் பார்க்கிறார்கள். காலைக் கடன்களை முடித்துவிட்டு வரும்போது குறைந்தது 10 மணியாகத்தான் செய்யும். ஆகவே, அதிகாலையில் ஆபீஸ்கள் ஆரம்பிக்கும் திட்டம், மற்ற சூழ்நிலைகளை சரியானபடி ஏற்படுத்தினால் தவிர சாத்திய மாகாது. அதுவும் பட்டணத்தில் சாத்தியமாகாது. கிராமங்களில் சாத்தியமாகுமோ இல்லையோ அது வேறு விஷயம். பட்டணத்தில் மிகவும் கஷ்டம் என்று சொல்லிக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

* DR. (SRIMATHI) T. S. SOUNDARAM RAMACHANDRAN: தலைவர் அவர்களே, இந்த வரவு செலவுத் திட்டத்தை நிதானமாக ஆனால் தைரியமாக சமர்ப்பித்ததற்கு நான் மகிழ்ச்சியடைகிறேன். இதை தேர்தல் கால பட்ஜெட் என்று எதிர்கட்சி நண்பர்கள் பேசி தங்கள் பேச்சுக்களை தேர்தல் கால பேச்சைப் போல் விஸ்தாரமாக பேசியதைக்கேட்டு நான் ஓரளவில் சந்தோஷப்பட்டேன். ஏனெனில் அதை சீக்கிரத்தில் ஆரம்பிப்பது அவர்கள் கொள்கை யானால் அது எல்லோருக்கும் நல்லதுதானே. அடுத்தபடியாக, சில பிரச்னைகள்மீது எனக்குத் தெரிந்த சில ஆலோசனைகளைக் கூறி விட்டு முடித்துக்கொள்கிறேன். முதலாவதாக, விவசாயம். நீர் பாசனத் திட்டங்கள் உள்ள இடங்களில் தண்ணீர் சேதமாகாமல் பார்த்துக்கொள்ளவேண்டும். அதற்காக இப்பொழுது கால்வாய் கள் செப்பனிட்டு வருவதைப் பார்க்கிறோம். கன்னடியன்கால் வாயை எடுத்துக்கொண்டால், அது அம்பாசமுத்திரம் தாலுகாவில் இருக்கிறது. நான் அங்கு அடிக்கடி பிரயாணம் செய்வதால் எனக்கு நன்கு தெரியும். அங்கு தண்ணீர் பல இடங்களில் நதி போல் ஓடு கிறது. சில இடங்களில் வாய்க்கால்களாக இருக்கிறது. தண்ணீரை சேதமடையும்படி விடாது எங்கெங்கு அந்தத் தண்ணீரை உபயோகித்து பாசனத்திற்கு கொடுக்க முடியுமோ அப்படிக் கொடுப்பதற்குவேண்டிய நடவடிக்கைகளை துரிதமாக எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். கடனா நதி நீர்த் தேக்கம் பற்றி பேச்சு நடப்பது இப்போது அப்போதல்ல. திருநெல்வேலி கஸெட்டியரில் 10,000 ஏக்கர் ஸ்டபிலைஸ் செய்து புதிதாக கொடுக்கமுடியும் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதற்கு அண்டை நாடுகளுடன் பேச்சு வார்த்தையோ அல்லது ஒப்பந்தமோ செய்யவேண்டிய அவசியமில்லை. அங்கு நெல் விளையும் இடத்தில் ஒரு போகம் கடலை போடுவதைப் பார்க்கும் போது மனதிற்கு மிகவும் சங்கடமாகயிருக்கிறது. அது, முதல் தரமான விவசாய இடம். ஆகவே, சிறிய சிறிய அணைகளை சரி செய்து அங்கு தண்ணீர் சேதமாகாமல் பார்த்துக்கொள்ள

[4th March 1961

[Dr. (Srimathi) T. S. Soundaram Ramachandran]

வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கப்படவேண்டும். அங்கு சராசரி ஏக்கர் ஒன்றுக்கு 4,000 பவுண்ட் விளையும். அடுத்தபடியாக கொடவனூறு பற்றி ஒரு வார்த்தை. போன தடவை இந்த சபையில் எதிர்கட்சி நண்பர் ஒருவர் தன்னை பாவி என்று சொன்னார்கள். அதை நான் ஏற்றுக்கொள்வதற்கில்லை. புண்ணியவாளன் என்றுதான் சொல்வேன். அங்கு ஏற்கனவே ஒரு நீர்த்தேக்கம் முடியும் தருவாயில் இருக்கிறது, காமராஜசாகரம். வேடசெந்தூர், திருச்சி-கரூர் தொகுதிக்கு தண்ணீர் கொடுக்கும் திட்டம் பற்றி தீவிர முயற்சிகள் எடுக்கப்பட்டு வருகிறது. இந்தப் பாவி இருப்பதால் என் தொகுதிக்கு தண்ணீர் கிடைக்கவில்லையென்றால் தான் ராஜிநாமா செய்துவிடுகிறேன் என்று எதிர்கட்சி நண்பர் சொன்னார். அவரும் அவரது கட்சியும் இந்த இடத்தில் காங்கிரஸ்க்கு போட்டியின்றி விட்டுக் கொடுக்கத் தயாரா? ஒரு நீர்தேக்கம் தவிர இரண்டாவதற்கு சாத்தியப்படாது என்று சொன்னால் நம் ஊர் என்ஜினீயர்கள் பின் எதற்காக இருக்கிறார்கள் என்று குதர்க்கம் பேசுகிறார்கள். அடுத்தபடியாக, தொழில் துறையில் நம் ராஜ்யம் நல்ல முன்னேற்றம் கண்டிருக்கிறது. அது மட்டுமல்ல. துணிச்சலோடு திட்டங்கள் நடத்த வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த சந்தர்ப்பத்தில் ஒன்று சொல்ல விரும்புகிறேன். பத்து ஆண்டுகளுக்கு முன்னர் மெட்ராஸிலிருந்து அம்மை, காலரா இவைகளை அடியோடு ஒழித்துக் கட்டி விட்டோம் என்று நினைத்தது போக இன்று சின்ன அம்மை, பெரிய அம்மை, டைபாய்ட் இவைகள் எக்காலத்திலும் இருந்து கொண்டிருக்கிறது. கிண்டி, என்னூர், அம்பத்தூர், போன்ற இடங்களில் பெரிய பெரிய தொழிற்சாலைகளை கட்டிக்கொண்டுபோனால் தொழில் ஒருயிடத்தில் குவிவது மட்டுமல்ல, அதனால் ஏற்படக்கூடிய பிரச்னைகள் இப்போதிருப்பதைவிட பன்மடங்கு பெருகும் எதிர்காலத்தில். பம்பாய், கல்கத்தா போன்ற இடங்களில் இருக்கும் இட நெருக்கடியை மனதில் கொண்டு ரெயில் வசதி, இதர வசதிகள் இவைகள் எங்கெங்கு இருக்கின்றனவோ அங்கெல்லாம் இத்தொழில்களை நிறுவ சர்க்கார் முயற்சி செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

10 a. m. முக்கியமாக தொழில் பேட்டைகளை கூட்டுறவு இயக்கங்கள் ஒன்றும் இல்லாத இடங்களில் அதிலும் எந்தவிதமான நீர்பாசன வசதியும் இல்லாத இடங்களில், வரண்ட இடங்களாகப் பார்த்து அந்த இடங்களில் தொழிற்பேட்டைகளை ஏற்படுத்தி கொடுப்பது நமது கடமையாகும். நீர்பாசன வசதியில்லாத இடங்களில் மின்சார வசதி அதிகமாக செய்துகொடுக்கலாம். கால்நடை வளர்ப்புக்கு அதிகமாக வசதி செய்துகொடுக்கவேண்டும். அதன் காரணமாக அந்த இடங்களில் பரவலாக சிறு சிறு தொழில் பேட்டைகள் ஏற்படவும், சர்வீஸ் சென்டர்கள் ஏற்படவும் டிரெயினிங்-கம்-ப்ரொடக்ஷன் சென்டர் ஏற்படவும் முடியும். விவசாயத்திற்கு நாம் முதலிடம் (டாப் பிரையாரிட்டி) கொடுப்பது போல் நீர்பாசன வசதி இல்லாத இடங்களுக்கு தொழில் பேட்டை அமைப்பதற்கும் முதலிடம் கொடுக்கவேண்டும்.

4th March 1961]

[Dr. (Srimathi) T. S. Soundaram Ramachandran]

அப்போதுதான் நாட்டில் தொழிற் வளர்ச்சி சீராக பெருக முடியும். ஆகவே தொழிற் பேட்டைகள் தொழிற் நிலையங்கள் மிகவும் பிற்பட்ட இடங்கள் என்று மட்டும் பார்க்காமல் வேறு எந்தவிதமான வசதியும் இல்லாத இடங்களாகப் பார்த்து அந்த இடங்களில் ஸ்தாபிக்கவேண்டும் என்பதை சர்க்காருக்கு மிகவும் வற்புறுத்திக் கூறிக்கொள்கிறேன். கூட்டுறவு முறையில் தொழில்களை ஆரம்பிக்கவேண்டும் என்று சொல்லும்போது ஒன்றிரண்டு விஷயங்களை கூற விரும்புகிறேன். சாதாரணமாக இதில் உத்யோகப்பற்றற்றவர்கள்தான் இருக்கவேண்டும் என்று சொல்லப் படுகிறது. ஆனால் இதில் ஆசை கொள்ளையாக இருப்பதின் காரணமாக உத்யோகப்பற்றற்றவர்கள் பல வேலைகளில் ஈடு பட்டிருப்பவர்கள் பலர் இதில் சேர்ந்து நடத்துகிறார்கள். இதில் முக்கியமாக கணக்குகள் தணிக்கை செய்து இரண்டு மூன்று வருடங்கள் ஆன பின்னால்தான் இதிலுள்ள குற்றங்களைப்பற்றி ஆராய்ந்து முடிவு எடுக்கவேண்டியிருக்கிறது. இதன் காரணமாக உத்தியோகப் பற்றில்லாதவர்கள் இதில் வந்து சேர்ந்து ஒத்துழைப்பதற்கு முன்வர பயன்படுகிறார்கள். அப்பேர்ப்பட்ட நிலைமை இல்லாத வகையில் கூட்டுறவு துறையில் வழிவகை செய்யவேண்டும். உத்தியோகப் பற்றில்லாதவர்கள் இதில் அதிக மாக பங்கு கொள்ள வேண்டுமானால் கணக்கு தணிக்கையில் அதிக சுறுசுறுப்பும் வேகமும் இருக்க வேண்டியது அவசியம். அதற் கான முறையில் கூட்டுறவு இயக்கத்தை பலப்படுத்தவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

தொழில் துறையைப் பொறுத்தவரையில் ஒன்றிரண்டு விஷயங் களை கூற விரும்புகிறேன். ஜிப்சம், சுண்ணாம்பு போன்றவைகள் கிழக்கு ராமனாதபுரத்திலும் முதுகுளத்தூர் பகுதியிலும் கிடைத்துக்கொண்டிருக்கிறது. எங்கள் பக்கத்தில் பாளையம், கரூர் என்ற இடத்திலும் இம்மாதிரியான பொருட்கள் கிடைக் கிறது. இதை இப்பொழுது சிமண்டுக்கு பயன்படுத்தி வருகிறார் கள். இதை நான் ஆட்சேபிக்கவில்லை. இதே போன்று சிமெண்ட் பாக்டரியை நினைத்தவுடன் எந்த இடத்திலும் ஆரம்பித்து விட முடியாது என்றதும் எனக்குத் தெரியும். ஜிப்சம், சுண்ணாம்பு போன்ற பொருட்களை சிறிய அளவில் எப்படி உபயோகிக்க முடியும் என்பதைப்பற்றி ஆராய்ச்சி செய்து பார்த்து அதை முன்னோடியாக ஒன்றிரண்டுத்திட்டங்களையாவது ஆரம்பிக்க சர்க்கார் முயற்சி செய்யவேண்டும். இதை ஸ்மால் இண்டஸ்ட்ரீஸ், வில்லேஜ் இண்டஸ்ட்ரீஸ் என்ற இனத்தின் கீழோ அல்லது வேறு எந்தவிதமாவது சிறு கைத்தொழில் முறையில் இதை கொண்டு வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். கதர், கிராம கைத் தொழில் பற்றி ஒன்றிரண்டு வார்த்தைகள் சொல்ல விரும்பு கிறேன். (மணியடிக்கப்பட்டது). எனக்கு இன்னும் சிறிது நேரம் அனுமதிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். காதி அல்லது கதரைப்பற்றி சொல்லும்போது கதரும் கைத்தறி என்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். கதர் என்று தனியாக கிடையாது. கைத்தறியினால் ஒரு குடும்பம் பிழைக்கிறது என்று சொன்னால் கதரினால் ஐந்து முதல் பத்து

[Dr. (Srimathi) T. S. Soundaram Ramachandran]

குடும்பங்கள் வரை பிழைக்கின்றன. ஆகவே கதரை அல்லது கதர் தொழிலை எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் உட்பட எல்லோரும் ஆதரிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு முக்கியமாக கைக்குத்தல் அரிசி விஷயத்தில் நாம் மிகவும் கவனம் செலுத்த வேண்டும். டாக்டர் என்ற முறையில் சொல்லுகிறேன், நாம் அனைவரும் கைக்குத்தல் அரிசியை உப யோகித்தால், இப்போது நாம் உற்பத்தி செய்யும் அளவிலிருந்து இன்னும் 10 சத விகிதம் அதிகமாக உற்பத்தி செய்ய முடியும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். இந்த விஷயத்தைப்பற்றி நான் அடிக்கடி கூறியிருக்கிறேன். இவ்விதம் நாம் அனைவரும் கைக்குத்தல் அரிசி உபயோகித்து வந்தால் வைட்டமின் மருந்து கள், இன்ஜெக்ஷன் இவைகள் எல்லாம் உபயோகிக்க வேண்டிய தேவையே ஏற்படாது. ஆகவே இதில் அனைவரும் கவனம் செலுத்த வேண்டும் என்று வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன்.

பெண்கள் குழந்தைகள் நலன் விஷயத்தில், இப்போது அதை பார்த்துக்கொள்வதற்கு பல டிப்பார்ட்மெண்டுகள் இருக்கின்றன. இதைப்பற்றி எவ்வளவோ விரிவாக பேச வேண்டியிருக்கிறது. அதையெல்லாம் பின்னல் பேசிக்கொள்கிறேன். சமூகத்தில் பெண் களுக்கு ஏதாவது தவறு நடந்துவிட்டால் அது புருஷர்களை ஒன்றுமே பாதிக்காது. அதனல் புருஷர்கள் எந்தவிதத்திலும் காயப்படுவது இல்லை. இழுக்கு எல்லாம் பெண்களுக்குத்தான் வந்துசேருகின்றது. இம்மாதிரிப்பட்ட நிலைமையை மாற்றுவதற்கு ஒரு டிபார்ட்மெண்ட் வேலை செய்து கொண்டிருக்கிறது. அதே நேரத்தில் சாதாரண ஏழை பெண்களை காப்பாற்றுவதற்கு வேறு ஒரு டிபார்ட்மெண்ட் வேலை செய்துகொண்டிருக்கிறது விஜிலன்ஸ் டிபார்ட்மெண்ட் ஸ்கீம், சர்டிபை ஸ்கூல் ஸ்கீம், ஆர்பனேஜ் ஸ்கீம் போன்ற பல ஸ்கிம்கள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. அவ்விதம் இல்லாமல் குழந்தைகள், பெண் கள் விஷயத்தில் கைகால் இல்லாதவர்கள், செவிட்டு குழந்தைகள், கண் இல்லாத குழந்தைகள் இவர்கள் எல்லோரையும் காப்பாற்று கின்ற முறையில் இந்த இலாக்காக்களை எல்லாம் ஒன்ருகச் சேர்த்து வாலன்டிரி இன்ஸ்டிட்யூஷன்-ஆக வருவதையும் ஒன்ரு கச் சேர்த்து, பொருளாதார வகையில் நல்ல பலன் பெறக்கூடிய வகையில் எல்லோருக்கும் வாய்ப்பு அளிக்கக்கூடிய முறையில் அமைக்க வேண்டும். அதோடு அவர்கள் சமூகத்திற்கு ஒரு பளு என்றில்லாத முறையில் அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தை கொண்டு வரவேண்டும். இதற்கான திட்டங்களை மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திலேயே சேர்க்கவேண்டும் என்றும் கேட்டுக்கொள்கிறேன்.

**Sri A. VEDARATHNAM:** கனம் தலைவர் அவர்களே, நம் முடைய கனம் நிதி அமைச்சர் அவர்கள் இவ்வாண்டு சமர்ப்பித் திருக்கின்ற ஒரு பிரமாதமான வரவு-செலவுத் திட்டத்தை பாராட்டும் முகத்தான் சில வார்த்தைகள் இங்கே கூற விரும்பு கிறேன். இதில் கண்டிருக்கின்ற நல்ல அம்சங்களை பாராட்டுவதற்கு மனம் இல்லாத போனுலும் குறை கூருமல் இருக்கலாம். எதிர்க் கட்சி அங்கத்தினர்கள். உண்மையிலேயே இந்த மாகாணத்தின்

4th March 1961] [Sri A. Vedarathnam]

பேரில் அவர்கள் அபிமானம் உள்ளவர்களாக இருந்தால் இதில் கண்டிருக்கின்ற நல்ல விஷயத்தை குறிப்பிட்டு விட்டு, விட்டுப் போன விஷயம் ஏதாவது இருந்தால் அவைகளையும் நல்ல முறையில் நாட்டின் அபிவிருத்தியை கருதி அவர்கள் சுட்டிக்காட்டி யிருக்கலாம். இதற்கு மாருக முக்கியமாக எதிர்க்கட்சி பிளாக்கில் இருக்கக்கூடிய கனம் கோவை அங்கத்தினர் அவர்கள் குறிப்பிட் டார்கள், இது தேர்தல் அறிக்கையாக இருக்கிறது என்று. ஆம், இது தேர்தல் அறிக்கை என்று சொல்லுவதில் தவறு இல்லை என்பதை நான் ஒத்துக்கொள்கிறேன். ஏனென்ருல் ஜனநாயக அரசாங்கத்தில் தேர்தல்தான் முக்கியம். மக்களுக்கு கொடுத் திருக்கின்ற சுப்ரீம் பவர்தான் இந்த வாக்கு. அதை எந்தக் கட்சியினர் பெறுகின்ருர்களோ, அவர்கள் ஆட்சிப் பொறுப்பை ஏற்க வேண்டும் என்பதுதான் ஜனநாயக தத்துவத்தில் இருக் கின்ற முக்கியமான அம்சம். ஆனல் கம்யூனிஸ்டுகளுக்கு இதைப் பற்றி கவலேயில்லை. மக்களுடைய வாக்கு, மக்களுடைய அபி மானம் என்பது அவர்களுடைய கட்சியில் கனவில்கூட நினைத்துப் பார்க்கவேண்டிய அவசியமில்லை. அவர்களுடைய கட்சியில் இதைப்பற்றி கவலைப்பட வேண்டிய அவசியமில்லை என்றிருப் பதால்தான் அவர்கள் இதை வோட்டு பெறுவதற்காக தயாரிக்கப் பட்டிருக்கும் ஒரு அறிக்கை என்று கேலி செய்கின்ருர்கள் என்று நினைக்கிறேன். ஜனநாயக ஆட்சியை விரும்பும் மக்களது ஆட்சியை அமைக்க மக்கள் எதை விரும்புகிருர்களோ, அதை செய்து கொடுப்பதற்கு என்னென்ன திட்டங்கள் போடப்படு கிறதோ, அவைகளை நிறைவேற்றுவதற்கு என்னென்ன முறைகள் கையாளப்படுகிறதோ அவைகள் எல்லாம் தேர்தலுக்காக செய்யும் சூழ்ச்சிதான் என்று சொல்லுவார்களேயானல் அதை நான் வரவேற்கிறேன். அந்த மாதிரியான முயற்சியை எல்லோரும் பாராட்ட கடமைப்பட்டிருக்கிருர்கள் என்பதை குறிப்பிட விரும்புகிறேன். இந்த அறிக்கையின்மீது பல குற்றச் சாட்டுகள் கூறப்பட்டன. இதற்கெல்லாம் பதில் சொல்லுவதற்கு நேர மில்லை, நேற்றிலிருந்து இன்று 5 நிமிட நேரம் குறைக்கப்பட்டிருக் கிறது. அவைகளை எல்லாம் பின்னல் சந்தர்ப்பம் வருகின்ற போது சொல்லிக்கொள்கிறேன்.

சிபாரிசின் பேரில்தான் எல்லா காரியங்களும் நடைபெறு கின்றன என்று குறிப்பிட்டதைப்பற்றி நான் ஒன்று நினைவூட்ட விரும்புகிறேன். நாங்கள் எல்லோரும் தேர்ந்தெடுக்கப்பட்டு முதலா வதாக மந்திரிசபை அமைத்த பின்னல்தான் இன்சினீயரிங் காலேஜ், மெடிக்கல் காலேஜ் போன்ற காலேஜ்களுக்கு அட்மிஷன் நடந்து கொண்டிருந்தது என்பது கனம் அங்கத்தினர்களுக்குத் தெரிந்திருக்கும் என்று நினைக்கிறேன். அப்போது சபையிலே இந்த குற்றச்சாட்டு எடுத்துக் கூறப்பட்டது. அந்த காலேஜ் களுக்கு சிபாரிசு மூலமாகத்தான் மாணவர்களைத் தேர்ந்தெடுக்கப் படுகிறது என்பது அந்தக் குற்றச்சாட்டு. அப்போது அவையிலே எப்போதும் பேசாத கனம் முதலமைச்சர் அவர்களும், கனம் நிதி அமைச்சர் அவர்களும் எழுந்து சொன்னர்கள், மூன்று நாட்கள் அவகாசம் கொடுக்கிறேம், எங்கேயாவது ஒரு மாணவனுக்கு இந்த

மந்திரி சபையில் இருக்கக்கூடியவர்களில் யாராவது சிபாரிசு செய்திருக்கிறார்கள் என்று ப்ரூவ் செய்தால் தக்க பரிகாரம் செய்கிறோம் என்று. அந்த மூன்று நாட்கள் அவகாசத்தில் ஒரு கேஸ்கூட அவர்களால் நிரூபிக்க முடியவில்லை என்ற காரணத்தினால் அதை இங்கே குறிப்பிட விரும்புகிறேன். எல்லாம் சிபாரிசு என்று சொல்லுவது, இப்படி பொதுப்படையாகக் கூறுவது நிரூபிக்க முடியாத ஒரு குற்றச்சாட்டு. ஒரு அரசியல்வாதியை ஸ்பை என்று சொன்னால் அது நிரூபிக்க முடியாது, ஒரு வியாபாரியை பிளாக் மார்க்கெட்டியர் என்று சொன்னால் அது நிரூபிக்க முடியாது, ஒரு பெண்ணை கற்பற்றவள் என்று சொன்னால் அதை நிரூபிக்க முடியாது, ஒரு உத்தியோகஸ்தரை கரப்ட் என்று சொன்னால் அதை நிரூபிக்க முடியாது, வக்கீல்களை எதிர் கட்சியிடம் ஃபீஸ் வாங்குகின்றவர்கள் என்று சொன்னால் அதை நிரூபிக்க முடியாது. இந்தமாதிரி குற்றச் சாட்டுகளைக் கூறி அரசாங்கத்தின்மீது இப்படி தவறான எண்ணத்தை உண்டாக்க முயற்சிக்க வேண்டாம் என்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். இந்த மாதிரி அவர்கள் சொன்ன குற்றச்சாட்டுகள், கனம் மந்திரி அவர்கள் பதில் சொல்லமுடியாத குற்றச்சாட்டுகள்—நாங்கள் பதில் சொல்ல வேண்டிய குற்றச்சாட்டுகள் பல இருந்தும், அவகாசம் இல்லாத காரணத்தினால் இதை இத்தோடு நிறுத்தி விட்டு மற்ற விஷயங்களைப் பற்றிக் குறிப்பிட விரும்புகிறேன்.

நம் மாநிலம், அகில இந்தியாவிலுள்ள மற்ற மாநிலங்களை எடுத்துக் கொண்டால், உண்மையில் விடுதலை பெற்ற பிறகு எந்த அளவு முன்னேற்றம் அடைந்திருக்கிறது என்று பார்க்கும்போது, இந்த அளவு முன்னேற்றம் அடைந்த நாடு வேறு இல்லை என்பதை எதிர்க்கட்சி உறுப்பினர்கள் உள்பட யாரும் மறுக்க முடியாது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

கல்வித் துறையில் எடுத்துக்கொண்டால், சமீபத்திலே நடந்த யூனெஸ்கோ மாநாட்டில், ஆசியா கண்டத்திலேயே நம் தமிழகத்தில் செய்திருக்கின்ற அளவுக்கு கல்வி முன்னேற்றம் இன்று வேறு எங்கும் இல்லை என்று சொன்னால் இதற்கு வேறு சான்றுகள் தேவையில்லை.

தொழில் துறையில் எடுத்துக்கொண்டால், நேற்று முன் தினம் கம்பெனி சட்ட காரியதரிசி—மத்திய சர்க்கார் அலுவலர்—வந்திருந்தார். அவர்கள் செய்த ரேடியோ பிரசங்கத்தைப் பலர் கேட்டிருக்கலாம், பத்திரிகைச் செய்திகள் பல வந்திருப்பதையும் கனம் அங்கத்தினர்கள் கவனித்திருப்பார்கள். அதைப் பற்றிச் சிறிது குறிப்பிட விரும்புகிறேன். பதினைந்து மாநிலங்களிலும் சேர்ந்து 5,000 தொழில் ஸ்தாபனங்கள் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள் தென்மண்டலத்தில் மாத்திரம் ஆரம்பிக்கப்பட்டுள்ளது 1,150. நம் தமிழகத்தில் இந்த 1,150-ல் 788 ஆரம்பிக்கப்பட்டுள்ளன. (கனம் ஸ்ரீ ஆர். வெங்கட்டராமன் : இது கம்பெனிகள்.) நம் தமிழகத்தில் மாத்திரம் 788 ஆரம்பிக்கப்பட்டுள்ளதென்றால் பாக்கி இருக்கக்கூடிய கேரளம், கர்னாடகம், ஆந்திரம் இங்கு எல்லாம் சேர்ந்து 362 தான் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன என்று

[4th March 1961 [Sri A. Vedarathnam]

சொன்னால், நம் எண்ணிக்கையில் பாதியைவிடக் குறைவாக பாக்கி 3 மாகாணங்களிலும் இருக்கிறது என்று சொன்னால்—இதை நான் சொல்லவில்லை, மத்திய சர்க்கார் காரியதரிசி சொல்லுகிறார், அவர் ஒரு காங்கிரஸ்காரர் அல்ல—தென் நாடு தேய்கிறது, வட நாடு வாழ்கிறது என்று குற்றச் சாட்டைக் கூறுகின்றவர்கள் கண்களை விழித்து இந்தப் புள்ளி விவரத்தைக் கூர்ந்து கவனிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

**SRI A. V. P. ASAITHAMBI :** இந்த அளவு முன்னேற்றத்திற்கு திராவிட முன்னேற்றக் கழகம் தான் காரணம்.

**THE HON. SRI R. VENKATARAMAN :** கனம் அங்கத்தினர் ஆசைத்தம்பி அவர்கள் சொன்னதை நான் வரவேற்கிறேன். முன்னேற்றம் இருக்கிறது என்று சொன்னால், அந்தப் பெருமையை அவர்கள் அடைவதில் எனக்கு ஆட்சேபணை இல்லை.

**SRI A. VEDARATHNAM :** உலகம் இப்படி இருப்பதே திராவிட முன்னேற்ற கழகத்தினால்தான் என்றுகூட சொல்லிக் கொள்ளலாம். அவர்களால்தான் எல்லாமே நடக்கிறது என்று கூறிக்கொள்ளலாம். அதைப்பற்றி ஆக்ஷேபனை இல்லை. கோழி கூவித்தான் பொழுது விடிகிறதென்று கோழி நினைத்துக் கொண்டதாம். இவர்கள் இருந்தாலும் இல்லையென்றாலும் இந்த முன்னேற்றம் இந்த மாநிலத்தில் ஏற்பட்டுத்தான் தீரும். இதை யாரும் நிறுத்திவிட முடியாது என்று நண்பர் ஆசைத்தம்பி அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன். இவர்கள் முட்டுக்கட்டை போடாமலிருந்தால் இதைக்காட்டிலும் பன்மடங்கு அதிகமான முன்னேற்றம் ஏற்படும் என்று அவர்களுக்குக் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

**SRI A. GOVINDASAMY :** தேர் ஓட முட்டுக்கட்டை அவசியம்.

**SRI A. VEDARATHNAM :** அவசியமான இடத்தில் அவசியம் தான். அவசியமில்லா இடத்தில் முட்டுக்கட்டை போட்டு ஓட்டத்தையே தடை செய்து விடுகிறார்கள் என்பதுதான் விஷயம்.

இந்த வருஷத்திலே புதிதாக வரி போடவில்லை என்பதில் ரொம்பக் குறை சில பேர்களுக்கு. ஆடு நனைகிறது என்று ஓநாய் குந்தி அழுததாம் என்று ஒரு பழமொழி உண்டு. அந்த மாதிரி வரி போடவில்லை என்று ரொம்ப வருத்தம் பல பேர்களுக்கு. அதனால் இது தேர்தல் அறிக்கை என்று சொல்லுகிறார்கள். தேர்தல் வருகின்ற காரணத்தினால் வரி போடாமல் பற்றாக்குறை இருந்தபோதிலும் விட்டு விட்டார்கள் என்று கூறுகிறார்கள். நான் ஒரு விஷயத்தை நினைவூட்டுகிறேன். கடந்த ஆண்டு இந்தச் சபையில் நிதி அமைச்சர் அவர்கள் செய்த பிரசங்கத்தை கூர்ந்து கவனித்திருந்தால் தெரிந்திருக்கும். இனி இந்த மாநிலத்தில் புது வரி கிடையாது என்று கடந்த ஆண்டு குறிப்பிட்ட விஷயத்தை நினைவூட்ட விரும்புகிறேன். வரப்போகிற ஆண்டு தேர்தல் காரணத்தினால் வரி போடாமல் விட்டிருக்கிறார்கள் என்று

யாராவது நினைத்தால் அது தவறு. சென்ற வருஷமே அவர் முன் கூட்டி சொல்லியிருக்கிறார்—அப்போதே ப்ரிடிக்ட் செய்திருக்கிறார். அவர்கள் கூறியதை கனம் அங்கத்தினர்களின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

அந்த வரவு-செலவுத் திட்டம் இப்போது இருக்கிற சபைக்கு கடைசி வரவு-செலவுத் திட்டம் என்று குறிப்பிட்டிருக்கின்ற காரணத்தினால் வரப்போகின்ற சபைக்கு இந்தச் சபை சில யோசனைகள் சொல்லவேண்டுமென்ற முறையில் நான் சில யோசனைகளைக் கூற விரும்புகிறேன். எனது தொகுதி சம்பந்தமாக பல விஷயங்கள் இருந்தபோதிலும் அதற்கு மான்ய விவாதங்கள் வரும்போது சந்தர்ப்பம் கிடைக்கும், அப்போது சொல்லிக் கொள்ளலாம் என்று விட்டுவிடுகிறேன். பதினாறு கோடி ரூபாய் வருமானம் இருந்து, 4 மாநிலங்கள் ஒன்றாக இருந்த காலத்தில் 10 மந்திரிகள் இருந்து நிர்வாகத்தை நடத்தி வந்தார்கள். அதைவிட 6 மடங்கு அதிகமாகி 90 கோடி ஆகி அடுத்த பட்ஜெட்டில் 100 கோடியானாலும் அதிசயமில்லை THE HON. SRI V. RAMAIAH : இப்போதே வந்தாயிற்று . இப்போதே வந்தாயிற்று என்று கனம் மின்சார அமைச்சர் அவர்கள் சொல்லுகிறார்கள். குறைந்த பட்சம் நம்முடைய மாநிலத்தில் இருக்கக்கூடிய 12 ஜில்லாக்களுக்கும் ஒரு ஜில்லாவிற்கு ஒருவர் வீதம் பிரதிநிதித்துவம் இருக்க வேண்டும் என்பது எனது அபிப்பிராயம். The weaver knows where the shoes pinches என்று ஆங்கிலத்தில் சொல்லுவார்கள். அந்த மாதிரி தஞ்சை ஜில்லாவிற்கு, சுதந்திரம் வந்த பிறகு இந்தத் தடவை தான் மந்திரி சபையிலே இடம் கிடைத்தது. இந்த மாதிரி இடம் கிடைக்காத காரணத்தினால் எங்களுக்கு கொஞ்சம் கஷ்டம் நேர்ந்திருக்கிறது என்ற விஷயத்தை இங்கே கூறிக்கொள்ள விரும்புகிறேன். ஒவ்வொரு ஜில்லாவிற்கும் ஒரு மந்திரி என்ற முறையில் இருந்தால் அந்தந்த ஜில்லாவின் நிறைகுறைகளை அறிந்து வேண்டியதைச் செய்ய வாய்ப்பு இருக்கும் என்ற காரணத்தினால் நம் மாகாணத்திற்கு 12 பேர்கள் மந்திரிகள் இருப்பது தவறில்லை, அது ஒரு செலவில்லை என்ற விஷயத்தைக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். அதோடு பார்லிமெண்டரி செக்ரெட்டரிகளும் வேண்டுமென்று சொல்ல விரும்புகிறேன். மத்திய சர்க்காரில் செகண்ட் லைன் ஆப் லீடர்ஷிப் இல்லாததால்தான் இப்போது கஷ்டம் இருக்கிறது என்று சொல்லப்படுகிறது. ஆகையால் அரசியலில் பயிற்சி கொடுப்பதற்கு பார்லிமெண்டரி செக்ரட்டரிகள் அத்தியாவசியம் என்று இங்கே குறிப்பிட விரும்புகிறேன்.

தமிழ் நாட்டில் மூலப்பொருள்கள் கிடையாது, அதனால்தான் பெரும் தொழில்கள் ஆரம்பிக்க முடியவில்லை என்று சொல்லப்படுகிறது. நூற்றைம்பது மைல் நீளத்திற்கு, ஒரு வித முயற்சியும் செலவும் இல்லாமல் 20 லட்சம் டன் உப்பு எங்கள் பகுதியில் தயார் செய்யப்படுகிறது. அதை வைத்து ஒரு கெமிக்கல் இண்டஸ்ட்ரி ஆரம்பித்தால் அது ஒரு பெரிய கனரகத் தொழிலாக அமையும். தங்கம் எடுப்பதில் ஒரு நாள் பூராவும் பாடுபட்டால் 4 அணா

4th March 1961] [Sri A. Vedarathnam]

கிடைக்கும் என்று சொல்லுகிறார்கள். இந்த உப்பைக்கொண்டு பல தங்கத்தைக் காட்டிலும் மதிப்புள்ள ரசாயனப் பொருள்கள் எடுக்க முடியும் என்பது கனம் தொழில் அமைச்சருக்குத் தெரியும். இதிலே கவனம் செலுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

தனுஷ்கோடி துறைமுகம் பயனற்றதாகப் போயிற்று என்று பத்திரிகைகளில் வந்திருந்தது எல்லோருக்கும் தெரியும். அதற்கு வேறு துறைமுகம் கண்டுபிடிக்கவேண்டும் (குறுக்கீடு) தற்காலிக மாக லாயக்கற்றதாக இருக்கிறது. இலங்கையின் வடபாகத்தில் தமிழர்கள் அதிகமாக வாழக்கூடிய பகுதியாகிய யாழ்ப்பாணத் திற்கு வெகு அருகாமையில் இருக்கக்கூடியது கோடிக்கரை. இதை மேஜர் போர்ட்டாகச் செய்வதற்கு வாய்ப்பு இருக்கிறது என்று நிபுணர்கள் கூறியிருக்கிறார்கள். அதைப் பரிசிலனை செய்து இலங்கைக்கும், இந்தியாவுக்கும் போக்குவரத்தை உண்டாக்க கோடிக்கரையில் ஒரு துறைமுகத்தை ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இப்போதுகூட வேதாரண்யத்தில் யாழ்ப் பாணத் தெரு என்று ஒன்றிருக்கிறது. அதில்லாமல் யாழ்ப்பாணக் கோவில் ஒன்றிருக்கிறது. அந்தக் கோவிலுக்கு யாழ்ப்பாணத்தார்களே டிரஸ்டிகளாக இருந்து வருகிறார்கள். அவர்கள் இனத்தைச் சார்ந்தவரே குருக்களாகவும் இருக்கிறார் கள். ஒரு காலத்தில் யாழ்ப்பாணத்தைச் சார்ந்தவர்களுக்கும், இங்குள்ளவர்களுக்கும் கொள்வினை-கொடுப்பினை நடந்துவந்தது. அந்தத் தொடர்பு வெள்ளைக்காரர்கள் ஆட்சியில் ரத்து செய்யப் பட்டது. மீண்டும் அந்தத் தொடர்பை ஏற்படுத்த இந்த அரசாங்கம் தக்க நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

காவேரித் தண்ணீர் அவ்வளவும் பயன்படுத்தப்படுகிறது என்ற ஒரு பெரிய தப்பான எண்ணத்திலே நம்முடைய அரசாங்கம் இருந்து வருகிறது. இன்னும் அதிக அளவுத் தண்ணீர் கடலுக்குள் போய்விழுந்து கொண்டுதான் இருக்கிறது. அப்படி எவ்வளவுத் தண்ணீர் போய் விழுகிறது என்ற கணக்குகளைப் பார்த்தால் பாசனத்திற்குத் தண்ணீர் கொடுக்க முடியும். அதற்கு அரசாங்கம் தீவிரமாக கவனம் செலுத்தி தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும்.

ஒரே ஒரு விஷயத்தைச் சொல்லிக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன். நம்முடைய மாகாணத்தைப் பொருத்தவரையிலே மின்சாரம் முதன்மையான ஸ்தானம் வகிக் கிறது என்று சொல்லப்படுகிறது. ஆனால் என்னுடைய ஜில்லா வைப் பொருத்தவரையில், என்னுடைய ஜில்லாவிற்கு அடுத் துள்ள ஜில்லாவைச் சேர்ந்த நம்முடைய கனம் மின்சார அமைச்சர் அவர்கள் அவர்களுடைய ஜில்லாவிற்குக் காவேரித் தண்ணீர் கொடுக்கவில்லை என்ற காரணத்தினாலோ, என்னவோ அவ்வளவு அதிகம் கவனம் செலுத்தாமல் விடப்பட்டிருக்கிறது. எப்படி சந்திரனில் கிரகணம் பிடித்துக் கொள்கிறதோ, அப்படி மற்ற ஜில்லாக்கள் எல்லாம் வெளிச்சமாக்கப்பட்டு என்னுடைய ஜில்லா மட்டும் இருள் சூழ்ந்து இருக்கிறது. ஆகவே, இந்த இருளை போக்கி வெளிச்சத்தைக் கொடுக்க கனம் மின்சார அமைச்சர்

அவர்கள் எங்கள் ஜில்லாவிற்கும் இந்த வசதியைச் செய்து கொடுக்கும்படி கேட்டுக்கொண்டு, இந்த வாய்ப்பைக் கொடுத்த தலைவர் அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொண்டு, என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

**Sri S. M. ANNAMALAI :** கனம் தலைவர் அவர்களே, 1961-62-ம் ஆண்டு வரவு செலவுத் திட்டத்தை நமது மாநில நிதி அமைச்சர் அவர்கள் இந்தச் சட்ட மன்றத்தின் முன்னால் வைத் திருக்கிறார்கள். இதைப் பார்க்கின்றபோது, வியாபாரிகளுடைய வரவு செலவுத் திட்டம்தான் இது என்று என்றால் சொல்ல முடியும். வரவைச் சிறிது குறைத்துக் காண்பித்து, செலவை அதிகமாகக் காண்பித்தால்தான் ஒரு வியாபாரி தான் விற்பனை வரியைக் குறைத்துக் கொள்ள முடியும். அதைப்போலவே நமது நிதி அமைச்சர் அவர்களும் செலவை அதிகமாக்கி, வரவைக் குறைத்து சென்ற ஆண்டு வரவு செலவைத் திட்டத்தைக் காண்பித்து இருக் கிறார்கள்.

சென்ற ஆண்டு ரெவின்யூ ரெசிட்ஸ் 80.88 கோடி ரூபாய் வருமென்று எதிர்பார்த்தார்கள். ஆனால் கிடைத்தது 89.29 கோடி ரூபாய். இதைப் பார்க்கின்றபோது 11 சதவிகிதம் அவர்கள் போட்ட திட்டத்தைவிட அதிகமாக ரெவின்யூ ரெசிட்ஸ் கிடைத் திருக்கிறது. இதைத்தான் ஏற்கனவே பப்ளிக் அக்கவுண்ட்ஸ் கமிட்டியில் சொல்லியிருக்கிறோம். பப்ளிக் அக்கவுண்ட்ஸ் கமிட்டி யில் கீழ்க்கண்டவாறு அடிக்கடி சொல்லப்பட்டு வந்திருக்கிறது.

"The Committee reiterates its recommendation made in previous years that the Departments should correctly estimate their requirements and work up to them with the closest degree of approximation making a periodical examination of the progress of expenditure during the closing months."

அப்படி சொல்லப்பட்டு இருந்தும் இந்த வரி விகிதம் 11 சதவிகிதம் இந்த வரவு செலவுத் திட்டத்தில் உயர்ந் திருக்கிறது. 3 சதவிகிதம் வேண்டுமானால் அதிகமாகப் போக லாமே ஒழிய, இப்படி 11 சதவிகிதம் என்று அதிகப்படக் கூடாது. சென்ற ஆண்டு 34 லட்சம் துண்டு விழுந்தது. இந்த ஆண்டு துண்டு விழுவதற்குப் பதிலாக 89 கோடி ரூபாய் அதிக மாகக் கிடைத்து. அதில்கூட மொத்தம் ஏறத்தாழ 123 லட்சம் ரூபாய் மீதம் ஏற்பட்டிருக்கிறது. ஆகவே, இந்த வரவு செலவுத் திட்டத்தை நாம் சரியான முறையிலே தீட்டியிருப்போமேயானால், இன்னும் பல திட்டங்களை நாம் உண்மையிலேயே இந்த மாநிலத் திலுள்ள மக்களுக்கு தீட்டியிருக்கலாம். அதைப் போலவேதான் இந்த முதல் ஐந்தாண்டுத் திட்டத்தையும், இரண்டாவது ஐந் தாண்டுத் திட்டத்தைப் பார்க்கின்றபோது டெபிசிட் அட்ஜெஸ்ட் மெண்ட் செய்யப் பட்டிருக்கிறதா என்று பார்த்தால், உண்மை யிலேயே விவசாயத் துறையைப் பொருத்தவரையில் இது இடையவே கிடையாது. அதைப் போலவே நம்முடைய பெரும் கைத்தொழில்களை எடுத்துக் கொண்டாலும், அவைகளிலே ரிஜினல் டிஸ்பாரிடி காட்டப்படுகிறது. இந்த சட்ட மன்றத்திலே கனம் நிதி அமைச்சர் அவர்கள் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட நகலிலே

4th March 1961 ] [Sri S. M. Annamalai]

இந்த ரிஜினல் டிஸ்பாரிடி காட்டப்பட்டிருப்பதாக அழுத்தம் திருத்தமாகச் சொன்னார்கள். அதைப் போலவேதான், சென்னை தேசிய மாநில பொருளாதாரக் கமிட்டியின் அறிக்கையிலும் இந்தப் பாகுபாடு காட்டப்பட்டிருப்பது நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. எனக்கு முன்னால் பேசிய நண்பர் சர்தார் ஏ. வேதரத்னம் அவர்கள் பேசும்போது, மற்ற மாகாணங்களைவிட நம் மாகாணம் எவ்வளவோ முன்னேறி இருக்கிறது என்று சொன்னார்கள். ஆனால் ஸ்ரீ. லோகநாதன் அவர்களைத் தலைவராகக் கொண்டுள்ள இந்த அறிக்கையைப் பார்ப்போமேயானால், பிற மாகணங்களுக்கும் நம்முடைய மாகாணத்திற்குமுள்ள உண்மையான வேறுபாடுகள் நன்கு தெரியும்.

இந்தியத் துணைக் கண்டத்தினுடைய பிற மாகாணங்களின் பர் காபிடா 261-ஆக இருக்கிறது. நம்முடைய மாகாணத்தினுடைய பர் காபிடா 227-ஆகத்தான் இருக்கிறது. இதைப் பார்க்கின்ற போது நிச்சயம் இந்த மாகாணத்தின்மீது ரீஜனல் டிஸ்பாரிடி காட்டப்பட்டு வருகிறது என்பது தெரியும். ஏதோ இந்த மாகாணத்தில் பெரும் கைத்தொழில்களை ஆரம்பிக்கப் போகிறோம் என்று சொல்லிக்கொண்டு வருகிறார்கள். இதைப் பெருமையாகச் சொல்லிக் கொள்ளலாமே தவிர, உண்மையிலே நமக்கு ஒருவித பிரயோசனமும் கிடையாது. ஆகவே இவைகளையெல்லாம் பார்க்கின்றபோது, எல்லாப் பெரும் கைத்தொழில்களும் நம் மாகாணத்திற்கு இல்லை, இந்தியத் துணைக் கண்டத்திலுள்ள பிற மாகாணங்களுக்குத்தான் என்று சொல்ல முடியும். இதைக் குறித்து பிளானிங் கமிஷனிலேகூட பேசப்பட்டதாகக் கேள்விப்பட்டேன். அப்போது இது குறித்து முதன் முதலில் ஸ்ரீ. சாவான் அவர்கள்தான் பேசியதாகத் தெரிகிறது. இதைத் தொடர்ந்து நமது கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் பேசும்போது, பிரதம மந்திரி அவர்கள் எழுந்திருந்து, "இந்தக் கேள்வியை நீங்கள் எதை வைத்துக் கொண்டு கேட்கிறீர்கள்?" என்று கேட்க, அதைப்பற்றி பிரதம மந்திரியை எதிர்த்துப் பேச முடியாமல், நமது கைத்தொழில் அமைச்சர் உட்கார்ந்து விட்டார்கள் என்று பத்திரிகையிலே பார்த்தோம். உண்மையிலேயே நம்முடைய மாகாண தொழில் அமைச்சர் அவர்கள் நம்முடைய மாகாணம் ஒரு பிற்பட்ட மாகாணம், மற்ற மாகாணங்களைவிட இந்த மாகாணத்தில் பெரும் கைத்தொழில்கள் இல்லையென்று எடுத்துரைக்கூட முற்பட்டார் என்பதை இது விளக்குகிறது. ஆனால் அந்த இடத்தில் சென்று அதாவது டெல்லிக்குச் சென்று கேட்கக்கூடிய தைரியம், புள்ளி விவரங்களோடு விவாதிக்கக்கூடிய தைரியம் அவர்களிடத்திலே இல்லாத காரணத்தினால்தான், நம்முடைய மாகாணத்திற்கு பெரும் தொழில்கள் ஏற்படுத்த முடியாத ஒரு நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

அதைப்போலவே, இந்த சட்ட மன்றத்தின் முன்னால் வைத்திருக்கக்கூடிய வரவு செலவுத் திட்டத்திலே "வரி இல்லை, வரி இல்லை" என்று சொல்லப்படுகிறது. ஆனால் மத்திய அரசாங்கத்திலே மறைமுகமான வரி ஏறத்தாழ 57 கோடி ரூபாய்க்கு போடப்பட்டிருக்கிறது. அதைப்போலவே நேரடியான வரியும் ஏழைகளை பாதிக்கக்கூடிய வகையில் 3 கோடி ரூபாய்க்கு போட்டிருக்கிறார்கள். நம்முடைய பட்ஜெட்டிலே வேண்டுமானால் வரியில்லை என்று

சொல்லலாமே தவிர, மக்களுக்கு வரியே போடவில்லை என்று சொல்ல முடியாது. 6 நயா பைசா விற்றுக்கொண்டிருந்த தீப் பெட்டி இப்போது 7 நயா பைசாவாக விற்கிறது. அதைப் போலவே, காப்பி, டீ போன்ற பல பொருள்களை எடுத்துக் கொண்டால், சாதாரண பாமர மக்கள் அன்றாடம் உபயோகிக்கக் கூடிய பொருள்களின் மீதெல்லாம் வரிகளைப் போட்டிருக்கிறார்கள், இதை மக்கள் உணர்ந்து கொண்டிருக்கிறார்கள்.

இப்போது வரி போடவில்லை என்று சொல்லலாம். அதற்குக் காரணம் இப்படி பட்ஜெட்டிலே இப்போது 235 லட்ச ரூபாய்க்கு துண்டு விழுந்திருக்கிறது என்று குறைத்துக் காண்பித்தால்தான், மத்திய அரசாங்கம் தரக்கூடிய மான்யத் தொகை நிறுத்தி வைக்கப்பட்டிருப்பது, தொடர்ந்து கிடைக்கும் என்பதற்காகத் தான். இப்படி கொடுக்கப்பட வேண்டியதை மத்திய சர்க்கார் நிறுத்தி வைத்திருப்பது இந்த மாகாணத்தைப் பொருத்த மட்டிலுமா அல்லது மற்ற மாகாணங்களிலுமா என்பதை கனம் அமைச்சர் அவர்கள் விளக்க வேண்டும்.

THE HON. SRI R. VENKATARAMAN : இது சம்பந்தப்பட்ட மட்டில் எல்லா ராஜ்யங்களுக்கும் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது.

SRI S. M. ANNAMALAI : அப்படி மத்திய அரசாங்கம் நிறுத்தி வைத்துள்ள பணத்தை மேலும் தொடர்ந்து பெறவேண்டுமென்பதற்காகத்தான் இந்த வரவு செலவுத் திட்டம் இப்படித் தயாரிக்கப்பட்டிருக்கிறது என்பதை சொல்ல ஆசைப்படுகிறேன்.

அதைப்போலவே, 11-வது வகுப்பு வரையிலே இலவசக் கல்வி வசதியை ஏற்படுத்தியிருக்கிறோம் என்று இந்த சட்ட மன்றத்தில் பெருமையாகப் பேசப்பட்டு வந்தது. ஆனால் ஒதுக்கப்பட்டுள்ள 58 லட்ச ரூபாயைப் பார்க்கும்போது, உண்மையிலேயே இந்த 58 லட்ச ரூபாயை வைத்துக்கொண்டு எத்தனை பேர்களுக்கு இலவசக் கல்வி அளிக்கப் போகிறார்கள் என்று பார்க்கும்போது, உண்மையான அடிப்படையில் இந்தத் தொகை ஒதுக்கப்படவில்லை என்றுதான் சொல்லவேண்டும். ஏதோ கனம் முதன் மந்திரி அவர்கள் சொல்லிவிட்டார்களே என்பதற்காகத்தான், இதை இந்த வரவு செலவுத் திட்டத்திலே புகுத்தியிருக்கிறார்கள் என்று நினைக்க வேண்டியிருக்கிறது. இது இந்தக் குறுகிய மனப்பான்மையுடன் செய்யப்பட்டதே தவிர, உண்மையிலேயே எல்லோருக்கும் 11-வது வரை இலவசக் கல்வி கொடுக்கவேண்டுமென்ற எண்ணத்துடன் செய்யப்பட்டதாகத் தெரியவில்லை. ஏற்கனவேயே மாதம் ஒன்றுக்கு 100 ரூபாய்க்குக் குறைவாக வருமானம் பெறுபவர்களுக்கு இலவச
10-30 a.m. ஸ்காலர்ஷிப் கொடுக்கப்பட்டு வருகிறது. ரூ. 100 என்றால் சாதாரணமாக ஒரு குமஸ்தாகூட தற்காலத்தில் ரூ. 100 பெற்றுக்கொண்டு வருகிறார். அவருக்கு வருஷம் ஒன்றுக்கு ரூ. 1,200 வருமானம் வருகிறது. ரூ. 1,200 வருமானத்தை வைத்துக்கொண்டு அவர்களுடைய பிள்ளைக்கு இலவச கல்வி உண்மையிலேயே பெற முடியாது. ஆகையினால் ரூ. 100 என்று இருப்பதை ரூ. 200 என்று உயர்த்தி அந்த அடிப்படையிலே இலவசக் கல்வி அளிக்க

4th March 1961] [Sri S. M. Annamalai]
முன்வரவேண்டும். ஆகவே இந்த ரூ. 53 லட்சத்தை மேலும் உயர்த்துவதற்கு சர்க்கார் முன்வரவேண்டும் என்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

அதுபோல நிர்வாகத் துறையிலே 50.8 சதவிகிதம் செலவிடப் படுகிறது என்று சொல்லப்படுகிறது. நம் மாநிலத்தில் வருவாயில் பாதிக்குமேல் நிர்வாகத் துறைக்காக செலவழிக்கப்படுகிறது. அதே சமயத்தில் நிர்வாகத்தை சரிவர இயங்குவதற்கு வேண்டிய அளவில் வைக்கவேண்டும். நம்முடைய மாநிலத்தில் ஒரு பழக்கம் இருந்துகொண்டு வருகிறது. சென்னையில் ஒரு அமைச்சர்கூட இல்லாமல் வெளியில் சுற்றுப்பிரயாணம் செய்யப்போய் விடுகிறார்கள். இந்தப் பழக்கத்தை நாம் எந்த மாநிலத்திலும் உண்மையாக பார்க்க முடியாது. தலைநகரத்தில் யாராவது ஒரு அமைச்சர் இருந்தாகவேண்டும். இருந்தால்தான் மக்களுடைய குறைகளை கேட்டு அறிய முடியும். ஒரு பத்திரிகையில் பார்த்தால் 'ஊரில் ஒரே ஒரு மந்திரி', இன்னொரு பத்திரிகையில் பார்த்தால் 'ஒரு மந்திரிகூட இல்லை' என்று போடப்பட்டிருக்கிறது. மக்கள் என்ன நினைப்பார்கள் இந்த அமைச்சர் அவையைப் பார்த்து? நிர்வாகத் துறை மேலும் மேலும் ஊழலாக இருந்து வருகிற காலத்தில் அமைச்சர்கள் சிலராவது நகரத்திலிருந்து நிர்வாகத் துறையை கவனிக்கவேண்டும். இல்லாவிட்டால் மேலும் நிர்வாகம் சீரழிந்து கொண்டுதான் வரும்.

சட்டசபைக்கு முன்பு சமர்ப்பிக்கப்பட்டிருக்கும் வரவு செலவு திட்டத்தின் கொள்கை என்னவென்று சொல்லவேண்டும். சென்ற ஆண்டு சொன்ன கொள்கையானது இந்த ஆண்டு கைவிடப் பட்டிருக்கிறதே? ஒன்று மட்டும் நினைவுபடுத்த விரும்புகிறேன். ஏதோ நமது கனம் நிதி அமைச்சர் அவர்கள் மக்கள் சுழலில் சிக்கிக்கொண்டு இருந்தார்கள், சுழலில் சிக்கிக்கொண்டு இருந்த வர்களை தப்பிவித்துவிடப் போகிறோம், விலைவாசியை கட்டுப்படுத்த போகிறோம் என்று சொன்னார்களே? அந்தக் கொள்கை என்ன ஆயிற்று? ஏன் அந்தக் கொள்கையை கைவிட்டுவிட்டீர்கள்? இந்த வரவு செலவு திட்டத்தில் அதைப்பற்றி குறிப்பிடப்பட வில்லை. விலைவாசி மேலும் மேலும் ஏறிக்கொண்டு போகிறது. விலை வாசியைக் குறித்து உங்களுடைய அபிப்பிராயம் என்ன? சேலம் இரும்புக் கனியை தோண்டி எடுக்கவேண்டுமென்றால், அதை பரிட்சார்த்தமாகப் பார்த்து அதற்குப் பிறகு செய்யப்படும் என்று சொல்லுகிறார்கள். ரயில்வே பாதைகள் சம்பந்தப்பட்டவரை 'இப்பொழுது மத்திய சர்க்கார் பட்ஜெட் சமர்ப்பித்திருக்கிறார்கள். அதைப் பார்க்கிறபொழுது நம்பிக்கை ஏற்படுகிறது, என்று சொல்லுகிறார்கள். அணுசக்தி மின்சார நிலையம் பற்றிக் கேட்டால் 'நாங்கள் நம்பிக்கொண்டிருக்கிறோம்' யோசித்துக்கொண்டிருக் கிறோம்' என்று சொல்லுகிறார்கள். அதேபோல கனரக மின்சாரக் கருவிகளை உற்பத்தி செய்யும் தொழிற்சாலை ஏற்படுத்துவது பற்றி 'சர்வே' செய்யப்பட்டிருக்கிறது, பரிசீலனை செய்துகொண்டிருக் கிறோம்' என்று சொல்லப்படுகிறது. எதை எடுத்தாலும் 'நம்பிக் கொண்டிருக்கிறோம். முயற்சி செய்துகொண்டிருக்கிறோம்; பட் ஜெட்டை பார்த்துக்கொண்டிருக்கிறோம்' என்று சொல்லுவது தானா கொள்கை? சட்டசபையில் சமர்ப்பிக்கப்பட்டுள்ள வரவு

செல்வு திட்டத்தில் இதுதானா கொள்கை? இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு கூட்டுறவு பண்ணையைப் பற்றி வற்புறுத்திச் சொல்லி வந்தார்கள். இந்த மாநிலம் பூராவும் அதைப் பற்றி பெரிய புரட்சியாக இருந்துகொண்டிருந்தது. இப்பொழுது அந்த கூட்டுறவுப் பண்ணை முறை எங்கே போயிற்று? அதைப் பற்றி கனம் அமைச்சர் அவர்கள் சட்ட மன்றத்தில் ஒன்றும் பேசவில்லை. அது பற்றி கொள்கை என்ன? எந்த அளவிற்கு திட்டம் போட்டிருக்கிறார்கள்? எந்த அளவிற்கு நிலங்களை கூட்டுறவுப் பண்ணையில் கொண்டுவரப்போகிறார்கள்? கூட்டுறவுப்பண்ணை முறை நடக்கப் போகிறதா? அல்லது ஏதோ ஒரு புரட்சி நடந்திருக்கிறது. அதற்கு பலத்த விரோதம் இருக்கிறது. இந்த மாநிலத்தில் அது வராது. கூட்டுறவுப் பண்ணையை நாங்கள் கைவிடப் போகிறோம் என்று சொல்லுகிறார்களா? அதுபற்றி கொள்கை விளக்கம் இந்த சட்டமன்றத்தில் தேவை. அதுபோல கனரக மின்சாரக் கருவிகள் செய்யக்கூடிய தொழிற்சாலை இந்த மாநிலத்திற்கு தேவை. பெரிய தொழிற்சாலைகள் ஆரம்பித்தால் தான் உண்மையிலேயே இந்த மாநிலத்தில் 'பெர்காபிடா இன்கம்' அதிகரிக்கும். கனரக மின்சாரக் கருவிகளை உற்பத்தி செய்யும் தொழிற்சாலையை ஏற்படுத்தக்கூடிய வாய்ப்பு அனைத்தும் உண்மையிலேயே நம்முடைய மாநிலத்தில்; அதிலும் வட ஆற்காடு மாவட்டத்தில் இருக்கிறது என்று நான் கேள்விப்பட்டேன். அதை மேலும் வற்புறுத்திப் பெறவேண்டும். அதுபோல ரயில்வே பாதைகள் பற்றி பாராளுமன்றத்தில் நம்முடைய உறுப்பினர்கள் கட்சி பேதமின்றி பேசியிருக்கிறார்கள். ரயில்வே பாதைகள் மேலும் நம் மாநிலத்தில் அமைப்பதற்கு வேண்டிய முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும். அணுசக்தியை உற்பத்தி செய்யும் தொழிற்சாலையையும் நம் மாநிலத்தில் ஆரம்பிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

(மணி அடிக்கப்பட்டது)

* SRI A. Y. S. PARISUTHA NADAR : கனம் அவைத் தலைவர் அவர்களே, மதிப்பிற்குரிய நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்த வரவு செலவு திட்டத்தை முழு மனதோடு ஆதரித்து சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். கல்வி, விவசாயம், சுகாதாரம், கைத்தொழில்கள், இன்னும் பல துறைகளிலே நமது மகாணமானது முன்னேற்றம் அடைந்து கொண்டிருப்பதைப் பற்றி நாம் எல்லோருமே பெருமைப்படக்கூடிய ஒரு நிலையில் இருக்கிறோம். அதிலும் முக்கியமாக தஞ்சை ஜில்லாவில் விவசாயிகளுக்கு அநேக உதவிகள் செய்தபோதிலும்கூட, பயிர் பார்வைக்கு நன்றாக இருக்கிறது, ஆனால் நெல் கிடைப்பதோ கடைசியிலே குறைவாக இருக்கிறது என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். கவர்னர்பெருமான் அவர்களும் முதல் அமைச்சர் அவர்களும் தஞ்சை ஜில்லாவில் சுற்றுப்பிரயாணம் செய்தபொழுது மழையினால் பாதிக்கப்பட்ட பகுதிகளிலே தானியங்கள் கிடைப்பது குறைந்து போனாலும்கூட, மற்ற பிரதேசங்களில் அதிகப்படியான தானியங்கள் கிடைத்து உற்பத்தி பெருகியிருக்கிறது என்று சொன்னார்கள். கடைசி முறையாக நாம் பார்க்கிறபொழுது அவ்விதமாக இல்லை. எதிர்பார்த்த அளவிற்கு ரொம்பவும் தானியங்கள்

4th March 1961] [Sri A. Y. S. Parisutha Nadar]

குறைந்து விட்டன. இதற்கு முக்கியமான காரணங்களை கண்டு பிடிக்க முயற்சி செய்த பெரிய நிபுணர்களாக இருக்கக்கூடியவர்கள் கூட அதிலே ஏமாந்துபோய் விடுகிறார்கள். அப்படியிருக்கும் பொழுது சாதாரண விவசாயிகள் அதை எப்படி ஆராய்ச்சி செய்ய முடியும் என்பதை உங்களுக்குத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அந்த நிலைமையை உண்டாக்காமல் நல்ல முறையிலே தானியங்களின் உற்பத்தியை பெருக்குவதற்கு வேண்டிய வசதிகளை சர்க்கார் பொது மக்களுக்கு செய்துகொடுக்கும்படியாக கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, நமது சென்னை ராஜ்யத்தில் மற்ற மகாணங்களைவிட பெரிய சாலைகளெல்லாம் நல்ல முறையில் வைக்கப்பட்டிப்பதைக் குறித்து நாம் பெருமைப்படுகிறோம். ஆனால் கிராமங்களிலுள்ள சிறு ரோடுகளெல்லாம் நல்ல முறையில் வைக்கப்படவில்லை. ரொம்பவும் பழுதடைந்திருக்கிறது. தஞ்சை ஜில்லாவிலே கிழக்கு மேற்கிலே போகக்கூடிய ரோடுகளெல்லாம் பெரும்பாலும் 90 சதவிகிதம் ஆற்றங்கரையிலே இருந்துகொண்டிருக்கிறது. பி. டபிள்யூ. டி-யைக் கேட்டால் நீர்ப்பாசன திட்டங்களைச் கவனிப்பதுதான் எங்கள் வேலை, ரோடுகளை சரிப்படுத்துவதில் அவர்களுக்கு பங்கு இல்லை என்று சொல்லுகிறார்கள். ஜில்லா போர்டாரைக் கேட்டால் ஏதோ சிறிய தொகை பி. டபிள்யூ. டிபார்ட்மெண்டு கொடுக்கிறது. அது ஆயிரத்தில் ஒரு பங்குகூட போதாது என்று சொல்லுகிறார்கள். ஆகையினால் விவசாயப் பொது மக்களுக்கு தானியங்களை கிராமங்களிலிருந்து நகர்ப்புறங்களுக்குக் கொண்டுவந்து விற்பதற்கு சாலை வசதி இல்லாமல் இருப்பதினால் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். அதனால் விலைகூட மூட்டைக்கு ஒரு ரூபாய், இரண்டு ரூபாய் குறைவாகக் கிடைக்கக்கூடிய நிலைமை இருக்கிறது. அதனால் சிறு விவசாயிகளுக்கு மிகவும் நஷ்டம் ஏற்படுகிறது. ஆகவே, இந்த சாலைகளை உடனடியாக 'ஹைவேஸ் டிபார்ட்மெண்டிடம்' ஒப்படைத்து அவர்கள் இந்த ரோடுகளை செப்பனிட்டு நல்ல முறையில் பராமரித்து வைத்துக் கொள்ளவேண்டும் என்ற என்னுடைய கருத்தை தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக மானுங்கோரை, திருச்சோற்றுத்துறை என்று இரண்டு கிராமங்கள் என்னுடைய தொகுதியில் இருக்கின்றன. இந்த இரண்டு பஞ்சாயத்திற்கும் நடுவிலே உள்ள ஒரு சிறிய பாலம் 10,000 அல்லது 12,000 ரூபாய்க்குள் கட்டி முடிக்கலாம். லோகல் டெவலப்மெண்ட் ஸ்கீமில் கட்டி முடிக்கலாம் என்றால் அங்குள்ள மக்கள் மிகவும் ஏழைகள். ரூ. 2,000 கூட மக்களிடமிருந்து வசூல் செய்ய முடியாத ஒரு கிராமமாக இருக்கிறது அது. ஆகையினால் இதை 'ஹைவேஸ் டிபார்ட்மெண்டு' எடுத்துக்கொண்டு முக்கியமாக சென்ட்ரல் ரோடு பண்டு என்று இருக்கிறதே அந்தத் தொகையிலிருந்தாவது இதைச் செய்து முடிக்கவேண்டுமென்று அரசாங்கத்தை தாழ்மையுடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக மேட்டூர் ஹைட்ரோ எலக்டிரிக் டன்னல் ஸ்கீம் என்பதைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். மின் சாரத்துறையில் அதிகமாக அபிவிருத்தி ஏற்பட்டிருப்பது பற்றி

சந்தோஷப்படுகிறேன். அதுபற்றி ஒரு சிறிய விளக்கம் தெரிந்துகொள்ள ஆசைப்படுகிறேன். 'ஆப் ஸீஸனில்', அதாவது நீர்ப்பாசனம் இல்லாமல் கோடை காலமாக இருக்கும்பொழுது அந்த 'டர்பைன்கள்' எல்லாம் வேலை செய்யாவிட்டால், ஆற்றில் இருந்து வரக்கூடிய தண்ணீர் நின்று விடும். தஞ்சை நகரிலும். தஞ்சைக்கு கீழ்ப்பகுதியில் உள்ள நகரத்திலும்கூட குடி தண்ணீர் வசதி இல்லாமல் போய்விடுகிறது. ஆற்றிலே கீழ் ஊற்று இல்லாத காரணத்தினால் 'சர்பேஸ் வாடரைக்' கொண்டுதான் குடி தண்ணீர் வசதி ஏற்படுத்த முடியும்.

அடுத்தபடியாக, கோடைகாலத்திலே, மேட்டூர் தேக்கத்திலே தண்ணீரை அடைத்து விடுவார்களேயானால், 5 அல்லது 6 மாதங்களுக்கு பல நகரங்களில் குடி தண்ணீர் வசதி பாதிக்கப்படுமென்று தெரிவித்துக் கொள்கிறேன். தஞ்சை நகரில் தண்ணீர் விஸ்தரிப்புத் திட்டம் நடந்துகொண்டு வருகிறது. இன்னும் 2 அல்லது 3 லட்சம் செலவு செய்தால், மேலும் இடித்துப் புதிதாகக் கட்டுவதற்குப் பதிலாக, கொள்ளிடத்திலிருந்து தண்ணீர் கொண்டுவரும் வாய்ப்பை ஏற்படுத்தலாமென்று கேட்டுக்கொள்கிறேன்.

தூத்துக்குடித் துறைமுகத்தை அபிவிருத்தி செய்வதற்கு திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது. தஞ்சை ஜில்லாவிலே நாகப்பட்டினத்திலே ஒரு துறைமுகம் இருக்கிறது. நான் ஒன்றும் பெரிய திட்டத்தைச் சொல்லவில்லை. கப்பலிலிருந்து பிரயாணிகள் வந்தால் ஒரு நாளோ, இரண்டு நாட்களோ தங்குவதற்குக் கூட வசதியில்லாமல் இருக்கிறது. ஆகவே அங்கே ஒரு ரெஸ்ட் ஹவுஸ் கட்டி இந்தப் பிரயாணிகளுக்கு வேண்டிய வசதி செய்து கொடுத்தால் நலமாக இருக்குமென்று தெரிவித்துக்கொள்கிறேன். இப்பொழுது அவர்கள் தங்குவதற்கு நிழல் வசதி கூட இல்லை. பாத்ரூம் வசதியும் இல்லை. ஆகவே, ஒரு ரெஸ்ட் ஹவுஸ் கட்டிக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

கனம் வேதரத்னம் பிள்ளை அவர்கள் சொன்ன கருத்தை நானும் சொல்லவேண்டுமென்று நினைக்கிறேன். மின்சார சக்தி நமக்கு எவ்வளவோ குறைவாக இருந்துகொண்டிருக்கிறது. மற்ற ஜில்லாக்களைவிட தஞ்சை ஜில்லாவிலே மிகவும் கஷ்டமாக இருக்கிறது. தஞ்சை நகரைப் பொறுத்த வரையில் 500 அல்லது 600 சர்வீஸ் கனெக்ஷன்கள் கொடுக்காமல் இருப்பதனால் மக்கள் கஷ்டப்படுகிறார்கள். அதிகப்படியாக மின்சார சக்தி கொடுக்க வேண்டும், மற்றும் விவசாயத்திற்கு வேண்டிய வசதி செய்து கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, எனக்கு இந்த வாய்ப்பை கொடுத்த தலைவருக்கு என்னுடைய வணக்கத்தை தெரிவித்துக்கொள்கிறேன்.

* SRI T. KARIA GOUNDER: கனம் தற்காலிகத் தலைவர் அவர்களே, கனம் நிதி அமைச்சர் அவர்கள் இந்த ஆண்டு தமிழ் நாட்டின் வரவு செலவுத் திட்டத்தை சமர்ப்பித்ததற்காக எனது நன்றி அறிதலான வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன். தமிழ் நாடு என்று பெயரிட்ட பிறகு, இங்கே உள்ள நண்பர்கள்

**4th March 1961]** [Sri T. Karia Gounder]

இந்த வரவு செலவுத் திட்டத்தை வரவேற்றுப் பேசுவார்கள் என்று எதிர்பார்த்தேன். ஆனல் எனது நண்பர் கோவிந்தசாமி அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டுமென்று சொல்லுகிறார்கள். தங்களுக்குத் தேவையானதைக் கொடுத்துவிட்டால், இன்னென்று வேண்டுமென்று சொல்லுவார்கள். ஆகையால் இதற்கு ஒரு முடிவே இருக்காது என்றுதான் நான் எண்ணுகிறேன். கனம் நிதி அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கும் இந்த வரவு செலவுத் திட்டத்தை ஆளும் கட்சியிலே இருக்கிற அங்கத்தினர்கள் மட்டும் போற்றவில்லை. இந்த மாகாணத்திலுள்ளவர்களும், வெளி மாகாணங்களிலுள்ளவர்களும் சென்னையைப் பாருங்கள் என்று சொல்லுகிற நிலை இருக்கும்பொழுது, இவர்கள் கண்ணுக்கு மட்டும் ஏன் இப்படித் தோன்றுகிறது என்பது ஆச்சரியமாக இருக்கிறது. இதை ஒரு தேர்தல் பிரசார வரவு செலவுத் திட்டம் என்று சொல்லுகிறார்கள். தேர்தல் பிரசாரம் என்று சொல்லும்பொழுது, எங்களுடைய நோக்கத்தை எடுத்துச் சொல்ல வேண்டியது ஆளும் கட்சியிலுள்ள எங்களுடைய முழுப் பொறுப்பு என்று சர்தார்ஜி சொன்னர்கள். என்னுடைய நண்பர்கள் திட்டங்கள் இல்லை யென்று சொல்லுகிறார்கள். இன்னென்ன திட்டங்களைச் செய்யப் போகிறோம், இன்னென்ன திட்டங்களை வகுத்திருக்கிறோம் என்று அந்தத் திட்டங்களை வகுத்தபின்னர் நாங்கள் வரவு செலவுத் திட்டத்தை தயாரிக்கிறோமே ஒழிய வேறு ஒன்றும் இல்லை. ஆகை யினல் நண்பர்கள் இந்தமாதிரியான ஒரு எண்ணத்தை விட்டுவிட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இம்மாதிரி எல்லாம் சொல்லி பொது மக்களுடைய மனத்தைக் குழப்பி சர்க்கார் மேலே ஒரு கெட்ட எண்ணத்தை உண்டாக்காமல் இருக்கவேண்டும் என்பதுதான் என்னுடைய விருப்பம். அசெம்பிளியில் அதாவது Within the four walls of the Assembly என்னவேண்டுமானலும் பேசலாமென்று இருந்தாலும், வெளியிலே ஆளுகிற கட்சியை அவ தூராகப் பேசாமல் இருக்கவேண்டுமென்பது என்னுடைய விருப்பம். ஏதோ கனம் முதலமைச்சர் அவர்கள் பொது மேடையிலே சொல்லிவிட்டார்கள், அதனல் எல்லோருக்கும் இலவசக் கல்வி கொடுப்பதாக சுருக்க மாகச் சொல்லியிருப்பதாகச் சொன்னர்கள். கல்வித் திட்டத்தைப் பொறுத்தவரையில் எங்கே பார்த்தாலும் சென்னை யைப் பாருங்கள் என்று சொல்லுகிறார்கள். நாங்கள் மத்தியான உணவுத் திட்டம் கொண்டுவந்து, ஏழைப் பிள்ளைகளுக்குச் சாப்பாடு போடுகிறோமென்றால், பள்ளிக்கூடத்தை சாவடிச் சத்திர மாக ஆக்கிவிட்டார்கள் என்று சொல்லுகிறார்கள். இதைப்பற்றி பொதுமக்கள் வருகிற தேர்தலிலே முடிவு சொல்லுவார்கள். பொருளாதாரத் துறையிலே பின்தங்கிய மக்களுக்கு கல்விச் சலுகை அளிக்க வேண்டுமென்று அரசாங்கம் திட்டம் வகுத் திருக்கிறது. உயர்ந்த ஜாதி, தாழ்ந்த ஜாதி, முற்போக்கு அடைந்த ஜாதி என்றெல்லாம் ஜாதிப் பாகுபாடு இல்லாமல் இருக்க வேண்டுமென்று அந்த அடிப்படையில் செய்திருக்கிறார்கள். ஆனல் நேற்று பேசிய எனது மதிப்பிற்குரிய சத்தியவாணிமுத்து அவர்கள் இந்த ஜாதி வகுப்பு இருக்கவேண்டுமென்று சொன்னர் கள். மத்தியச் சலுகை பெறுவதற்கு கான்ஸ்டிடியூஷனைத் திருத்து வதற்கு நாங்கள் குறுக்கே நிற்கமாட்டோம். இந்த சர்க்காரிலே

ஜாதி வேற்றுமை இருக்கவேண்டாம், எல்லோருக்கும் இலவசக் கல்வி அளிக்க வேண்டுமென்று எண்ணுகிற இந்த நேரத்திலே தேர்தல் பிரசாரத்திற்காக என்ன வேண்டுமானுலும் எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் பேசுவார்கள் போல் இருக்கிறது. நாங்கள் முந்திக்கொண்டு விட்டதனுல், அவர்கள் பொருமைப்படுகிருர்கள். இதிலேகூட குற்றம் கண்டுபிடிக்கிருர்கள். கட்டாயக் கல்வி இந்த நாட்டிலே நடைபெறுமாவென்று எதிர்க் கட்சியிலே உள்ளவர்களுக்குச் சந்தேகம் இருக்கிறது. கிராமங் களுக்குச் சென்று பார்த்தால், அங்கே பிள்ளைகளைச் சேர்ப்பதற்கு கியூ வரிசையில் நிற்கவேண்டியிருக்கிறது. உலக சரித்திரத்தி லேயே புகழ் பெறுகிற மாதிரி இந்த வரவு செலவுத் திட்டத்தில் சுமார் 90 கோடி ரூபாயில் 20 கோடி ரூபாய் சர்க்கார் இந்தத் திட்டத்திற்காக செலவு செய்கிருர்கள். இதை எப்படி குற்றம் சொல்ல முடியுமென்று கேட்கிறேன்.

விவசாயத் துறையிலே நாம் நல்ல முன்னேற்றம் கண்டிருக் கிருேம். உணவுத் துறையில் முன்னேற்றம் கண்டிருக்கிருேம். மின் சார சக்தியின் காரணமாக நாம் முன்னேறியிருக்கிருேம். ஆனுல் விலைவாசிகள் எல்லாம் உயர்ந்துவிட்டன என்று பேசுகிருர்கள். விலைவாசிகள் உயர்ந்திருக்கலாம். ஆனுல் உற்பத்தி பெருகுகிற விதத்தைப்பற்றி ஒருவரும் சிந்திக்கமாட்டேன் என்கிருர்கள். நாங்கள் கரும்பு சாகுபடி செய்கிருேம். எங்கள் பகுதியிலே சர்க்கரை மில் வைத்திருக்கிருர்கள். எங்களுடைய சர்க்கரை மில்லுக்கு 7,000 ஏக்கர் சாகுபடி இருந்தால் போதுமென்று கணக் கிட்டிருக்கிருர்கள். எங்கள் பகுதியிலே 20,000 ஏக்கருக்கு மேல் கரும்பு பயிரிடுகிருர்கள். இப்படி கரும்பு பயிரிடுகிற நேரத்திலே வெளி நாட்டுக்கு ஏற்றுமதி செய்யக்கூடாது என்று தடை விதித் திருக்கிருர்கள். சென்ற வருஷம் வரையில் கொழும்பிற்கு ஏற்றுமதி செய்து வந்தோம். இன்றைக்கு மூட்டை ஒன்றுக்கு 20 முதல் 23 வரையிலும் வெல்லம் விற்கிறது. கொழும்பிலே 75 ரூபாய்க்கு அந்த வெல்லம் விற்கப்படுகிறது. நமது மாகாண சர்க்கார் மத்திய சர்க்காருடன் பேசி இதற்கு ஏதாகிலும் ஒரு வழி வகை செய்தால்தான் விவசாயிகளாகிய நாங்கள் முன்னேற்றப் பாதையில் செல்ல முடியுமென்பதை அரசாங்கத்தின் கவனத் திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

பாலாற்றைப்பற்றிச் சொல்லும்பொழுது சென்ற ஆண்டிலே நமது நிதி அமைச்சர் அது சர்க்கார் பரிசீலனையில் இருக்கிறது என்று குறிப்பிட்டார். இரண்டு நாட்களுக்கு முன்பு மத்திய சர்க்காருக்கு நமது நிதி அமைச்சர் போகப்போகிருர் என்ற ஒரு செய்தி வெளி வந்தது. அதை மறந்து விட்டார்களோ என்னவோ. ஆகவே, பாலாற்றுக்கு ஒரு வழிவகை செய்ய வேண்டுமென்று அமைச்சரவையைக் கேட்டுக்கொள்கிறேன். மின்சாரத்திற்கு முதல் இடம் கொடுத்திருப்பதுபற்றி மெத்த நன்றி. இந்த மின் சாரத்தில் மினிமம் சார்ஜ் கட்ட வேண்டியிருப்பதாலே, விவசாயி களுக்கு கஷ்டம் நிறைய இருக்கிறது. எங்கள் ஜில்லாவிலே

4th March 1961] [Sri T. Karia Gounder]

மின்சாரம் இல்லாத இடமே இல்லை. அம்மாதிரி செய்திருப்பதற்காக சர்க்காருக்கு நன்றி. அதே நேரத்தில், மின்சாரம் மாகாணம் பூராவும் பரவினால்தான் உணவு உற்பத்தி பெருகமுடியும்.

குடும்பக் கட்டுப்பாடு சம்பந்தமாக, சர்க்கார் கொள்கைக்கு எதிர்க்கட்சி நண்பர்கள் ஆதரவு கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். நண்பர்கள் சிரிக்கிறார்கள். அவர்கள் வேறுவிதமாக எடுத்துக்கொள்ளாமல், அவர்களும் இந்த திட்டம் நாட்டுக்கு நல்லது என்ற முறையில் அவர்களும் சர்க்காரோடு சேர்ந்து ஒத்துழைக்க வேண்டும். குடும்பக் கட்டுப்பாடு செய்ய வேண்டும் என்று சொன்னால், ரஷ்யாவில் அது இல்லை என்கிறார்கள். ரஷ்யாவில் ஜனத்தொகை குறைவு; ஆகையால், அங்கே சர்க்கார் அதிகக் குழந்தைகள் பிறப்பதற்கு சன்மானங்கள் கொடுக்கிறார்கள். அம்மாதிரி இல்லாமல், வருடந்தோறும், மக்கள் உற்பத்தியைப் பெருக்கிக் கொண்டிருக்கும் இந்த நாட்டில், கட்டுப்பாடு வேண்டியது அவசியம். ஆகவே, அதில் எல்லோரும் முழு மனதோடு ஈடுபடவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

தொழில் துறையில், சேலம் இரும்புத் தொழில்பற்றி சொல்கிறார்கள். நான் போய்ப்பார்த்தேன். உடனே செய்யவில்லை என்று சொல்லுகிறார்கள். ஜர்மானிய நிபுணர்கள் பார்க்கிறார்கள். பழுப்பு நிலக்கரியையும், இரும்புக் கனியையும் கொண்டு எப்படிச் செய்வது என்று ஆராய்ச்சி செய்து ஒரு முடிவுக்கு வருவதில் நம் சர்க்கார் தீவிர பங்கு கொண்டு இருக்கிறது. உடனே செய்யவில்லை என்று ஆத்திரப்படுகிறார்கள். தொழில் துறையில் முன்பு பேசிய சர்தார்ஜி சொன்ன மாதிரி, அதிக முன்னேற்றம் கண்டு இருக்கிறோம்.

நிதியமைச்சர் டெபிஸிட் பட்ஜெட் கொடுத்தார் என்று சொல்லுகிறார்கள். அவர்கள் எப்படி அரசாங்கத்திற்கு வருவார்களோ தெரியாது. அப்படி நேர்ந்தாலும், எப்படி இதைவிடத் திறமையான வரவு செலவு திட்டத்தை தயாரிக்க முடியும் என்பது சந்தேகமே. உலகமே போற்றும் அளவில் வரவு செலவு திட்டத்தை தயாரித்துள்ள நம் நிதியமைச்சரைப் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். அதோடுகூட, இந்த மாநிலத்தின் பெயரை தமிழ் நாடு என்று மாற்றியமைத்தற்காகவும், இந்த வரவு செலவுத் திட்டத்தைப் போற்றியும் கனம் நிதியமைச்சரவர்களுக்கு என் நன்றியையும் தெரிவித்துக்கொண்டு, தலைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொண்டு என் உரையை முடிக்கிறேன்.

* **Sri A. V. P. PERIAVALAGURUVA REDDI :** கனம் தலைவர் அவர்களே, இவ்வாண்டு வரவுசெலவு அறிக்கையை கனம் நிதியமைச்சர் அவர்கள் சமர்ப்பித்திருப்பதைப் பார்த்தால் மிகவும் அழகாகவும் இன்னும் எல்லாத் துறையிலும் முன்னேற்றம் அடைந்து நம் தமிழ் மாகாணம் சிறப்புற்று ஓங்கும் நிலையில் இருப்பதைக் காட்டும் அறிக்கையாக அமைந்திருக்கிறது என்பதில் ஆட்சேபணை இல்லை. விவசாயத்திற்கு முதலிடம் கொடுத்திருக்கிறார்கள். அதிலும் மிகவும் முன்னேற்றம் அடைய ஏதுவாக இருக்கும். ஆனாலும், இது எந்த நிலையில் இருக்கிறது என்று

பார்த்தால், சினிமாவைப் பார்த்தது போல் இருக்கிறது. சினிமாவைப் பார்த்துவிட்டு, கொட்டகையை விட்டு வெளியே வந்ததும் ஒன்றுமே ஞாபகத்திற்கு வராது. அதே நிலையில்தான் இருக்கிறது இதுவும். ஆனாலும் உள்ளபடியே நம் நாடு முன்னேற யாதொரு குறையும் இல்லை. இருந்தாலும் குறைபாடுகளைத் தவிர்க்க வேண்டும். விவசாயத்தை எடுத்துக்கொண்டால், ஒருவன் கடன் வாங்க வேண்டுமானால், யமலோகத்திற்கே போய் வருவது போல் இருக்கிறது. 45 கோடி விவசாயிகளுக்குக் கடன் கொடுக்கப் போகிறோம் என்று சொல்லுகிறார்கள். அதிலிருக்கும் கஷ்டத்தை நான் நன்றாக அறிந்திருப்பதால் சொல்லுகிறேன். கணக்கப் பிள்ளையிடம் நாள் கணக்காக, மாதக்கணக்காக அலைய வேண்டியிருக்கிறது. 500 ரூபாய் கடன் வாங்குகிறான் என்றால், 320 அல்லது 350 ரூபாய்தான் அவன் கைக்கு வருகிறது. அதற்குள்ளாகத்தான் வருகிறது. சொச்சமெல்லாம் இப்படியும் அப்படியும் போய்விடுகிறது. இந்த நிலையில்லாமல், கடன் வாங்க வேண்டுமானால், அதிகாரி ஒரு குறிப்பிட்ட நாளில், ஒரு வாய்தா போட்டு, அங்கு அன்றைக்கு கணக்கப்பிள்ளையையும் வரச் சொல்லி, அம் மாதிரி இருக்கும் 20, 30 மனுதார்களை ஒன்றாக வரச்சொல்லி, வில்லங்க சர்ட்டிபிகேட் வேண்டுமானாலும் வாங்கி வரச்சொல்லி, ஒரே நாளில் எல்லாவற்றையும் பார்த்து சாங்ஷன் செய்து, மறு நாளாவது அவர்களுக்குப் பணம் கிடைக்கச் செய்ய வேண்டும். இதை மந்திரியவர்கள் செய்தால், விவசாயிகளுக்கு மிக்க நன்மையாக இருக்கும். இன்னொன்றும் சொல்லுகிறேன். எங்கள் தாலுகாவிலுள்ள கள்ளிக்குடி கிராமத்து விவசாயி ஒருவன் ப்ளாக் ஆபீசருக்கு ஒரு ஜோடி வண்டிப் பட்டைகளுக்கு மனுப் போட்டான். அது சென்னைக்கு வந்து, இரும்பு கண்ட்ரோலர் அவற்றை கோயம்புத்தூரில் வாங்கிக்கொள்ளச் சொல்லி உத்தரவு போட்டார்கள். கல்லுக்குடி எங்கு இருக்கிறது, கோயம்புத்தூர் எங்கு இருக்கிறது. 256 மைலில் இருக்கிறது. இரண்டு வண்டிப் பட்டைக்கு இவ்வளவு தூரம் போவதா? ஆக, அந்த மனுஷன் ப்ளாக் மார்க்கெட்டில் 92 ரூபாய்க்கு இரண்டு வண்டிப் பட்டைகள் வாங்க வேண்டியிருந்தது. இந்த கண்ட்ரோலருக்கு கல்லுக்குடி எங்கிருக்கிறது, கல்லுக்குடிக்கும் கோயம்புத்தூருக்கும் எவ்வளவு தூரம் என்றெல்லாம் தெரியாது. வார் காலத்தில் போல் விவசாய டிபார்ட்மெண்டுக்கோ, அல்லது வேறு டிபார்ட்டுமெண்டுக்கோ இந்த வினியோகத்தைக் கொடுத்துவிட்டால் நலமாக இருக்கும். ப்ளாக்கில் 36 பேர் சும்மா இருக்கிறார்கள்; அவர்கள் இதையெல்லாம் செய்யலாம். வண்டிப்பட்டை, மண் வெட்டி, கொழு கம்பு முதலியவற்றை, இந்த விவசாய சாமான்களை, அவர்களே கொடுத்தால் ரொம்ப நலமாக இருக்கும். விவசாயிகள் படும் கஷ்டம் கொஞ்சநஞ்சமல்ல. லோன் கொடுத்தாலும் கொடுக்காவிட்டாலும், விவசாய சாதனங்கள் கொடுக்கும்போது, விவசாயிகளுக்குக் கஷ்டம் இல்லாமல் மந்திரியவர்கள் அதை அக்கறையோடு பார்க்கவேண்டும். கிராமத்தில் இருப்பதால் விவசாய மக்களின் கஷ்டத்தை கண்டதால் சொல்லுகிறேன்.

4th March 1961] [Sri A. V. P. Periavalaguruva Reddi]

(Mr. Speaker in the Chair)

கிணறு வெட்டுவதில் நல்ல பலன் கண்டிருக்கிறோம். இப்பொழுதெல்லாம் எங்கள் பகுதிகளில் பல கிணறுகள் வெட்டி புஞ்சை விவசாயம் நன்றாகச் செய்கிறார்கள். கிணறுகள் வெட்டி பம்புகள் போட்டிருக்கிறார்கள். இதிலே சில கஷ்டங்கள், மின்சார மந்திரிக்குச் சொல்லுகிறேன். ஒரு கிராமத்திற்கு மின்சாரம் கொடுக்க மினிமம் சார்ஜ் கேட்டிருக்கிறார்கள், 20 பம்புசெட்டுகள் கொடுப்போம் என்று உத்தரவாதம் கேட்கிறார்கள். எட்டு வருஷத்திற்கு அக்ரிமெண்ட் எழுதுகிறார்கள். அடுத்த வருஷத்திலேயே 3,000, 4,000 என்று லாபம் கிடைக்கிறது. இருந்தாலும் மினிமம் சார்ஜ் மட்டும் கேட்டுக்கொண்டே இருக்கிறார்கள். முதலில் 150, 200 என்று கட்டவேண்டியிருக்கிறது. பின்னால் அடுத்த வருஷத்திலேயே லாபம் கிடைத்தாலும் தொடர்ந்து மினிமம் சார்ஜை கொடுக்க வேண்டியிருக்கிறது. அப்படிக் கொடுத்துத்தான் ஆகவேண்டுமென்று விவசாயிகளை இம்சிக்கிறார்கள். அப்படி எட்டு வருஷத்திற்கு வாங்குகிறார்கள். இது விஷயமாக மின்சார போர்டில் யோசனை செய்து இந்த மினிமம் சார்ஜ் உபத்திரவத்தை எடுத்து விட்டால், கிணற்று விவசாயம் நன்றாக நடைபெறும்.

நாம் போட்டிருக்கும் அணைக்கட்டுகளால் தமிழ் மாகாணம் பூராவும் செழிப்படைந்திருக்கிறது. புஞ்சை நிலங்கள் ஏராளமாக இருக்கின்றன. ஏராளமாக விவசாயமும் செய்கிறார்கள்.

விலைவாசிகளை கட்டுப்பாடு செய்யவேண்டும். இப்பொழுது இரண்டு மூன்று தினங்களாக மூட்டை ஒன்றுக்கு 5 ரூபாய் ஏறி இருக்கிறது. கிளப்பில் கூட 90 நயா பைசா கொடு என்கிறான்; தயிர் கொண்டுவா என்றால், 15-க்குப் பதிலாக 30 நயா பைசா கொண்டு வா என்கிறான். அந்தமாதிரி விலைவாசிகள் ஏறி இருக்கின்றன. இப்பொழுது மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் சுமார் 67 லட்சம் டன் உற்பத்தியாகும் என்று சொல்லுகிறார்கள். 1950 முதற் 11-00 a.m.
கொண்டு இதுவரைக்கும் அதாவது 31 லட்சம் டன் முதற்கொண்டு 67 லட்சம் டன் வரைக்கும், உற்பத்தி அதிகரித்திருக்கிறது என்று சொல்லுகிறார்கள். இவ்வளவு தானியம் அதிகமாக உற்பத்தியாகியிருந்தும் உணவு பற்றாக்குறை என்று சொல்வதற்குக் காரணம் ஜனப் பெருக்கம் என்று சொல்லுகிறார்கள். குழந்தை பிறந்த உடனேயே அரிசி சாப்பிட ஆரம்பித்து விடுகின்றனவா என்று கேட்கிறேன். அது அப்படி இல்லை. இங்கு விளையக்கூடிய அரிசியெல்லாம் வியாபாரிகள் வாங்கி அவற்றை மலையாளத்திற்குக் கொண்டுபோய் விடுகிறார்கள். அங்கிருந்து இலங்கைக்குப் போவதாகச் சொல்லப்படுகிறது. அதுதான் பற்றாக்குறைக்குக் காரணமாக இருக்கிறதேயொழிய வேறு ஒன்றும் இல்லை. அதனால்தான் இங்கே அரிசி விலை குறையவே இல்லை.

உப்பு உரங்களை எடுத்துக்கொண்டால் கூட்டுறவு பாங்குகளுக்கு சிந்திரி உப்பு உரங்களைக் கொடுக்கிறார்கள். அங்குள்ள ஜில்லா கலெக்டர் ஒவ்வொரு சொசைட்டிக்கும் இவ்வளவு மூட்டை என்று கொடுக்கிறார். அந்த சொசைட்டிகள் தங்களுடைய டைரக்டர்களுக்கு தலைக்கு ஒரு மூட்டை என்று கொடுத்து விட்டு பாக்கியை

வியாபாரிகளுக்குக் கொடுத்து விடுகிறார்கள். அதை வியாபாரிகள் வாங்கிக்கொண்டுபோய் அதிக விலைக்கு விற்கிறார்கள். நாங்கள் போய் கேட்டால் "நாங்கள் என்ன செய்வது, அவர்கள் வாங்கிக் கொண்டு போய் விட்டார்களே" என்று சொல்லுகிறார்கள். வியாபாரிகள் அந்த மூட்டைகளை 36 ரூபாய்க்கு வாங்கிக்கொண்டு போய் 78 ரூபாய்க்கு விற்கிறார்கள். எதிர் கட்சியில் இருக்கிறேன் என்பதால் சொல்லவில்லை. கண்ணால் பார்த்ததைத்தான் சொல்லுகிறேன். மதுரையில் இம்மாதிரி நடந்து கொண்டிருக்கிறது. இந்த விதமாக வியாபாரிகள் சுமார் 500 மூட்டைகள் வரையில் வைத்து வியாபாரம் செய்கிறார்கள். இதனால் விவசாயிகளுக்கு கண்ட்ரோல் விலையில் உரம் உப்பு கிடைக்கவில்லை. இதைத் தடுக்கவேண்டும் என்று கலெக்டரைக் கேட்டால் அதைப் பிடிக்க தங்களுக்கு அதிகாரம் இல்லை என்று சொல்லுகிறார்கள். அப்படி இல்லாமல் இப்படி வியாபாரம் செய்கிறவர்களை கலெக்டர் பிடித்து தண்டிக்கக்கூடிய அதிகாரத்தை அவர்களுக்குக் கொடுக்க வேண்டும். இப்படிப்பட்ட வியாபாரிகளிடமுள்ள மூட்டைகளை கலெக்டர்கள் பிடிங்கி விவசாயிகளுக்குக் கொடுக்கும் அளவில் அவர்கள் நடவடிக்கை எடுத்துக்கொள்வதற்கு அதிகாரம் வழங்கப்படவேண்டும். இப்படிச் செய்தால்தான் ப்ளாக் மார்க்கெட்டை தடுப்பதற்கு வழி ஏற்படும். ஆகவே இம்மாதிரி செய்ய வேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அத்துடன் பஞ்சாயத்து யூனியன்களிலுள்ள 200 ஏக்கர் பாசனமுள்ள கண்மாய்களை பஞ்சாயத்து எடுத்துக்கொள்ள வேண்டும் என்று சொல்லுகிறார்கள். அப்படி அவைகளை எடுத்துக்கொண்டு மண் அடித்து சீர்திருத்தம் செய்தால் சுமார் 150 ரூபாய் செலவு செய்துவிட்டு 1,500 ரூபாய் செலவு செய்ததாக கணக்கு காட்டுகிறார்கள். இம்மாதிரி பஞ்சாயத்துக்களில் நடந்துகொண்டிருக்கிறது. அப்படி கண்மாய்களை பஞ்சாயத்தில் எடுத்துக்கொள்வது நல்லதுதான். ஆனால் இப்படியெல்லாம் அதிகப்படியாக செலவு செய்வதைத் தடுக்கவேண்டும். இதனால் அந்தப் பஞ்சாயத்திலுள்ள மக்களுக்கு கஷ்டங்கள் ஏற்படுகின்றன. அவைகளைப் பற்றி புகார் செய்தால் அதை கவனிப்பதாகவே இல்லை. அப்படிப் புகார் செய்தால் காங்கிரஸ்காரர்கள் அதில் தலையிட்டு புகார்களை சரியானபடி விசாரிக்காமல் விட்டு விடுகிறார்கள். இந்த நிலைமை இருக்கக்கூடாது. ஆகவே காங்கிரஸ்காரர்கள் இவைகளில் தலையிடாமல் பார்த்துக்கொண்டு மக்களிடமிருந்து புகார் வந்தவுடன் அதை நல்ல முறையில் விசாரித்து நியாயம் வழங்க ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இந்த வருஷம் பேய் மழை பெய்ததன் காரணமாக மதுரை, திருமங்கலம் வட்டாரங்களில் மிளகாய், பருத்தி அதிகமாக பாதிக்கப்பட்டிருக்கிறது. அதிக விளைச்சல் இல்லை. அவர்களுக்கு வரி வஜா செய்வதோடல்லாமல் இந்த வருஷம் விவசாயிகள் கொடுக்கவேண்டிய கடன்களையாவது ஒத்தி வைத்தால் விவசாயிகளுக்கு நலமாக இருக்கும். அப்பொழுதுதான் அவர்கள் தங்களுடைய குடும்பங்களை நல்ல முறையில் நடத்த முடியும், அவர்களுக்கு எப்படி விளைபொருள்கள் கிடைக்குமோ தெரியவில்லை. ஆகவே இதைச் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டு இத்துடன் என் உரையை முடித்துக்கொள்ளுகிறேன். வணக்கம்.

II—ANNOUNCEMENTS—*cont.*

(2) BUSINESS OF THE HOUSE.

MR. SPEAKER: I have to inform the House that the Business Advisory Committee, which met this morning, has decided as follows with regard to the programme of business of the House. A copy of the programme will be circulated to all members.

**(i) Calender for Tenth Session—March 1961—**

| | | |
|---|---|---|
| Saturday, the 4th .. | General Discussion on the Budget for the year 1961-62. | .. |
| Sunday, the 5th .. | Holiday. | |
| Monday, the 6th .. / Tuesday, the 7th .. | General Discussion on the Budget for the year 1961-62. | .. |
| Wednesday, the 8th .. | XIV—Police .. .. .. .. .. | 4 hours. |
| Thursday, the 9th .. | XII—Administration of Justice .. .. / XIII—Jails .. .. .. .. .. | " |
| Friday, the 10th .. | XXII—Industries and Cinchona .. / XLI—Capital Outlay on Industrial Development. | " |
| Saturday, the 11th .. | III—Forest Department .. .. .. / XVIII—Agriculture .. .. .. / XIX—Fisheries .. .. .. .. / XX—Animal Husbandry .. .. / XXXVII—Capital Outlay on Forest .. / XL—Capital Outlay on Agriculture .. | " |
| Sunday, the 12th .. | Holiday. | |
| Monday, the 13th .. | VII—Irrigation .. .. .. .. / XXXVIII—Capital Outlay on Irrigation | " |
| Tuesday, the 14th .. | XXV—Harijan Uplift .. .. .. | " |
| Wednesday, the 15th .. | XXIV—Labour including Factories .. | 2 hours. |
| | XXXV—Road Transport Schemes .. / XLIII—Capital Outlay on Road Transport Schemes. | 2 hours. |
| Thursday, the 16th .. | VIII—Head of State, Ministers and Headquarter staff. / IX—State Legislature .. .. .. / X—Elections .. .. .. .. | 4 hours. |
| Friday, the 17th .. | Holiday—Telugu New Year's Day. | |
| Saturday, the 18th .. | I—Land Revenue Department .. .. / II—Stamps Administration .. .. / XI—District Administration and Miscellaneous. | 3½ hours |
| | XXXVI—Compensation to Zamindars.. | |
| | IV—Registration Department .. .. | ½ hou |

[Mr. Speaker] [4th March 1961

## (i) Calendar for Tenth Session—March 1961—*cont.*

| | | |
|---|---|---|
| Sunday, the 19th .. | Holiday. | |
| Monday, the 20th .. | XVI—Medical .. .. .. ..<br>XVII—Public Health .. .. ..<br>XXXIX—Capital Outlay on Public Health. | 4 hours. |
| Tuesday, the 21st .. | Presentation of—<br>(i) the Statement of Demands for Grants for Excess Expenditure in 1957–58.<br>(ii) the Final Supplementary Statement of Expenditure for 1960–61. | |
| | V—Motor Vehicles Acts Administration. | 4 hours. |
| Wednesday, the 22nd .. | XV—Education .. .. .. .. .. | ,, |
| Thursday, the 23rd .. | XXVII—Civil Works—Works .. ..<br>XLII—Capital Outlay on Civil Works ..<br>XXVIII—Civil Works—Establishment and Tools and Plant. | 2 hours, |
| | XXIX—Civil Works—Grants-in-Aid .. | ,, |
| Friday, the 24th .. | XXVI—Community Development Projects etc.,<br>XXXIV—Other Miscellaneous Contributions and Assignments. | 4 hours. |
| Saturday, the 25th .. | XXXII—Stationery and Printing .. | 2 hours |
| | 1. Discussion and Voting on Demands for Grants.—<br>(i) for Excess Expenditure in 1957–58<br>(ii) for Final Supplementary Statement of Expenditure for 1960–61.<br>2. Introduction of Appropriation Bills. | |
| Sunday, the 26th .. | Holiday | |
| Monday, the 27th .. | VI—General Sales Tax and Other Taxes and Duties Administration. | 2 hours. |
| | XXI—Co-operation .. .. .. .. | 1 hour. |
| | XXIII—Khadi .. .. .. .. | .. |
| | XXX—Famine .. .. .. .. | .. |
| | XXXI—Pensions .. .. .. .. | .. |
| | XXXIII—Miscellaneous .. .. .. | .. |
| | XLIV—Commuted Value of Pensions .. | .. |
| | XLV—Capital Outlay on Schemes of Government Trading. | .. |
| | XLVI—Loans and Advances by the State Government. | .. |
| | Introduction of Appropriation Bills .. | .. |
| Tuesday, the 28th .. | Passing of Appropriation Bills .. .. | .. |
| Wednesday, the 29th .. | Official Business .. .. .. .. .. | .. |
| Thursday, the 30th .. | Do. | .. |

(ii) The discussion on voting on Demands for Grants will continue till 27th March 1961. The Guillotine will be applied at 1 p.m. on the 27th March 1961.

(iii) The House will also sit on the 28th March 1961 for considering and passing the Appropriation Bills.

4th March 1961] [Mr. Speaker]

(iv) The House will sit on the 29th, 30th March 1961 and 1st April, 1961 for considering Official Business.

(v) The House as at present programmed will adjourn on the 1st April 1961.

**SRI A. VEDARATHNAM :** ஸார், 18-ம் தேதி அசெம்பளி உண்டா என்பதை அறிய விரும்புகிறேன்.

**MR. SPEAKER :** 18-ம் தேதி அசெம்பளி கூட்டம் இருக்கிறது.

## IV.—GENERAL DISCUSSION ON THE BUDGET FOR THE YEAR 1961-62—*cont*

***SRI C. R. RAMASWAMI :** கனம் சபாநாயகர் அவர்களே, சென்ற ஒன்பது வருஷ காலமாக இந்த மாகாணத்தினுடைய நிதி நிலே அறிக்கையை நாம் பார்த்து வருகிறோம். அதிலும் நானும் இந்த ஒன்பது வருஷ காலமாக இந்தச் சட்ட சபையின் அங்கத்தினராக இருப்பதால் இந்த மாகாணத்தினுடைய வளர்ச்சியை ஓரளவு நேரடியாக பார்த்து வந்து அதைப்பற்றி சொல்லக்கூடிய ஒரு வாய்ப்பு என்னிடம் இருக்கிறது. இந்த ஒன்பது வருஷ காலமாக நமது கனம் நிதி அமைச்சர் அவர்கள் இந்த நிதி நிலே அறிக்கையை சமர்ப்பித்து வருகிறார். இந்த வருஷம் தமிழில் இந்த அறுபது பக்கமுள்ள ஒரு பெரிய பிரசங்கத்தை அவரே எழுதி யிருக்கிறார்கள் என்பதையும், ஆங்கிலத்தில் எழுதி அதை மொழி பெயர்க்காமல் தானாகவே தமிழில் எழுதியிருப்பதாகவும் கேள்விப்பட்டேன். இது ஒரு புது விஷயம்தான். இதைப் படிக்கும்போது இந்த மாகாணத்தினுடைய நிலேயை நன்றாக தெரிந்துகொள்ள முடியும். எந்தெந்த வழிகளில் இந்த மாகாணம் வளர்ச்சி அடைந்து வந்திருக்கிறது என்பது இதை வாசித்தால் நன்றாகத் தெரியவரும். எல்லா துறைகளிலும், குறிப்பாக தொழில் துறையில் எந்த அளவு முன்னேற்றமடைந்திருக்கிறது என்பதைப்பற்றி அவர் இதில் எடுத்துக்காட்டியிருக்கிறார். இந்த மாகாணம் எந்த அளவில் முன்னேற்றமடைந்திருக்கிறது, பொருளாதாரத் துறையில் எந்த அளவு முன்னேற்றமடைந்திருக்கிறது, பொருளாதாரத் துறையில் நாம் மந்தமாக இருக்கிறோமா என்பதையெல்லாம் அவர் எடுத்துக் காட்டி இருக்கிறார். எந்த வகையில் எடுத்துக்கொண்டாலும் நம் மாகாணம் முன்னணியில் இருக்கிறது என்பதையும் இது எடுத்துக்காட்டுகிறது. நம் மாகாணத்தைக் கண்டு இந்தியா தேசத்தில் மட்டும் அல்லது வெளிநாடுகளிலும் நமக்கு எவ்வளவோ பெருமை இருக்கிறது. எல்லோரும் பெருமைப்படக் கூடிய அளவில் நம் மாகாணம் செயல்பட்டு வருகிறது. அந்த அளவில் நாம் இருந்துகொண்டு வருகிறோம். 'மெட்ராஸ்' என்று சொன்னாலே அதற்கு ஒரு தனியான மரியாதையும் தனியான மதிப்பும் இருக்கிறது என்று சொல்லலாம். மெட்ராஸ் சிறந்ததாக இருக்கிறது, அதற்குத் தனி மதிப்பு இருக்கிறது. ஆகவே இந்த தேசத்தில் இந்த மாகாணத்தில் இப்பேர்ப்பட்ட வளர்ச்சியைப் பார்த்து நாம் பெருமைப்பட வேண்டியதாக இருக்கிறது. அது நம்முடைய கடமையாகும்.

இரண்டாவது ஐந்தாண்டு திட்டக் காலத்தில் நாம் 186 கோடி ரூபாய் செலவு செய்திருக்கிறோம். எவ்வளவோ நல்ல காரியங்களைச் செய்திருக்கிறோம். எவ்வளவோ அதிகப்படியாக உணவு தானியங்களை உற்பத்தி செய்திருக்கிறோம். இன்னும் பல துறைகளில் முன்னேற்றத்தை நாம் பார்த்திருக்கிறோம். ஆனால் எதிர் கட்சியிலுள்ளவர்கள் சொல்லுகிறார்கள், மத்திய அரசாங்கத்தினிட மிருந்து அதிகப்படியான உதவியைக் கேட்பது இல்லை, அவர்களும் கொடுப்பதாக இல்லை என்று. மத்திய அரசாங்கம் நமக்குக் குறைவாகத்தான் கொடுக்கிறார்கள் என்றும் சொல்லுகிறார்கள். ஆனால் நான் கணக்கிட்டுப் பார்த்தவரையிலும் இந்த ஒன்பது வருஷ காலத்தில் மத்திய அரசாங்கத்தின் உதவி எப்படி இருக்கிறது என்றால் நாம் கேட்ட போதெல்லாம் அவர்கள் கொடுத்துக் கொண்டுதான் வந்திருக்கிறார்கள்.

அவர்கள் கொடுக்கக்கூடியதை மூன்று வகையாக பிரித்துக் கொள்ளலாம். நமது கனம் நிதி அமைச்சருடைய பேச்சை மூன்று அம்சங்களாக பிரித்துக்கொள்ளலாம். முதலாவதாக ஸ்டேட்ஸ் ஷேர் அப் செண்ட்ரல் டாக்சேஷன். அதிலிருந்து நமக்கு வரக் கூடிய வருமானம் இருக்கிறது. அதை எடுத்துப் பார்த்தால் 1959-60-ல் நமக்கு 13 கோடி ரூபாய் வந்திருக்கிறது. 1960-61-ல் நமக்கு 16 கோடி ரூபாய் வந்திருக்கிறது. 1961-62-ல் நமக்கு 17 கோடி ரூபாய் வருவதாக இருக்கிறது. அவர்கள் வசூல் செய்து சென்னை மாகாணத்திற்கு 1959-60-ல் 40 கோடி ரூபாய் கொடுத் திருக்கிறார்கள். 1960-61-ல் 40 கோடி ரூபாய் கொடுத்திருக்கிறார்கள். 1961-62-ல் 40 கோடி ரூபாய் எதிர்ப்பார்க்கலாம். ஆகவே சரி பாதியாக அவர்கள் கொடுத்துக்கொண்டு வருகிறார்கள். டைரெக்ட் டாக்சேஷன் மூலமாகவும் அவர்கள் கொடுப்பதும் மானியமாகக் கொடுப்பதும் இதில் இருக்கிறது. அவர்கள் கொடுக்கக்கூடிய பங்கும் இங்கு வசூலிக்கக்கூடியதும் சரியாக இருக்கிறது.

மற்றும் நாம் செலவு செய்ய வேண்டியவைகளை அவர்களைக் கொண்டே நேரடியாக செலவு செய்ய வேண்டும் என்று சொல்ல வேண்டும். அவர்கள் சொல்லலாம், நெய்வேலி ஸ்தாபனத்தை ஏற்படுத்தி விட்டோம் என்று. பழுப்பு நிலக்கரி எடுக்கக்கூடிய ஸ்தாபனத்தை அவர்கள் அமைத்து விட்டதாகச் சொல்லலாம். அதைத் தவிர இன்னும் எவ்வளவோ மூலபொருள்கள் நமக்கு வர வேண்டியதாக இருக்கிறது. மற்ற மாகாணத்திலிருந்து நமக்கு பல மூல பொருள்கள் வரவேண்டியதாக இருக்கிறது. பீகாரி லிருந்து வரவேண்டியதாக இருக்கிறது. அதற்கு நமக்குள்ள ரயில் பாதை போதவே போதாது. ஆகவே ரயில் பாதைகளை விஸ்தரிக்கச் சொல்ல வேண்டும். அதற்கு வேண்டிய நடவடிக்கையை இந்த அரசாங்கம் எடுத்துக்கொள்ள வேண்டும். கல்கத்தா விலிருந்து வரக்கூடிய ரயில் பாதை இப்பொழுது ஒன்றுதான் இருக்கிறது. அதை இரண்டாக்க வேண்டும். அப்பொழுதுதான் அதிகப்படியான தொழிற்சாலைகளை இங்கு ஏற்படுத்தலாம். அதன்

[4th March 1961 [Sri C. R. Ramaswami]

பிறகு அதிகப்படியான மூலப்பொருள்களைக் கொண்டு வருவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ளலாம். ஆகவே இதைச் செய்யச் சொல்லி தூண்டுகோல் போட வேண்டும்.

இதைத் தவிர துறைமுகங்களை விஸ்தரிக்க வேண்டும். சென்னை துறைமுகத்தைத்தான் விஸ்தரித்து வருகிறார்கள். தூத்துக்குடி துறைமுகத்தை அபிவிருத்தி செய்யப் போவதாகச் சொல்லுகிறார்கள். அது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எடுத்துக் கொள்ளப்போவதாகச் சொல்லப்படுகிறது. அதை செய்தால் நல்லது தான். அப்படிச் செய்தால் அந்த துறைமுகங்களின் பக்கத்தில் தொழிற்சாலைகளை ஆரம்பிக்கலாம். இப்பொழுது அவைகள் இல்லாமல் இருப்பதால் சென்னை நகரத்திற்கு வர வேண்டியதாக இருக்கிறது. அதேபோன்று நாகப்பட்டணம், கடலூர், பாண்டிச்சேரி போன்ற சின்னச்சின்ன துறைமுகங்களையும் அபிவிருத்தி செய்யச் சொல்ல வேண்டும். அவைகளையும் நல்ல முறையில் சீர்படுத்தினால் அநேக கப்பல்களைக் கொண்டு வருவதற்கு வசதியாக இருக்கும். 5,000 அல்லது 10,000 டன் கப்பல்களைக் கொண்டு வந்து நிறுத்துவதற்கு சௌகர்யமாக இருக்கும். அதன் மூலம் அதிகப்படியான சாமான்களை ஏற்றுமதி, இறக்குமதி செய்வதற்கு வசதியாக இருக்கும். அதற்கு மத்திய அரசாங்கத்தினிடம் சொல்லி ஏற்பாடு செய்யச் சொல்ல வேண்டும். அவற்றிற்கெல்லாம் அவர்களைக் கொண்டே செலவு செய்யச் சொல்ல வேண்டும். மற்றும் பல சில்லரை வேலைகள் எல்லாம் இருக்கின்றன. அவைகளையும் அவர்களைக் கொண்டே நடத்தச் சொல்ல வேண்டும். அதிகப்படியாக அவர்களுக்கு நாம் தொந்தரவைக் கொடுத்து அவர்களையே செலவு செய்யச் சொல்ல வேண்டும். அதிகப்படியான ரயில் பாதைகளைப் போடச் சொல்ல வேண்டும். துறைமுகங்களை அதிகப்படுத்தச் சொல்லவேண்டும். அரசாங்கம் நடத்தக்கூடிய ஷிப்பிங் கார்பொரேஷன் இருக்கிறது. அதன் மூலம் கோஸ்டல் ஷிப்பிங் ட்ரேடை நடத்த வேண்டும். அவைகளுக்கு அதிகப்படியாக அவர்களைச் செலவு செய்யச் சொல்ல வேண்டும். இப்படி அதிகப்படியான கப்பல்களுக்கு வசதி செய்து கொடுத்தால் ரயில்வேயிலுள்ள பாட்டில்நெக் கொஞ்சம் குறைவதற்கு வழி ஏற்படும். அதன் மூலம் இந்நாட்டின் தொழில் வளம் பெருகும். இவைகளுக்கு ஏற்பாடு செய்தால் தொழில் வளம் பெருகும் என்பதில் சந்தேகமில்லை. இம்மாதிரியான முறையிலே அவர்கள் கொடுக்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். தொழில் வளர்ச்சி நம் ராஜ்யத்தில் ஏற்படவேண்டுமானால் ரெயில் பாட்டில்நெக் போகவேண்டும். நிலக்கரி, இரும்பு, அமோனியம் சல்பேட் போன்ற எல்லாச் சாமான்களும் வரவேண்டியதாக இருக்கிறது. எல்லாவற்றுக்கும் முட்டுக்கட்டையாக இருப்பது ரெயில் பாதை. ரயில்கள் மூலமாகத்தான் ஒவ்வொரு சாமானும் வந்து சேர்ந்தாகவேண்டி இருக்கிறது. ஆகவே இந்த ரெயில் பாதை விஸ்தரிப்பில் அவர்கள் நேரிடையாக ஈடுபடவேண்டும் என்பதை வற்புறுத்தவேண்டும் என்று திரும்பவும் ஒருமுறை கேட்டுக்கொள்கிறேன்.

[Sri C. R. Ramaswami] [4th March 1961

நமது மாகாணத்தைப் பொறுத்தவரையில் உணவு தான்ய உற்பத்தியில் அதிக முன்னேற்றம் அடைந்திருக்கிறோம். அரிசியைப் பற்றிக் கவலை கிடையாது. நிறைய உற்பத்தி செய்கிறோம் பஞ்சம் ஏற்படாது என்பதில் சந்தேகமே இல்லை. ஆனால் மிளகாய், புளி, எண்ணை போன்ற பொருள்களின் விலை அதிகமாக ஏறிக் கொண்டே போகிறது. இதற்குக் காரணம் என்னவென்று அலசிப் பார்க்கவேண்டும். நல்லெண்ணையை எடுத்துக்கொண்டால் விலை ஏற்றத்திற்கு முக்கிய காரணமாய் அந்த வியாபாரிகள் சொல்வது உற்பத்திக் குறைவுதான். நாட்டுச் செக்கு ஒன்றினால்தான் எண்ணை ஆட்ட முடியும். மழை காலத்திலும் அவை வேலை செய்ய முடிவதில்லை. நாட்டுச் செக்கு வேலை செய்யக்கூடிய காலத்திலும் அதிகமாக உற்பத்தி செய்யமுடிவதில்லை. மெக்கனைஸ்டு ப்ராஸஸ் பின்டோ சிஸ்டம் கையாளலாம் என்றாலும் அதற்கு தனியாக எக்ஸைஸ் டியூடி எல்லாம் போடப்படுகிறது. அதனால் தேவைக்கு ஏற்ற அளவு உற்பத்தி செய்ய முடியவில்லை என்கிறார்கள். இப்படி அரிசியைத் தவிர மிளகாய், புளி, எண்ணை இவற்றின் விலை ஏகமாக ஏறிக்கொண்டு போவதற்குக் காரணம் என்ன என்று ஆராய்ந்து அதைக் குறைக்க தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

தொழில் அபிவிருத்தியைப் பொறுத்த மட்டில் நம் ராஜ்யம் முதன்மையாக இருக்கிறது. அதுவும் இந்த ஐந்து வருஷ காலத்தில் மிகவும் துணிச்சலாக நம்முடைய தொழில் மந்திரி வேலை செய்திருக்கிறார்கள் என்று சொன்னார்கள். அதை நானும் பாராட்டுகிறேன். பல புதிய தொழில்கள் நம் ராஜ்யத்தில் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அலுமினியம் தொழிற்சாலை, பேப்பர் தொழிற்சாலை என்று இப்படி பல தொழிற்சாலைகள் ஏற்பட்டிருக்கின்றன. இம்மாதிரியாக நாட்டில் பல தொழில்கள் பெருகினால்தான் வேலை வாய்ப்பு அதிகரிக்கும். அதுவும் வேலை இல்லாமல் திண்டாடுகிறவர்கள் நம் நாட்டில் அதிகம். நானே ஒவ்வொரு நாளும் 20 பேர்களுக்கு வேலைக்காகச் சிபார்சு கடிதம் கொடுக்கிறேன். வேலை கிடைக்கிறதோ என்னமோ. இப்படி வேலை இல்லாமல் திண்டாடுகிறவர்களுடைய பிரச்னை ஒரு பக்கத்தில் இருந்துகொண்டே இருக்கிறது. ஆகவே சிறிய, பெரிய தொழிற்சாலைகள் பல நம் ராஜ்யத்தில் ஏற்பட்டாகவேண்டும். அப்போதுதான் வேலையில்லாத் திண்டாட்டம் போகும்.

இப்போது கிண்டியில் நடைபெற்று வருகிற இண்டஸ்டிரியல் எஸ்டேட் நல்ல முறையில் செயல்பட்டு வருகிறது. சமீபத்தில் நான் கூட அங்கே சென்று ஒவ்வொரு வேலை அமைப்புகளையும் பற்றி நேரில் பார்வையிட்டேன். இந்தியாவில் மற்ற இடங்களில் இல்லாத உயர்ந்த கருவிகள் எல்லாம் அங்கே இருக்கின்றன. அதுவும் டாடா தொழிற்சாலையின் பிரதம என்ஜினியர் அங்கே வந்திருந்து அங்குள்ள டூல் ரூமைப் பார்த்துவிட்டு சில கருவிகளுக்குக் கூட ஆர்டர் கொடுத்ததாகச் சொன்னார். இதுமாதிரியான கருவிகள் எங்கும் கிடைக்கவில்லை? ஆனால் இங்கு கிடைக்கிறது என்பதற்குப் போதுமான விளம்பரமே செய்யப்படவில்லையே என்று சொன்னார். சரியான முறையில் இங்கு நடைபெறும் வேலைகள்,

4th March 1961] [Sri C. R. Ramaswami]

இருக்கும் கருவிகள், இதனுல் செய்யக்கூடிய பல தொழில்கள் இவற்றைப்பற்றியெல்லாம் தொழில் இலாகா பிரசாரம் செய்ய வேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன். இம்மாதிரி தொழில்பேட்டைகள் இன்னும் பல நம் ராஜ்யத்தில் ஏற்பட்டாக வேண்டும். அதுவும் மதுரை, கோயம்புத்தூர் போன்ற பல நகரங்களில் ஏற்பட்டால்தான் இந்த ராஜ்யம் பூராவும் ஆங்காங்கே பல தொழிற்சாலைகள் ஏற்படுவதற்கு வழியேற்படும். அதுவும் இந்தத் தொழிற்சாலைகள் விஸ்தரிக்கப்பட்டு பலவிடங்களிலும் பரவலாக ஏற்படவேண்டும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

அதோடு இங்கே இரும்புத் தொழிற்சாலையை ஏற்படுத்த வேண்டுமென்று எல்லோரும் ஆவலோடு இருக்கிறுர்கள். கிழக்கு ஜெர்மன் நிபுணர்கள் பார்வையிட்டார்கள், மேற்கு ஜெர்மன் நிபுணர்கள் பார்வையிட்டார்கள் என்று சொல்லப்படுகிறது. கிழக்கு ஜெர்மன் நிபுணர்கள் ரிப்போர்ட் கொடுத்திருந்தாலும் மேற்கு ஜெர்மன் நிபுணர்களிடமும் கோரவேண்டும். அவர்களாகக் கொடுக்க மாட்டார்கள். எல்லாவற்றையும் வாங்கி விசாரித்து எந்தக் கம்பெனியார் கொடுக்கிற ரிப்போர்ட் நமக்குச் சாதகமாக இருக்கிறதோ அதை ஏற்று, அவர்கள் உதவியை நாடி இந்தத் தொழிற்சாலையை ஏற்படுத்தவேண்டும். நெய்வேலிச் சுரங்கம் வேலை செய்ய ஆரம்பித்தால் நமக்குக் கரி கிடைத்துவிடும். இரும்புத் தொழிற்சாலையை ஏற்படுத்திவிட்டால் நம் நாடு எல்லா வகையிலும் அபிவிருத்தி அடையும், பல தொழில்கள் ஏற்படும் என்று சொல்லிக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

* **SRI A. R. SUBBIAH MUDALIAR :** *1961-62-ம்* வருஷத்து வரவுசெலவுத் திட்டத்தை ஆதரித்து சிலவார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். முதற்கண் இந்த வரவுசெலவுத் திட்டத்தை மனப்பூர்வமாக வரவேற்கிறேன். காரணம் கடந்த பத்து வருஷங்களாக செய்யப்பட்டு வந்துள்ள ஆக்கவேலைகள், திட்டங்களைப் பற்றி நன்ருகக் கூறப்பட்டிருக்கிறது. ஒருவகையில் ஜாதகக் குறிப்பு என்று கூடச் சொல்லலாம். அந்த ஜாதகக் குறிப்பைப் பார்த்தவுடன் எதிர்க்கட்சிக்காரர்களுக்குக் கலக்கம் ஏற்பட்டிருக்கிறது. வரும் தேர்தலில் இந்த ஜாதகக் குறிப்புத்தான் வழிவகுக்கும். ஒன்றும் குறை சொல்வதற்கில்லையே என்று அவர்களே கலக்கம் அடைந்திருக்கிறுர்கள். அதோடு இந்த பட்ஜெட்டில் 11-வது வரை ஏழை மாணவர்களுக்கு இலவசக் கல்வி அளிப்பது, 15 ஆயிரம் வரை சேல்ஸ் டாக்ஸ் கட்டுப்பாடு கொடுத்திருப்பது இவை எல்லாம் நல்ல அம்சங்கள். என்னுடைய தொகுதியைப் பொறுத்தவரையில் சங்கரன்கோயில் குடிதண்ணீர் திட்டத்திற்கு வழி செய்திருக்கிறுர்கள். அதைப் பாராட்டுகிறேன். இது நெடுநாளாக எதிர்பார்த்த திட்டம்.

விவசாயத்தைப் பொறுத்த வரையில் நாம் எதிர்பார்த்தபடி 12 லட்சம் டன் உற்பத்தி செய்யாவிட்டாலும் 8 லட்சம் டன் உற்பத்தி செய்திருப்பதாகக் கணக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. விவசாய உற்பத்தியை எதிர்பார்த்தபடி பெருக்க முடியாததற்குக் காரணம்

உரக் குறைவு, பாசன வசதிக் குறைவு என்று சொல்லப்படுகிறது. உரம் போதுமானபடி கிடைக்கவில்லை என்று சொல்லிமட்டும் தப்ப முடியாது. அதில் இருக்கக்கூடிய ஊழல்களைப் போக்க வேண்டும். சாதாரணமாக மார்க்கெட்டில் 60 ரூபாய், 70 ரூபாய்க்கு உரம் கிடைக்கிறது. காரணம் அடுத்த மாகாணத்தில் இருந்து நம் மாகாணத்திற்கு வருகிறது. இதற்குக் காரணம் மத்திய சர்க்காரின் கொள்கையில் இருக்கக்கூடிய ஊழல்தான். இதைப்பற்றியெல்லாம் விவசாய மந்திரிகளின் மகாநாட்டிலேயே சொல்லப்பட்டிருக்கிறது. அந்த மகாநாட்டின் ரிப்போர்ட்டில்

"... a suggestion of the West Bengal Government for regulating the movement of fertilizers from one State to another and suggests the Minister for Food and Agriculture might undertake the examination of the various points involved in regulation of inter-Statemovement of fertilizers".

என்று ஒரு பாரா இருக்கிறது. இதன் மூலமாக என்ன தெரிகிறதென்றால் ஏதோ நஞ்சையை கணக்கு எடுத்துக்கொண்டு அதற்குத் தகுந்தபடி உரம் வாங்க கணக்கு காட்டுகிறார்கள். அந்தந்த மாகாணங்கள் உர வினியோகத்தை செவ்வனே செய்யாததினால் தான் லாரிகள் மூலமாக மத்திய பிரதேசத்தில் இருந்தும் இதர மாகாணங்களில் இருந்தும் சென்னை மாகாணத்திற்கு உரம் வருகிறது. இது ஒரு விதத்தில் பிரயோஜனமாக இருந்தாலும் வினியோக முறையில் தவறு இருக்கிறதென்ற குறை சொல்ல வேண்டிய நிலைமையில் இருக்கிறோம். மத்திய சர்க்காருடைய பங்கீட்டு முறையில் குறை இருக்கிறபடியால் நமக்குக் கிடைக்க வேண்டிய உரம் கிடைக்க வில்லை. ஆனால் தேவையில்லாதவர்களுக்கு அதிகமாகக் கொடுக்கப்படுகிறது. அதன் காரணமாக அந்த மூட்டைகள் எல்லாம் லாரி மூலமாக நமக்கு வருகிறது. இதனால் விலை ஏறுகிறது. இடையில் இருப்பவர்கள் அதிகமான லாபம் அடைகிறார்கள். ஆகவே உரம் வினியோகம் செவ்வனே நடப்பதற்கு ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். டீசல் எண்ணெய் சம்பந்தமாக சலுகை வேண்டுமென்று முறையிட்டும் இன்றுவரை அதற்கு முடிவு இல்லாமல் இருந்து கொண்டிருக்கிறது.

விவசாயம் சம்பந்தமாக இன்றைக்கு தேவைப்படுவது ஆராய்ச்சி. விவசாயக் கல்லூரி அப்கிரேட் செய்யப்பட்டு அதற்குச் சலுகை கொடுக்கப்பட்டு விவசாய ஆராய்ச்சி சம்பந்தமாக அதிகமான வேலைகள் செய்யப்படுகின்றன. விவசாயத்திற்கு அதிகமாக தேவைப்படுவது கால்நடைகள் இன்ஷூரன்ஸ், கிராப் இன்ஷூரன்ஸும்தான். இதைப்பற்றி நான் பலதடவை வற்புறுத்தியிருக்கிறேன். இன்றுகூட ஒரு கேள்விக்கு பதில் அளிக்கும்போது கனம் அமைச்சர் அவர்கள் "கால்நடை இன்ஷூரன்ஸுக்கு வழி வகுக்கப்போகிறோம். கிராப் இன்ஷூரன்ஸுக்கு ஜனங்களிடத்தில் ஆதரவு இல்லை" என்று சொன்னார்கள். பயிர்களுக்கு இன்ஷூரன்ஸ் மிகவும் அவசியமானது. பரீட்சார்த்தமாக சில பகுதிகளுக்கு இதைக் கொண்டுவரலாம். பயிர்களுக்கு இன்ஷூரன்ஸ் திட்டம் வந்துவிட்டால் பிளான்ட் ப்ரொடக்ஷன்க்கு

4th March 1961] [Sri A. R. Subbiah Mudaliar]

இன்னும் தீவிரமாக வேலை செய்து பயிர்களுக்கு வரும் நோய்களைத் தடுக்க முடியும். இதனால் அதிக உற்பத்தி பெருகுவதற்கு ஏதுவாக இருக்கும். முக்கியமான தேவை பயிர்களுக்கு பாதுகாப்பு. பயிர்களுக்கு நோய்வருகிறது. இதைத் தடுப்பதற்கு செவ்வனே வழி வகுத்துக்கொடுத்தால்தான் நல்லது. ஒரு ஜில்லாவிற்கு ஒரு பிளாண்ட ப்ரொடக்ஷன் யூனிட் இருக்கவேண்டியது அவசியம். கிராப் இன்ஷூரன்ஸ் வந்துவிட்டால் ஒரு வழி ஏற்பட்டுவிடும்.

பருத்தி சம்பந்தப்பட்டமட்டில் 40 கோடி ரூபாய் மதிப்புள்ள பருத்தி வெளிநாட்டிலிருந்து வருகிறது. பருத்தி சம்பந்தமான ஆராய்ச்சியில் நாம் அதிகமான முன்னேற்றம் அடையவில்லை. ஆகையால் இது சம்பந்தமான ஆராய்ச்சி செய்து இப்பொழுது உற்பத்தி செய்வதைவிட அதிகமாக உற்பத்திசெய்வதற்கு வழி செய்யவேண்டும். ஒவ்வொரு தாலுக்காவிற்கும் ஒரு சாயில் டெஸ்டிங் யூனிட் தேவைப்படுகிறது. எந்த நிலத்தில் என்ன பயிர் செய்தால் நல்லது என்பது விவசாயிகளுக்குத் தெரியாமல் இருக்கிறது. கோவில்பட்டியில் இந்த வருஷம் ஒரு சாயில் டெஸ்டிங் யூனிட் ( Soil Testing Unit ) வைக்க திட்டம் இருப்பதாகத் தெரிகிறது. ஒவ்வொரு தாலுக்காவிற்கும் ஒரு சாயில் டெஸ்டிங் யூனிட் அவசியமாக இருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

பாசன வசதிகளை எடுத்துக்கொண்டால் பெரிய திட்டங்கள் எல்லாம் பூர்த்தியாகிவிட்டன. சிறிய திட்டங்களுக்கு 145 லட்சம் ரூபாய்தான் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இந்தத் தொகை போதாது, காணாது. நம்முடைய மாகாணம் சம்பந்தப்பட்டவரை இரண்டு முக்கிய தேவைகள் இருக்கின்றன. 'Remodelling of all channels' தான் முக்கியமான தேவை. இப்பொழுது கால்வாய்களில் தண்ணீர் குறைவாக வந்துகொண்டிருக்கிறது. இந்தத் தண்ணீர் ஒழுங்காக வினியோகிக்கப்படவேண்டுமானால் இருக்கும் கால்வாயை மராமத்து செய்யவேண்டும். முக்கியமாக ஜமீன் ஒழிப்பு பிரதேசங்களில் பல வருஷங்களாக வேலை செய்யாமல் மதகுகள் தூர்ந்துபோய்விட்டன. கால்வாய்கள் தூர்ந்துபோய் இருப்பதால் தண்ணீர் ஒழுங்காக போனபாடில்லை. ஆகையால் 'Remodelling of channels' மிகவும் அவசியம்.

'Desilting' சம்பந்தமாக தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. அது மிகக்குறைவாக இருக்கிறது.

ஒவ்வொரு ஆற்றிற்கும் ஒரு ரிசர்வாயர் இருந்துவிட்டால் மழை காலங்களில் வரும் தண்ணீரை தேக்கி வைத்து மற்ற காலங்களில் இதைப் பயன்படுத்த முடியும். இந்த வருஷம் பெய்த மழைத்தண்ணீர் அங்கங்கே சமுத்திரத்தில் போய் சேர்ந்துவிட்ட நிலையைப் பார்த்தோம். ஆகையால் ஒவ்வொரு நதிக்கும் ரிசர்வாயர் மாதிரி ஏற்பட்டுவிட்டால் வெள்ளம் வரும் நேரங்களில் தேக்கமுடியும்.

புது கிணறுகள் வெட்டுவதற்கு திட்டம் ஏற்பட்டிருக்கிறது. ஆர்டிசான் வெல்கள், சப்-ஆர்டிசான் வெல்கள் ஜாஸ்தியாக பொறுத்துவதற்கு வழி செய்யவேண்டும். ஏனென்றுல் பிராஜக்ட் இல்லாத ஏரியாக்களில் இதை உபயோகிக்க தயாராய் இருக்கிருர்கள். நான்கு ஆயிரம் ரூபாய் செலவானுலும் அவர்களுக்கு கடன் வசதியும், உதவித்தொகையும் கொடுத்தால் இதை எடுத்து நடத்தத் தயாராய் இருக்கிருர்கள். இதைக் கூடுதலாக வினியோகிப்பதற்கு திட்டம் வகுக்கவேண்டும். சில இடங்களில் பூமிகளில் தண்ணிர் இருந்தும் அதை வெளியில் எடுக்கமுடியாமல் தனிப்பட்டவர்கள் கஷ்டப்படுகிருர்கள். புறம்போக்கு நிலங்களாக இருந்தால் அங்கு இத்தகைய கிணறுகள் வெட்டுவதற்கு தனிப்பட்டவர்களால் முடிவதில்லை. சர்க்காரே இந்த இடங்களில் இத்தகைய கிணறுகள் வெட்டுவது நல்லது என்று நினைக்கிறேன்.

காட்டு இலாக்கா சம்பந்தமாக சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். சிறு குன்றுகளில் மரங்கள் வைத்து வளர்க்கக்கூடிய நிலைமை இருக்கிறது. அங்கங்கே உள்ள பஞ்சாயத்து பொறுப்பில் விட்டுவிட்டால் காட்டுவளத்தை பெறுக்க முடியும். ஒவ்வொரு ஜில்லா தலைநகரத்தில் இருக்கும் ஜில்லா அதிகாரிகளுக்கு டெலிபோன் தேவை. அவர்களுக்கு டெலிபோன் வசதி இல்லாததால் தொடர்பு வைத்துக்கொள்ள கஷ்டமாக இருக்கிறது. எஸ்டிமேட் கமிட்டி நீர்ப்பாசன சம்பந்தமாக ஒரு அறிக்கை கொடுத்திருக்கிருர்கள். இதைப் பரிசிலனை செய்து அதில் சொல்லப்பட்டிருக்கும் சிபார்சுகளை அமுல் நடத்துவது நலம் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

*** SRI P. U. SHANMUGAM :** கனம் சட்டமன்றத் தலைவர் அவர்களே, 1961-62-ம் ஆண்டு நிதிநிலை அறிக்கைமீது விவாதம் நடைபெறுகிற இந்த நேரத்தில் நான் என்னுடைய கருத்துக்களை சொல்லி விவாதத்தில் கலந்துகொள்ளுகிறேன். 1961-62-ம் ஆண்டு நிதிநிலை அறிக்கையை அமைச்சர் அவர்கள் வெகு சிரமப்பட்டு 60 பக்கங்கள் எழுதி வைத்தார் என்று எனக்கு முன் பேசிய திரு. ராமசாமி அவர்கள் குறிப்பிட்டார்கள். ஒருவேளை 60 ஆண்டுகள் முடிவடைந்துவிட்டதினுல் 60 பக்கம் எழுதிவைத்தாரோ என்னவோ எனக்குத் தெரியாது. எப்படியிருந்தாலும் 60 பக்கங்கள் எழுதிவைத்த அமைச்சரை உள்ளபடியே பாராட்டுகிறேன், இவ்வளவு சிரமம் எடுத்துக்கொண்டதற்காக.

நாட்டின் பொருளாதாரம் குறித்து கனம் அமைச்சர் அவர்கள் சொல்லும்போது நான் இந்த புஸ்தகத்தில் துருவித் துருவிப் படித்ததில் என்னுடைய சிற்றறிவிற்கு எட்டியதெல்லாம் பொருளாதார வளர்ச்சியைக் குறித்து அமைச்சருக்கு பெரும் குழப்பம் ஏற்பட்டிருக்கிறதென்றுதான் நான் வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்ளுகிறேன். இதே புஸ்தகத்திலிருந்து அமைச்சருடைய குழப்பத்திற்கு அறிகுறியாக என்னென்ன இருக்கின்றன என்பதை எடுத்துக்காட்டுகிறேன். அதற்கான விளக்கங்கள் அதன் மூலம் அமைச்சர் அவர்கள் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

4th March 1961] [Sri P. U. Shanmugam]

(குறுக்கீடு) குழப்பத்தைத் தீர்த்து வைத்தால் வரவேற்கிறேன் என்று அமைச்சர் அவர்கள் சொன்னூர்கள். முடிந்தவரை நானும் முயற்சிக்கிறேன். என்னல் தீர்க்க முடியாவிட்டால் மேற்கொண்டு அதற்கு மருந்து அண்ணு அவர்கள் தருவார்கள். ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு விவசாயமே அடிப்படையாக அமைந்துள்ளது.

ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு விவசாயமே அடிப்படையாக அமைந்துள்ளது என்று, விவசாயம்தான் பொருளாதார வளர்ச்சியின் அடித்தளம் என்று வர்ணித்துவிட்டு விவசாய வளர்ச்சி பற்றி நிதியமைச்சர் அவர்கள் வற்புறுத்தி, வலியுறுத்தி, விளக்கம் தந்திருக்கிறுர்கள். விவசாயத்தை மட்டும் நம்பி நமது பொருளாதாரம் வளர்ச்சி அடையும் என்ருல் இதே அறிக்கையில் 19-ம் பக்கத்தைப் புரட்டிப் பார்க்கலாம். "பொதுவாக தேசிய வருமானம் வளர்ச்சி அடைந்து வருகின்றது என்ருலும் 75% மக்கள் விவசாயத்திலேயே ஈடுபட்டிருக்கக்கூடிய காரணத்திஞலும் மக்களுடைய எண்ணிக்கை நாளுக்குநாள் வளர்ந்துகொண்டே போகின்ற காரணத்திஞலும் தனி மனிதனின் வருமானம் வர வர குறையக்கூடிய நிலைமை ஏற்பட்டு வருகின்றது, பொருளாதார முன்னேற்றம் அடைந்துள்ள நாடுகளில் ஒரு சிறு பகுதியினரே விவசாயத் துறையில் ஈடுபட்டிருக்கின்றனர், மற்றப் பெரும் பகுதியினர் வேறு தொழில்களில் ஈடுபடுகின்றனர், அந்நிலையை நம் நாட்டிலும் ஏற்படுத்துவதன் மூலமாகத்தான் நாட்டிலுள்ள வறுமையைப் போக்க முடியும். ஆகவேதான் நம்முடைய திட்டங்களில் தொழில் வளர்ச்சிக்கு பெரிய முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது" என்று சொல்லியிருக்கிருர்கள். இன்னெரு இடத்தில் இந்த நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு, மக்களின் வாழ்க்கைத் தரம் கனிசமாக உயரவேண்டுமென்று சொன்னல் பெரிய அளவில் தொழில் வளர்ச்சி ஏற்படுத்துவது அவசியம் என்றும் கூறியிருக்கிருர்கள். விவசாயத் துறையில் வளர்ச்சி அவசியம் என்று சொல்லிவிட்டு தொழில் துறையில் வளர்ச்சி அவசியம் என்று இன்னெருயிடத்தில் கூறியிருக்கிருர்கள். தொழில் துறை நமது மாநிலத்தில் வளர முடியாத நிலையில் மத்திய அரசு நம் அரசின் கைகளை இழுத்துக் கட்டியிருக்கும் நிலையில் விவசாயத் துறை வளர்ச்சித்தான் முக்கியம் என்கிருர்கள். ஆனல் உண்மையை ஒப்புக்கொள்ளும்போது தொழில் துறை வளர்ச்சியும் அவசியம் என்று ஒப்புக் கொள்கிருர்கள். தொழில் துறை வளர்ச்சி என்று கூறும்போது சர்தார் வேதரத்னம் அவர்கள் சொல்லியது எனக்கு நினைவிற்கு வருகிறது. தமிழ் நாடு எல்லாத் துறையிலும் முன்னேறியிருக்கிறது என்ருர்கள். என்னைவிட அவருக்கு நீண்ட கால அனுபவம் இருக்கலாம். ஆனல் சர்தார் வேதரத்னம் அவர்களைவிட சிறந்த அரசியல் மேதை என்று தென்னுடு மட்டுமல்ல இந்திய உப கண்டமே ஏற்றுக்கொண்டிருக்கிற ஸர். ஏ. ராமசுவாமி அவர்கள் சில நாட்களுக்கு முன்பு கூறியிருப்பதை நான் பத்திரிகையில் பார்த்தேன். "பல மாகாணங்களையும் சுற்றி சுற்றிப் 11-30 a.m.

பார்த்தேன், அதன் பேரில் கூறுகிறேன், தமிழ் நாடுதான் எல்லா மாகாணங்களிலும் பின் தங்கியிருக்கிறது என்று. கேரள, ஆந்திரா, கர்நாடகா இவைகளுக்கு தமிழ் நாடு முந்தியிருக்கலாம், ஆனால் மற்ற மாநிலங்களோடு தமிழ் நாட்டை ஒப்பிட்டுப் பார்க்கும்போது தமிழ்நாடு பின் தங்கித்தான் கிடக்கிறது " என்று சர் ஏ. ராமஸ்வாமி அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். அதைப் படித்துப் பார்க்கும் போது உள்ளபடியே மெத்த வருத்தமாயிருக்கிறது. தென்னாடு தேயவில்லை, வட நாடு வளரவில்லை என்று அமைச்சர்கள் முதற் கொண்டு ஆளும் கட்சியைச் சார்ந்த அங்கத்தினர்கள் அனைவரும் வக்காலத்து வாங்கிக்கொண்டு பேசுவது கண்டு பரிதாபப் படுகிறேன். மற்ற மாநிலங்களைச் சேர்ந்தவர்களின் சொற்பொழிவு களைப்பார்க்கும்போது மற்ற மாகாணங்களைவிட நம் மாகாணம் வளர்ந்துக் கொண்டிருக்கிறது என்று எந்த அமைச்சரும் ஆளும் கட்சியினரும் சொல்லி நான் கேட்டதில்லை. துர்பாக்கிய மாக தமிழ் நாடு அமைச்சர்களும், இங்குள்ள ஆளும் கட்சியைச் சார்ந்தவர்களும்தான் தமிழ் நாடு வளர்ந்திருக்கிறது, தமிழ் நாடு வளர்ந்திருக்கிறது, மற்ற பகுதிகள் தேய்ந்திருக்கின்றன என்று ஒப்பாரி வைப்பது கண்டு நான் வேதனைப் படுகிறேன், வெட்கப் படுகிறேன். 1957-58-ல் நான் சட்டசபையில் வந்த நாளி லிருந்து வருகிற நிதிநிலை அறிக்கைகளை துருவி துருவிப் பார்த்திருக்கிறேன். 1957-58-ல் நிதியமைச்சர் அவர்கள், சேலம் இரும்பு பற்றிய ஆராய்ச்சி ஜெம்ஷெட்பூரில் நடை பெற்றுக்கொண்டிருக்கிறது என்று கூறியிருக்கிறார்கள். இந்த ஆண்டு அறிக்கையைப் பார்க்கும்போது இங்கிருந்து இரும்பு கனிகளையும், நெய்வேலி பழுப்பு நிலக்கரி யையும் ஜம்ஷெட்பூருக்கு அனுப்ப ஏற்பாடுகள் நடைபெறுகின்றன என்று சொல்லியிருக்கிறார்கள். 1957-58-ல் ஆராய்ச்சி நடை பெற்றுக் கொண்டிருக்கிறதென்று சொல்லிவிட்டு, இப்பொழுது ஆராய்ச்சி செய்வதற்காக இரும்புக்கனி அனுப்ப ஏற்பாடு செய்யப் பட்டு வருகிறது என்று சொல்வதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. இந்த இரும்புக் கனி ஆராய்ச்சி எப்பொழுது முடியப் போகிறதோ, சோதனை, சோதனை என்று சொல்லி எவ்வளவு காலம் தள்ளிப் போடப் போகிறார்கள் இந்த அரசாங்கம். நம் மாநிலத்தில் ஒரு இரும்பு உருக்கு தொழிற்சாலை ஏற்படுத்த இருப்பதுபற்றி குறிப்பிட்டிருப்பது கண்டு பாராட்டுகிறேன். ஆனால் இதை விரைவில் வாங்குவதற்கு, வாதிட்டு வாங்க, இந்த அரசாங்கத்திற்கு ஏன் திராணியில்லாது போய்விட்டது. நமது மாநில கவர்னர் அவர்களைப் பார்த்தாவது அமைச்சர்களுக்கு கொஞ்சம் மானம், வெட்கம், ரோஷம் வளர்ந்திருக்க வேண்டும். ஆஸாமில் ஒரு எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிற்சாலை கொண்டு வருவதற்கு அவர்கள் போரிட்டு, வாதிட்டு மத்திய அரசுடன் சண்டைபோட்டு வாங்கினார்கள் தனது மாநிலத்திற்காக என்பதை தெரிந்து கொண்டிருந்தும் இவர்கள் இன்னும் தெளிவு பெற வில்லையே. அந்தத் துணிவு இந்த அரசாங்கத்திற்கு ஏன் வரவில்லை. சேலம் இரும்புக் கனி இன்னும் தூங்கிக்கொண்டிருக்கிறது. முன்பு

[Sri P. U. Shanmugam] [4th March 1961

சொன்னார்கள், சண்முகத்தின் வார்த்தையைக் கொண்டே சேலம் இரும்பை உருக்கிவிட முடியுமா என்று. வார்த்தையைக் கொண்டு இரும்பை உருக்கிவிட முடியாது. அமைச்சர்களின உள்ளத்தை கூட எங்கள் வார்த்தை உருக்க முடியவில்லையென்றால், சேலம் இரும்பை உருக்கிவிட முடியுமா? இரும்பைவிட கெட்டியாகயிருக் கிறது அமைச்சர்களின் உள்ளம். பின்னர், தூத்துக்குடி துறை முகத்தை விரிவுபடுத்தலாம், பின் சேதுசமுத்திரத் திட்டம் பற்றி முயற்சிக்கலாம் என்றும் இருக்கிறது. நான் கேட்கிறேன், சேது சமுத்திரத் திட்டத்தை ஏன் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கவில்லை, அப்படிச் சேர்ப்பதற்குள்ள துணிவு இவர்களுக்கு ஏன் வரவில்லை. சேதுசமுத்திரத் திட்டம் என்ன தள்ளிப்போட வேண்டிய திட்டமா? இதன் முக்கியத்துவத்தைப்பற்றி குறிப் பிட்டுவிட்டு பின்னர் ஏன் இது தள்ளிப்போடப் பட்டிருக்கிறது? மத்திய அரசாங்கத்தோடு வாதிட்டு ஏன் இதை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்க முயற்சிக்கக் கூடாது? அதே போல் நெய்வேலியில் பல தொழிற்சாலைகள் ஆரம்பிக்கப்படுமென்று 1957-58-லேயே ஆசை காட்டிவிட்டு அவை இன்னும் துவங்கப்பட வில்லை. 1960-க்குள் நெய்வேலிப் பகுதியில் மின்சார உற்பத்தி, பின்னர் பல தொழிற்சாலைகள் துவங்கப்படுமென்று சொல்லப் பட்டது. ஆனால் இது வரை காணோம். இப்பொழுது சொல்கிறார் கள் 1961-க்கும் பிறகுதான் ஆரம்ப வேலைகள் நடைபெறுமென்று. இவ்வளவு காலதாமதம் தென்னகத்திற்கு மட்டும் ஏன் ஏற்பட வேண்டும்? தென்னாடு வளர்ந்திருக்கிறது, வளர்கிறது என்றால் அது தொழில் துறையில் அல்ல, பிச்சைக்காரர்கள் வளர்கிறார்கள் இந்நாட்டில். வறுமை வளர்கிறது இந்நாட்டில், வேலையில்லாத் திண்டாட்டம் வளர்கிறது இந்நாட்டில், இங்கிருந்து வெளி நாடு களுக்கு ஓடினாலோ அங்கு வேலை கொடுப்பார் யாரும் இல்லை, மாறாக அங்கு நாய்களைப் போன்று அடித்து நொறுக்கப் பட்டாலும் அவர் களுக்கு நாதியில்லை. தமிழ் நாட்டிற்காக வாதிட்டு எடுத்துச் சொல்ல ஏன் நிதியமைச்சர் அவர்கள் தயங்குகிறார்கள். கடைசி யாக முடிக்கிற நேரத்தில் ஒரு வார்த்தை முக்கியமாக சொல்ல வேண்டும். இது, பட்ஜெட்டின் எந்தப் பக்கத்தில் இருக்கிறதென்று நிதியமைச்சர் அவர்கள் என்னைக் கேட்க வேண்டாம். மூன்று நான்கு நாட்களுக்கு முன்னர் எனது தொகுதிக்கு அடுத்த தொகுதியில் மந்திரி மாணிக்கவேலர் அவர்கள் சுற்றுப் பிரயாணம் செய்தார்கள். அப்பொழுது அங்குள்ள ரெவின்யூ இன்ஸ்பெக்டர், தாசில்தார், டெப்டி கலெக்டர் அவர்களையும் கூட்டிச் சென்று தேர்தல் நிதி வசூலித்தார்கள். இல்லையென்று மறுக்க முடியுமா? இதை நான் நிரூபிக்கத் தயார். டெப்டி கலெக்டரையும் அழைத்து சென்று 10,000 ரூபாய் வரை தேர்தல் நிதி வசூலித்தார்கள். என்ன துணிச்சல். ஏன் இப்படிச் செய்கிறார்கள், இதுதான் முறையா? பஸ் ஓனர்களை அழைத்து தேர்தல் நிதிக்கு பணம் வாங்கிவிட்டு பஸ் பெர்மிட் கொடுக்கிறார்கள். தேர்தல் செலவிற்கு கொடுத்த பணத்தை ஈடுகட்ட தேர்தல் முடிந்து பிறகு சேலத்திற்கும் சிதம் பரத்திற்கும் பஸ் ரூட்கள் கொடுக்கிறார்கள். ஆனால் அவரது

4th March 1961] [Sri P. U. Shanmugam]

ஹெட்குவார்ட்டர்ஸ் சேலத்திலும் அல்ல, சிதம்பரத்திலும் அல்ல, பின் ஏன் சேலம்-சிதம்பரம் பஸ் ரூட் அவருக்கு கொடுக்கப்பட்டது? மாணிக்கவேலருக்கு தேர்தலில் பணம் செலவு செய்து வேலை செய்தார் என்பதினால்தான் கொடுக்கப் பட்டது என்பதைத் தவிர வேறு என்ன காரணம் கூறுவது. (குறுக்கீடு) டெப்டி கலெக்டரை அழைத்துச் சென்று தேர்தல் நிதி வசூல் செய்தது மூன்று நான்கு நாட்களுக்கு முன். வரப்போகிற தேர்தலானால் என்ன, முன்பு நடந்த தேர்தல் ஆனால் என்ன. நான் குற்றம் சாட்டும்போது ஆதாரமின்றி கூறவில்லை. டெப்டி கலெக்டரை அழைத்துச் சென்று நிதி வசூலித்தார்கள். இதை என்னால் நிரூபிக்க முடியும். எந்த விசாரணையாகயிருந்தாலும் சரி நான் கிராம மக்களை உடன் அழைத்து வந்து கட்டாயம் நிரூபிக்கிறேன். (மணியடிக்கப்பட்டது) இது முறையென்று கருதினால் ஜனநாயகம் இந்த நாட்டில் செத்து விட்டது என்று சொல்லிக் கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : Since the hon. Member, Sri P. U. Shanmugam, dragged my name I have to reply to that. Now as regards someone getting a transport permit and all that I do not know why he should drag my name in that. If anybody gets any permit or anything at once some Minister or somebody is alleged to be connected with it. If the hon. Member makes any allegation, he must be able to prove it with facts and figures and instead of that making sweeping allegations is not fair.

Then as regards the collection of funds, I want to say this. The Minister goes on tour connected with the public work. Naturally officers accompany the Minister. After finishing the official business, he devotes some time in attending to public functions. Apart from that, he utilizes the leisure hours to do party work. From this one should not draw an inference that the officials were used for party work. Therefore it is entirely wrong to indulge in making sweeping allegations against me and unnecessarily dragging my name in this matter.

THE HON. SRI C. SUBRAMANIAM : May I also point out, Sir, that the hon. Member, Sri P. U. Shanmugam, does not know what democracy is. He thinks that the Deputy Collector is more important than the Minister and that the Minister requires the help of a Deputy Collector to collect funds. I really deplore the ignorance of the hon. Member with regard to democratic practice and the democratic set up. He has unnecessarily dragged the name of the Minister and has made irresponsible statement and allegations here.

SRI K. ANBAZHAGAN: ஸார், பாயின்ட் ஆப் ஆர்டர், சட்ட மன்றத்தில் பேசப்படுகின்ற கருத்துக்கள், அவைகள் அமைச்சர்களை குறிப்பிடுவதாக இருந்தாலும் அவைகளை ஜனநாயகத்தில் சொல்லப்படுகின்ற கருத்துக்களாக ஏற்றுக்கொள்ள முடியாதா?

4th March 1961] [Sri K. Anbazhagan]

இவ்விதம் கூறப்படுகின்ற கருத்துக்களை 'இக்னரன்ஸ்' என்ற முறையில் சொல்லப்படுகிறது என்று சொல்லுவது முறையா என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : அறியாமையாகப் பேசினால் அது அறியாமை என்று எடுத்துக்காட்ட வேண்டியது என் கடமை.

SRI P. U. SHANMUGAM: ஸார், பாயின்ட் ஆப் பர்ஸனல் எக்ஸ்பிளனேஷன் . . .

MR. SPEAKER : நீங்கள் இதில் சொல்லுவதற்கு என்ன இருக்கிறது ?

SRI P. U. SHANMUGAM: நிதி அமைச்சர் அவர்கள் சொன்னதற்கு பதில் அளிக்க விரும்புகிறேன்.

MR. SPEAKER: அப்படியானால் பேசுங்கள், ஆனால் சுருக்கமாகப் பேசவேண்டும்.

SRI P. U. SHANMUGAM : கனம் தலைவர் அவர்களே, தங்கள் மூலமாக நான் பணிவோடு தெரிவித்துக்கொள்கிறேன். நிதி அமைச்சர் அவர்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தைப்பற்றி பேசும்போதும், அதிலுள்ள எங்களைப்பற்றி பேசும்போதும், நாங்கள் எல்லாம் அரசியல் தெரியாதவர்கள்; அறியாமையில் மிதக்கின்றவர்கள் என்றெல்லாம் கூறுகிறார்கள். ஜனநாயகத்தை முற்றிலும் தெரிந்த மேதைகள்தான் இந்த நாட்டை ஆளுகின்றார்கள் என்பதை நாங்கள் மறந்து விடவில்லை. இவர்கள் திராவிட முன்னேற்றக் கழகத்திலுள்ள எங்களுடைய கௌரவத்தைப் பற்றியோ, மதிப்பைப் பற்றியோ . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : அதுதான் தெரியாதா, சந்தி சிரிக்கிறதே.

SRI P. U. SHANMUGAM: உங்கள் காரியமும்தான் சந்தி சிரித்தது.

SRI A. GOVINDASAMI: உங்களுக்குள் திருப்பரங்குன்றத்திலும், திருச்செங்கோட்டிலும் கல்லெறி நடந்து கொண்டதும் எங்களுக்குத் தெரியாதா . . .

SRI P. U. SHANMUGAM : ஆகவே நிதி அமைச்சர் அவர்கள் எங்களைப்பற்றி கவலைப்படுவதை . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் அங்கத்தினர் இன்னொரு பிரசங்கமே செய்கிறார் . . .

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் அவர்கள் இன்னொரு பிரசங்கம் செய்யக் கூடாது. அதை நான் அனுமதிக்கவும் மாட்டேன். அடுத்தபடியாக ஸ்ரீமதி பொன்னம்மாள் அவர்கள் பேசுவார்கள்.

[4th March 1961

* SRIMATHI A. S. PONNAMMAL: மதிப்பிற்குரிய தலைவர் அவர்களே, கனம் நிதி அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் வரவு செலவுத் திட்ட அறிக்கையை முழு மனதோடு ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். இங்கே சட்டமன்றத்தில் எதிர்க்கட்சியைச் சேர்ந்த ஒரு சில அங்கத்தினர்கள் இந்தத் திட்டத்தினால் என்ன நன்மை ஏற்பட்டிருக்கிறது, ரயில்வே மூலமாக வருகின்ற பணம், போஸ்டல் மூலமாக வருகின்ற பணம் எல்லாம் மத்திய அரசாங்கத்திற்குத்தான் போகிறது, இதிலிருந்து நமக்கு சரியான பங்கு வாங்க வேண்டாமா, அதற்கு இந்த அரசாங்கத்திற்கு சக்தியில்லையே என்றெல்லாம் வாய்க்கு வந்தபடி என்னவெல்லாமோ பேசுகிறார்கள். நாங்களும், பொருளாதாரம் பேசுகிறோம், எம்.ஏ.எக்னமிக்ஸ் எல்லாம் நாங்களும் படித்திருக்கிறோம் என்ற முறையில் பொருளாதாரம் பேசுகின்றார்கள். உண்மையில் தென் பிராந்திய ரயில்வேயை எடுத்துக்கொண்டால் அது லாபத்தில் நடந்துக் கொண்டிருக்கிறதா அல்லது நஷ்டத்தில் இருக்கின்றதா என்பதையும் நாம் பார்க்கவேண்டும். நஷ்டத்தில்தான் ஓடிக் கொண்டிருக்கிறது என்பதையும் நாம் கொஞ்சம் கவனத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். அது மட்டுமல்ல, உலகத்திலுள்ள நாடுகளை எல்லாம் தன் கீழ் கொண்டு வரவேண்டும் என்ற ஆசை ஒவ்வொரு நாட்டுக்கும் இருந்து கொண்டிருக்கின்றது. அவ்வித மான ஆசை இருக்கும் வரை ஒவ்வொரு நாட்டுக்கும் ராணுவம் பலமாக இருக்க வேண்டியது மிகவும் அவசியம். நாட்டினுடைய வருமானத்தில் 250 கோடி ரூபாய் ராணுவத்திற்காக செலவு செய்யப்படுகின்றது என்பது உண்மைதான். ஆனால் அதே நேரத்தில் திராவிட நாடு பிரிந்தால் கூட அன்றைக்கும் ராணுவம் இருக்கவேண்டியது அவசியம் என்பதை இவர்கள் உணராமல் மத்திய அரசாங்கம் ராணுவச் செலவுக்காக அதிகமாக செலவு செய்கின்றது என்று மக்களுக்கு ஒன்றுமே தெரியாது என்ற நினைப்பில் இதை ஒரு தேர்தல் பிரசாரமாக எண்ணிக்கொண்டு மக்களிடத்தில் சொல்லி வருவது விந்தையிலும் விந்தையாக இருக்கிறது. இன்றைக்கு நாட்டிலுள்ள மக்கள் எப்படியிருக்கிறார்கள் என்றால் ஒவ்வொரு பிரச்னையையும் மக்கள் அலசிப் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். அதோடு மட்டும் அல்ல, பொருளாதாரத்தைப் பற்றி பேசுகிறார்கள் எதிர்க்கட்சியிலுள்ள சில அங்கத்தினர்கள். என்னவெல்லாமோ ஸ்டாடிஸ்டிக்ஸ் என்று சொல்லிக்கொண்டு, ஒரிசாவைப் பாருங்கள், வங்காளத்தைப் பாருங்கள், அந்த மாகாணத்தைப் பாருங்கள், இந்த மாகாணத்தைப் பாருங்கள் என்றெல்லாம் பேசுகின்றார்கள். அந்த நாட்டில் என்ன மூலப் பொருட்கள் கிடைக்கின்றன, நம் நாட்டில் என்ன வெல்லாம் மூலப்பொருட்கள் கிடைக்கின்றன என்பதை எல்லாம் இவர்கள் எண்ணிப்பார்ப்பதே கிடையாது. தமிழ் நாட்டிலுள்ள பொருளாதார உயர்வைப் பற்றியோ, தாழ்வைப்பற்றியோ சொல்ல வேண்டுமானால் 1958-59-ல் எப்படியிருந்தது, 1959-60-ல் எப்படியிருந்தது, இப்போது எப்படி

4th March 1961] [Srimathi A. S. Ponnammal]

யிருக்கிறது என்பதைப்பற்றி புள்ளி விவரங்களை காட்டி சொன்னால் அதை நாம் ஓரளவுக்கு ஏற்றுக்கொள்ளலாம். ஒவ்வொரு மாகாணமும் வளர்ந்து கொண்டு வருகிறது. அந்த முறையில் பார்த்தால் நம் நாட்டில் எந்த விதமான குறையும் இருப்பதாக சொல்ல முடியாது என்பதை சுட்டிக்காட்ட விரும்புகிறேன். இன்னும் சிலர் சில குறைகளைப்பற்றி சொன்னார்கள். அதற்கு சர்தார் ஐயா அவர்கள் எவ்வளவு அழுத்தமாகவும், அழகாகவும் சொல்ல வேண்டுமோ, அவ்வளவு அழுத்தமாகவும் அழகாகவும் எடுத்துக் கூறிவிட்டார்கள். இருந்தாலும் கூட அதைப்பற்றி ஒன்றிரண்டு வார்த்தைகள் கூற விரும்புகிறேன் . தொழில்களைப் பற்றியும் தொழிற்சாலைகளைப்பற்றியும் பேசும்போது எதிர்க்கட்சியி லுள்ள சில அங்கத்தினர்களும் அம்மையார் அவர்களும் கூறினார்கள், பாருங்கள், நெய்வேலியில் நிலக்கரி தொழிற்சாலை, நீலகிரியில் பிலிம் தொழிற்சாலை, சேலத்தில் இரும்புத் தொழிற்சாலை இவைகள் எல்லாம் வரவேண்டும் என்று நாங்கள் கேட்டோம், சுவரொட்டி களை அடித்து ஒட்டியிருந்தோம். இவ்வளவு எல்லாம் செய்தும் கூட அவைகளில் இன்னும் சரியான அளவுக்கு வேலை ஆரம்பிக்கப்பட வில்லை என்று சொல்லுகிறார்கள். சினிமாத்துறையில் வேண்டு மென்றால் நினைத்தவுடன் ஒருவர் கதை எழுதிவிடலாம், நடிக்க வேண்டுமானாலும் நடித்து விடலாம், பாடத் தெரியாவிட்டாலும் கூட இன்னொருவர் பாடி, அவர் மூலமாக நடித்துவிடலாம். அதைப் போன்று இந்தத் திட்டங்களை எல்லாம் செய்துவிட முடியாது. எத்தனையோ இன்சினியர்களை நியமித்து அவர்களைக் கொண்டு ஆராய்ச்சி செய்து பார்த்து எப்படி எப்படி காரியங்களை எல்லாம் செய்து முடிக்க வேண்டும் என்பதைப்பற்றி ஆராய்ச்சி செய்து தான் இந்தத் திட்டங்களை எல்லாம் நிறைவேற்ற வேண்டும். ஆகையால் சினிமாவைப் போன்று இதை (கம்பேர்) மதிப்பிடக் கூடாது என்பதை இத்தருணத்தில் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

இன்னொரு சமயத்தில் கனம் அங்கத்தினர் அம்மையார் அவர்கள் கூறினார்கள் அரிஜன விழாக்கள் நடத்தப்படுகின்றன, ஆனால் அவைகளில் எதிர்கட்சி அங்கத்தினர்களை பேசுவதற்கு அழைப்ப தில்லை என்று எல்லாம் கூறினார்கள். அரிஜன விழா என்பது ஒரு அபிஷியல் ஃபங்ஷனாக நடத்தப்படுகிறது. அரிஜனங்களுக்கு அரசாங்கம் என்னென்ன காரியங்களை செய்கிறார்கள், அரிஜனங் களுக்கு அரசாங்கம் என்னென்ன உதவிகளை செய்து கொடுத்துக் கொண்டிருக்கிறது, அவர்களுடைய பொருளாதார நிலை எப்படி யிருக்கிறது, அதை உயர்த்துவதற்கு அரசாங்கம் என்ன செய்து கொண்டிருக்கிறது என்பதைப்பற்றி பேசவேண்டுமே தவிர, ஏதோ அரசாங்கம் அரிஜனங்களுக்காக செய்கின்ற காரியங்களில் எல்லாம் அப்படி ஊழல் இருக்கிறது, இப்படி ஊழல் இருக்கிறது என்று பேச வேண்டுமென்றால் நிச்சயமாக அதற்கு, காங்கிரஸ் கட்சி அங்கத்தினர்களாக இருந்தாலும் சரி, எதிர்க்கட்சி அங்கத்தினர்களாக இருந்தாலும் சரி கலெக்டர் அவர்கள் அனுமதி தர மாட்டார்கள் என்பதை அழுத்தமாக கூற விரும்பு

[Srimathi A. S. Ponnammal] [4th March 1961]

கிறேன். உண்மையாகவே அரசாங்கத்தார் அரிஜனங்களுக்கு என்னவெல்லாம் செய்து கொடுத்துக்கொண்டிருக்கிருர்கள் என் பதைப்பற்றி சொல்லுவதற்கு எதிர்கட்சி அங்கத்தினர்கள் முன் வருவார்கள் என்ருல் அவர்களுக்கும் அங்கு முதலிடம் அளிக்கப் படும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன.

அடுத்தபடியாக நம்முடைய நிதி அமைச்சர் அவர்களுடைய உரையைப்பற்றி பேச வருவோமேயானுல், அதில் முதலாவதாக விவசாயத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருக்கிறது. முதலில், நாம் எதிர்பார்த்த அளவுக்கு இன்றைக்கு உற்பத்தியை பெருக்க முடியவில்லை என்று அமைச்சர் அவர்கள் கூறி யிருக்கிருர்கள். அது ஓரளவுக்கு உண்மையாக இருந்தாலும் கூட, நாம் விவசாய உற்பத்தியை பெருக்கிக்கொண்டுதான் இருக் கிருேம். இதில் முக்கியமாக விவசாயிகளுக்கு அவசியப்படுகிற நேரத்தில் போதுமான அளவு உரம் கிடைக்காமல் இருப்பதாலும் போதிய அளவு உற்பத்தி செய்ய முடியாத நிலை ஏற்படுகிறது. உற்பத்தியை அதிகமாக பெருக்குகின்றவர்களுக்கு மான்யங்கள் பரிசுகள் இவைகள் எல்லாம் நாம் கொடுக்கிருேம். இதே போன்று இயற்கை வளம், கம்போஸ்ட் உரம் இவைகளை அதிகமாக தயாரிக் கும் விவசாயிகளுக்கும் மான்யங்கள், உதவிகள், பரிசுகள் இவைகள் எல்லாம் கொடுக்கக் கூடிய ஒரு திட்டம் வகுத்தால் நம்முடைய நாட்டில் செயற்கை உரத்தை எதிர்பார்க்காமல் இதைக் கொண்டே அதிகமாக உற்பத்தி செய்ய முடியும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். இதில் அமைச்சர் அவர்கள் கவனம் செலுத்தி இதற்காக வேண்டிய வழிவகை செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதேபோன்றுதான் நீர்ப்பாசன வசதிகளை பொறுத்த மட்டிலும் பின்தங்கிய இடங்களில் நீர்ப்பாசன வசதி களை செய்து கொடுப்பதற்கு எத்தனையோ லட்சக்கணக்கான ரூபாய்களை செலவு செய்துகொண்டிருக்கிருேம். அதில் முக்கிய மாக சில இடங்களில் சில நீர்ப்பாசனத் திட்டங்கள் அன்-எகனு மிக்கல்-ஆக இருக்கிறது என்கிற காரணத்திற்காக அதை விட்டு விடக் கூடாது. உதாரணமாக என்னுடைய தொகுதியில் இருக்கிற சாத்தியாறு திட்டம் பல முயற்சிகளுக்குப் பின்னுல் தான் இப் போது செக்ரட்டரியேட்டுக்கு வந்து ரீ-சர்க்குலேஷனுக்குப் போய்க்கொண்டிருக்கிறது. ஆகவே இம்மாதிரியான வரண்ட பிர தேசங்களில் நடக்கவிருக்கும் திட்டங்களை துரிதமாக நடத்த வழி வகை செய்யவேண்டும். அதேபோன்றுதான் ஆழமான கிணறுகள் வெட்டுவதற்கும் பல உதவிகள் செய்து கொடுக்கப்படுகின்றன. சாதாரணமாக இதற்காகக் கொடுக்கப்படும் தொகையைவிட இரண்டு மடங்கு செலவு செய்ய வேண்டியிருக்கிறது. அம்மாதிரி யான கிணற்றிற்கு மின்சாரம் பொருத்தும் போது அதன் செல வும் இரட்டிக்கும். அம்மாதிரியான் இடங்களுக்கு மின்சார கட்டணத்தையும் குறைக்கவேண்டும். கிணறுகளுக்கு பம்ப் செட் வைப்பதற்கு பிளாக் டெவலப்மெண்ட் ஆபீஸ்களிலிருந்து கடன் வழங்கப்படுகிறது. ஆனல் சில இடங்களில் செக்யூரிட்டி போதாது

4th March 1961] [Srimathi A. S. Ponnammal]

என்று கடனை கொடுக்க மறுத்துவிடுகிறார்கள். இதனால் பல தொல்லைகள் ஏற்படுகின்றன. ஆகவே இதை நிவர்த்தி செய்ய வேண்டுமென்றால், ஒருவனுக்கு 4 ஏக்கர் டிரை லான்டாக இருக்கிறது என்றால் அதை செக்யூரிட்டியாக எடுத்துக்கொள்ள போதா விட்டால் கொடுக்கும் பம்ப் செட்டையே செக்யூரிட்டியாக வைத்துக்கொண்டு கடன் கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டும். அப்போதுதான் மிகவும் பின் தங்கிய பகுதிகளில்-வரண்ட பகுதிகளில் வாழும் மக்களுக்கு உதவியாக இருக்கும்.

அடுத்தபடியாக, தொழில் வளர்ச்சியைப்பற்றி சர்தார் ஐயா அவர்கள் விளக்கமாகக் கூறினார்கள். நமது நாட்டில் தொழில் பல நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து கொண்டு வருகிறது. இருந்தும் கூட பலருக்கு வேலை வாய்ப்பு தரமுடியாத நிலைமை இருந்து கொண்டிருக்கிறது, ஆகவே தொழிற்சாலைகளை ஏற்படுத்தும்போது ஒரு குறிப்பிட்ட இடத்தில்தான் எல்லாவற்றையும் ஏற்படுத்த வேண்டுமென்று இல்லாமல் பரவலாக எங்கு எங்கெல்லாம் மூலப்பொருட்கள் கிடைக்கின்றனவோ அங்கெல்லாம் தொழிற்சாலைகளை ஏற்படுத்தி அங்குள்ளவர்களுக்கு வேலை கிடைப்பதற்கான வாய்ப்பை அளிக்கவேண்டும் என்று மிகவும் பணிவோடும் தாழ்மையோடும் கேட்டுக்கொள்கிறேன். காகிதத் தொழிற்சாலை ஒன்றை எனது தொகுதியில் ஆரம்பிக்கவேண்டும் என்று நான் பல முறை கூறியிருக்கிறேன். எங்கள் பகுதியில் செங்கல் தொழிலைத் தவிர வேறு இல்லை. இப்போது பாண்டிய ராஜபுரத்தில் சர்க்கரை மில் ஒன்று இருக்கிறது. அங்கே கரும்புச் சக்கை நிறைய இருக்கிறது. அதைக் கொண்டு காகிதம் தயாரிக்க வாய்ப்பு இருக்கிறது என்று சொல்லப்படுகிறது. அப்படிப்பட்ட தொழிற்சாலை ஒன்றை வாடிப்பட்டியில் ஏற்படுத்தினால் பின்தங்கி இருக்கக்கூடிய பகுதிக்கு வசதியாக இருக்கும்.

அதே போல் மூங்கில். பெரியாறு வாய்க்கால் பகுதியில் மூங்கிலை உற்பத்தி செய்து, பிற்பட்ட பகுதிகளில் காகிதத் தொழிற்சாலை ஆரம்பிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக கிராமத் தொழில்கள். கைத்தறி பற்றிப் பேசுகின்றவர்கள், கைத்தறிக்காக கண்ணீர் வடிக்கிறோம் என்று பேசக்கூடியவர்கள் கையால் நூற்கக்கூடிய கதரை ஆதரிக்காமல், கதர் கட்டினால் காங்கிரஸ்காரர் என்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். அரசாங்கமும், சர்வ சேவா சங்கமும் சேர்ந்து ஏறக்குறைய 5 லட்சம் பேர்களுக்கு வேலை வாய்ப்பு கொடுத்திருக்கிறார்கள். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் அம்பர் சர்க்காவை கிராமங்களில் விரிவுபடுத்தினால் இந்தத் தொகை 6 அல்லது 7 லட்சமாக உயர்ந்து விடும். அதனால் அந்த அளவுக்கு வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க முடியும். உதாரணமாகச் சொல்லவேண்டுமென்று சொன்னால் என்னுடைய தொகுதியாகிய நிலக்கோட்டையில் ஒரு பெண் நூல் நூற்று மாதம் 90 ரூபாய் சம்பாதிக்கும் அளவுக்கு வேலை செய்கிறாள் என்று நான் பெருமையோடு சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக குடிநீர் திட்டம். இதில் இப்போது நேஷனல் வாட்டர் சப்ளை ஸ்கீமில் ஆற்றுப் பாசன கால்வாயிலிருந்து எடுத்திருக்கிறார்கள். எனது தொகுதியில் 98 கிணறுகள் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன. இவைகள் 1961-ம் ஆண்டு மார்ச் மாதத்திற்குள் முடிக்கப்படவில்லையென்றால் அடுத்த ஆண்டிலிருந்து சில பிளாக்குகளைத் தவிர பாக்கி இடங்களில் இந்தத் திட்டம் நிறுத்தப்படும் என்று ஒரு சிலர் கூறிக்கொண்டிருக்கிறார்கள். இந்த வேலை நடக்காததற்குக் காரணம் மின்சாரம் இல்லாததுதான். அதனால்தான் பல கிணறுகள் வேலை ஆரம்பிக்கப்படாமல் இருக்கின்றன. ஆகையால் மின்சாரத்தை அதிகமாகக் கொடுத்து 1961-62, 1962-63, 1963-64-ம் ஆண்டுகளுக்கு இந்தத் திட்டத்தை நீடித்து எல்லாப் பகுதிகளுக்கும் பூராவாகக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

வீட்டு வசதியை எடுத்துக்கொண்டால் தொழில் அமைச்சர் அவர்கள் கூறினார்கள், விவசாயிகளுக்கு வீடு கட்டும் திட்டம் இருக்கிறது என்று. இந்தத் திட்டத்தின்படி 87½ சத விகிதம் சர்க்கார் கடன் கொடுக்கிறது என்றும் பாக்கி 12½ சத விகிதம் விவசாயிகள் முன் பணம் போட்டு வீடு கட்டிக்கொள்ள திட்டம் வகுத்திருக்கிறது என்று சொன்னார்கள். திட்டம் வகுத்திருந்தும் மக்களுக்கு இது தெரியவில்லை. எல்லா பிளாக்குகளுக்கும் இந்த உத்திரவை அனுப்பி மக்களுக்கு அறிவிக்க ஏற்பாடு செய்தால் சௌகரியமாக இருக்கும்.

கடைசியாக கல்வித் திட்டத்தை எடுத்துக்கொண்டால் எல்லா குழந்தைகளுக்கும் ஜாதி மத வித்தியாசம் இல்லாமல் 11-வது வகுப்பு வரையில் இலவசமாக படிப்பு வசதி செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது. அம்மையார் அவர்கள் பேசும்போது ஜாதியே இருக்கவேண்டும் என்று கூறினார்கள். ஜாதி இருக்கவேண்டுமென்று ஒத்துக்கொண்டாலும், ஹரிஜனங்களிலே கூட ஒரு சிலர் பணக்காரர்களாக இருக்கிறார்கள். எவ்வளவு இருந்தாலும் அவர்கள் இனமாகப் படிக்கிறார்கள் என்று கூறிக்கொள்ளுகிறேன். மேலும் மேலும் ஜாதி ஜாதி என்று வித்தியாசத்தை வளர்த்துக் கொண்டு போகவேண்டாமென்று கேட்டுக்கொள்கிறேன். பகல் உணவுத்திட்டத்தில் 10-12 லட்சம் பேர்களுக்கு உணவு கொடுக்கிறோம். துணி கொடுக்கிறோம். இப்போது இருப்பது போல் 6 நயா பைசா என்ற அடிப்படையில் கொடுக்காமல் எவ்வளவு அரிசி வேண்டும் என்ற அடிப்படையில் . . . . (மணியடிக்கப்பட்டது.)

**Mr. SPEAKER** : மணி அடித்ததும் அங்கத்தினர் உட்கார வேண்டும். 'கடைசியாக' என்று சொன்னவுடன் சீக்கிரத்தில் பேச்சை முடித்து விடுவார் என்று எதிர்பார்த்தேன். ஆனால் மூன்று நிமிஷங்கள் ஆகிவிட்டன. மணியடிப்பதைத்தவிர எனக்கு வேறு வழியில்லை. இப்பொழுது வி. கே. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் பேசுவார்.

4th March 1961]

* **Sri V. K. KRISHNAMURTHY :** அவைத் தலைவர் அவர்களே, மதிக்கும், நிதிக்கும், நீதிக்கும் அமைச்சராய் விளங்கும் திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் அமைத்த வரவு செலவுத் திட்டம் இவண் இலங்குகிறது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் இனிதே முடிந்து, மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டம் மலரும் பொழுது தமிழ் நாடு என்ற பெயர் பெற்று வரவு செலவுத் திட்டம் விளங்குகிறது.

பல்லாற்றுனும் தமிழகம் நலம் பெற்று, வளம் பெற்று விளங்கல் வெள்ளிடை மலை. கழிந்த பத்தாண்டுகளில் எய்திய சாதனை களும், மேற்கொண்டு எய்த இருக்கும் சாதனைகளுக்குரிய வழி வகைகளும் விளங்குகின்றன. நலத்தை நல்கி, வளத்தை வழங்கிய இத்திட்டம் பழம் மலிந்த சருக்கமெனத் திகழ்கிறது என்றுலும், இதைப் பழிமலிந்த சருக்கமெனத் திரித்துக்கூறும் இயல்புடை யோரில்லாமலில்லை.

தமிழ்நாடு பொருளாதாரத் துறையில் பெரு வளர்ச்சி எய்தி யிருப்பது நாடாளும் அமைச்சரவையின் திறமைக்கோர் எடுத்துக் காட்டு. நாடு முன்னேற்றம் எய்தி விரைந்து சென்று மன்பதை மகிழ்வில் திகழும் என்ற நல்ல நம்பிக்கையூட்டுகிறது.

வரியில்லாமலிருக்கிறது என்றதும் இன்புறுமலிருக்க இயல வில்லை.

ரூ. 25,000 வரை விற்பனை செய்யும் வியாபாரத்திற்களித்த சலுகை ரூ. 50,000 வரை நீடிக்கப்பட்டிருப்பதைப் பெரிதும் பாராட்டுகின்றேன்.

6 முதல் 11 வயது வரையில் உள்ள எல்லா மாணவர்களுக்கும் கட்டாயக் கல்வி அளிக்கும் திட்டம் மிகச் சிறந்த திட்டம். 300 மக்கள் இருக்கும் ஏனைய கிராமங்களிலும் பள்ளிக்கூடம் இருந்தே தீரவேண்டுமென்ற திட்டம் நல்ல திட்டம். எல்லா ஏழை மாணவர் களுக்கும் 11-வது வகுப்புவரை இலவசமாக கல்வி அளிக்கும் திட்டம் மிக மிக நல்ல திட்டம். சமுதாயத்திற்கு வாழ்வளிக்கும் இவ்வரவு செலவுத் திட்டத்தை வரவேற்றுப் பாராட்டுகிறேன்.

ஆண்ட ஆங்கிலேயன் அகன்ற பிறகு அந்த ஆட்சியே சிறந்த ஆட்சி என்றும், உயர்ந்த ஆட்சி என்றும் உயர்த்திக் கூறியதை ஆராய்தல் வேண்டும். ஆங்கிலேய ஆட்சியிலே தமிழகத்தில் ஒரே அணைக்கட்டு இருந்தது; இன்று தமிழகத்தில் பதின்மூன்று அணைக்கட்டுகள் இருக்கின்றன. இதைவிடச் சிறந்த சாதனை வேறு என்ன வேண்டும்?

உணவு உற்பத்தியை உற்று நோக்கின் 1950-51-ல் அரிசி 19·5 லட்சம் டன்; 1960-61-ல் அரிசி 35·5 லட்சம் டன்; 16 லட்சம் டன் அரிசி அதிக உற்பத்தியல்லவா? மற்ற மாநிலங்களை விட ஓர் ஏக்கருக்கு தமிழகத்தில் நிரம்ப உற்பத்தி என்பது நன்கு புலனு கிறது. அதாவது 1,332 ராத்தல்; இந்த அளவிற்கு வட நாட்டில் உற்பத்தியில்லை; உற்பத்தி இல்லை என்று வடநாடு வாடுகிறது; உற் பத்தி அதிகமென்று தமிழகம் தழைக்கிறது.

மற்ற மாநிலங்களில் சராசரி கரும்பு உற்பத்தி ஓர் ஏக்கருக்கு 14·7 டன்; ஆனால், நம் தமிழகத்தில் சராசரி ஓர் ஏக்கருக்கு 25·9 டன். வட நாடு வாடுகிறது; தமிழகம் தழைக்கிறது.

பெரிய நீர்ப் பாசனத் திட்டங்களால் 25·36 லட்சம் ஏக்கர் நிலம் கால்வாய்ப் பாசனம் பெற்றுள்ளன. இது நாட்டு வளர்ச்சியைக் காட்டுகிறதா? அல்லது தளர்ச்சியைக் காட்டுகிறதா?

கடந்த பத்து ஆண்டுகளில் சிறிய நீர்ப்பாசனத் திட்டத்திற்கு செலவிட்ட தொகை ரூ. 8 கோடி; ஆனால், மூன்றும் ஐந்தாண்டுத் திட்டத்திற்கு ஒதுக்கப்பட்ட தொகை ரூ. 8 கோடி.

அன்று ஆங்கில ஆட்சியில் விளங்கிய பள்ளிக்கூடங்கள் எத்தனை? இன்று விளங்குகின்ற பள்ளிக்கூடங்கள் எத்தனை? பள்ளிக்கூடம் இல்லாக் கிராமம் இல்லை. அன்று இருந்ததா இவ்வாறு? சார் பிடியிலிருந்து விலகிய ரஷ்யா, மூன்றும் ஜார்ஜ் பிடியிலிருந்து விலகிய அமெரிக்கா, எந்த அளவிற்கு ஆரம்பக் கல்விக்குச் செலவு செய்ததோ அதைவிட தமிழகம் ஆரம்பக் கல்விக்கு அதிகமாகச் செலவு செய்து கல்வியைப் பரப்பி இருக்கிறதே; இதை மறுக்க முடியுமா? இந்த அளவிற்கு இந்தியாவில் எந்த மாநிலத்தில் செலவு செய்யப்படுகிறது?

ஏழை மாணவர்களுக்கு இலவச நண்பகல் உணவு நல்கி, உடை நல்கி, பலகை, புத்தகங்கள் நல்கி, அறிவறிந்த மக்களாக்கும் அறப்பணி சமுதாயத்திலே மலர்ந்து தமிழகத்திலே திகழ்ந்து மற்ற மாநிலங்களிலே பரவி, இந்தியாவில் இணையற்றதாக இலங்கி, கீழ் நாட்டிலே கீர்த்தி பெற்று உலகத்திலே உயர்ந்த முதல் உன்னத திட்டமாக உலவுகிறதே பள்ளிச் சீரமைப்புத் திட்டம். பச்சிளங் குழந்தைகளிடையே நிலவியுள்ள பட்டினியை விரட்டியடிக்கும் திட்டமல்லவா? இந்தியாவிற்கு வழிகாட்டுகிறதே; உலகுக்கும் வழி காட்டுகிறதே; இது மலர்ந்தது தென்னகத்திலா அல்லது வட நாட்டிலா?

மின்சார இயக்கம் மின்னல் வேகத்தில் பரவியிருக்கிறது. 1951-ல் சராசரி 12 யூனிட் அனுபவித்தனர். ஆனால், தற்பொழுது 1961-ல் சராசரி 60 யூனிட் அனுபவித்து வருகிறதைக் கண்கூடாகக் காண்கிறோம். இன்று தமிழகத்தில் பன்னீராயிரம் கிராமங்களுக்கு விவசாயத்திற்கு மின்சாரம் வழங்கப்பட்டு வருகிறது. இந்த அளவிற்கு வட நாட்டில் எந்த மாநிலத்தில் மின்சாரம் இயங்குகிறது?

வியக்கத்தகு சாதனைகளால் தமிழகம் அடைந்துள்ள முன்னேற்றங்கள் புலப்படவில்லை. குருட்டரசனுக்குக் கொளுத்திய விளக்காக அல்லவா விளங்குகிறது? தமிழகம் ஒளி பெற்று விவசாயம் வளர்ச்சியுற மின் இயக்கம் பரப்பப்பட்டிருப்பதை பாராட்டாமல் என்ன சாதனை என்று ஏதமுற வினாக்கள் எழுகின்றனவே? என் செய்வது?

[Sri V. Krishnamuthy] [4th March 1961

வேலையில்லாத் திண்டாட்டம் தீரவில்லை என்று கூப்பாடு போடுகிறார்கள். இரண்டாம் யுத்த பிற்காலத்தில் எந்த நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம் நீங்கி இருக்கிறது? பெரிய யந்திரங்களை வைத்து நாட்டு வளர்ச்சிக்குப் பாடுபடும் மேல் புல நாடுகளிலேயே வேலையில்லாத் திண்டாட்டம் மறைந்தபாடில்லை. குறைந்தபாடில்லை.

மேல் புலத்தை இதயத்தில் வைத்து இந்த நாட்டு நிலையை நவின்று எள்ளி நகையாடுகின்றார்கள். வளர்ச்சி இல்லை, முன்னேற்றம் இல்லை என்று கூப்பாடு போடுகிறார்கள். என்னைப் பார்க்க வேண்டுகிறேன், அந் நாடுகளையும், நம் நாட்டையும் ஒப்பு நோக்கி. ஒரு சதுர மைலுக்கு மக்கள் நெருக்கம் சுமார் 40; மற்ற நாட்டில் ஒரு சதுர மைலுக்கு மக்கள் நெருக்கம் சுமார் 36; இந்தியாவில் சராசரி ஒரு சதுர மைலுக்கு மக்கள் நெருக்கம் சுமார் 300 அல்லது 350; தமிழகத்தில் இதைவிட ஒரு சதுர மைலுக்கு மக்கள் நெருக்கம் சிறிது கூடுதலாகவே இருக்கிறது. இதன் அடிப்படையிலன்றோ நம் நாட்டு நிலையை நன்கு ஆராய வேண்டும். மிகக் குறைந்த நெருக்கமுடைய நாடுகளை, மிக மிக அதிகமான பன்மடங்கு நெருக்கம் நிறைந்த நம் நாட்டுடன் ஒப்பு நோக்கி எள்ளிநகையாடல் பொருந்தாக் கூற்று. நம் இந்தியாவைவிட எண் மடங்கு நிலப்பரப்பில் அதிகமும் மக்கள் தொகையில் பாதியும் கொண்ட ரஷ்யாவை இழுத்து வளர்ச்சியைப் பார் என்றும், அவர்களுடன் ஒத்துப் பாடுபவர்களும் கூறுவார்கள். மாக்சீய அரசியல் சமுதாயப் பொருளாதாரச் சித்தாந்தமோ அல்லது மற்ற அரசியல் சமுதாயப் பொருளாதாரச் சித்தாந்தமோ நம் நாட்டுக்கு வழி வகையை வழங்க இயலுமா?

இந்நாட்டு இயற்கை நிலை, வளமை நிலை, மூலப் பொருள் நிலை, சமுதாயப் பண்பு நிலை, இவைகளைக் கொண்டே நடைமுறைக்கு ஏற்ற, பலனளிக்கும் வகையில் எதிர்பார்த்ததைவிட நற்பலன் கிட்டியிருக்கும் வகையிலும், துறையிலும் பணி புரிந்து முன்னேற்றம் எய்த வைத்த இந்த அமைச்சர் அவையைப் பாராட்டுகிறேன். இதைவிடச் சிறந்த முறையை, வழியை, துறையைத் துருவி ஆராய்ந்து அறிந்தவர்கள் யார்?

ஹரிஜன முன்னேற்றத்தை, அமெரிககாவிலுள்ள நீக்ரோ முன்னேற்றத்தை, ஆகிய இரண்டையும் ஒப்பு நோக்கிப் பார்க்க வேண்டும். செல்வங் கொழிக்கும் அமெரிக்காவிலுள்ள நீக்ரோக்களைவிட நம் அரிஜன மக்கள் நன்கு முழு உரிமையுடன் வாழ்கிறார்கள். இங்கு அரிஜனங்கள் செல்லாத இடமில்லை. வழிபடாத கோயில் இல்லை. பெறாத உத்தியோகமில்லை. அடையாத சலுகை இல்லை. ஒத்தாரும், உயர்ந்தாரும், தாழ்ந்தாரும் ஒருமையுளராகி உலகியலை இயங்கவைக்க ஆற்றிய பணியில் பலன் கண்டது இன்றைய அமைச்சர் அவை.

[Sri V. K. Krishnamurthy] [4th March 1961

இவை எல்லாவற்றையும் ஒப்புநோக்காது திரித்துக் கூறும் இயல்புடையவர்களைக் கண்டு வருந்துகின்றேன். கன ரகத் தொழில், சேலம் இரும்பு, தென்னாற்காடு நிலக்கரி விரைவில் உருவாகவில்லை என்று ஊறுற உரைக்கின்றனர். வளர்ச்சிக்கு அமைச்சர் அவை ஆவன புரிகிறது. கற்பனையில் கதை தீட்டி, கட்டுரை புனைந்து, பாத்திரங்களை படைத்து படத்தில் காட்டுவது அன்று தொழில் வளர்ச்சி, தொழில் முன்னேற்றம். ஆனால், அறிவியலார், அயல்நாட்டு நிபுணர்கள் ஆய்வின் முடிவை அடிப்படையாகக் கொண்டிருப்பதேயன்றி படம் எடுப்பதைப் போன்றதன்று.

12 noon வட ஆற்காடு மாவட்டத்தைப் பொறுத்த அளவில் ஆறு இருந்தும் நீரில்லை; உள்ள நீரை விவசாயத்திற்குப் பயன்படுத்தக் கூடாதென்ற 'பாலார் பேஸின் ஆக்ட்' இப்பொழுது அமுலில் இருக்கிறது. இந்த சட்டத்தை ரத்து செய்து வரண்ட வடாற்காட்டிற்கு வாழ்வளிக்க அமைச்சரவையைக் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

வடாற்காடு மாவட்டத்தில் மிகச் சிறந்த முறையில் விரைந்து விவசாயத்திற்கு மின்சாரம் பயன்படுத்தப்படுகிறது. என்றாலும், சில பகுதிகள் தனியார் துறையில் கட்டுண்டிருப்பதால் (வேலூர் எலெக்ட்ரிஸிடி கார்ப்பரேஷன்) மின்சாரம் பரப்பப்படவில்லை. குறிப்பாக, கணியம்பாடி பகுதி வட்டார வளர்ச்சியில் இருப்பினும் மின்சாரம் பரப்பப்படவில்லை. ஆதலால், அருள் கூர்ந்து மின்சார அமைச்சர் தலையிட்டு கணியம்பாடிப் பகுதிக்கு மின்சாரம் பரப்ப ஆணையிடுமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

கிராமப் பகுதிகளில் போக்குவரத்திற்கு அரண் செய்யும் பாதைகள் இல்லை. விளைந்த பொருள் வெளியே போகவும், வெளியார் வந்து பெற்றுச் செல்லவும் பாதை இல்லை. இதைத் தெரிந்து கிராமப் பகுதிகளில் அதிகமாகப் பாதைகள் போட்டு, கிராம மக்கள் வளம்பெற ஆவன செய்யலாம்.

வேலூர் தாலுக்காவில் அணைக்கட்டு, அப்புக்கல், கீழ்க்கொத்தூர், ஒடுகத்தூர் இவ்வழியாக நல்ல பாதை போட்டே தீர வேண்டும். கழிந்த முப்பது ஆண்டுகளாக புறக்கணிக்கப்பட்ட பகுதி.

வேலூர் நகரத்திலிருந்து போகும் டவுன் பஸ்களை 15 மைல் தொலைவிற்கு விரிவாக்கவும், வேலூரிலிருந்து ஊசூர் வரை டவுன் பஸ் போக ஏற்பாடு செய்யவும், வேலூரிலிருந்து கல்பட்டு வரை பஸ் போகவும் ஆவன செய்யவேண்டும்.

இவ்வாண்டு வரவு செலவுத் திட்டத்தைப் பாராட்டி வரவேற்கின்றேன். வாழ்த்துகின்றேன். வணக்கம்.

**SRI N. MARUDACHALAM :** சபாநாயகர் அவர்களே, இன்றைய 1961-62 வருஷத்திய வரவு செலவுத் திட்டத்தைப் பற்றி என்னுடைய கருத்தைக் கூற விரும்புகிறேன். அதாவது இந்த

4th March 1961] [Sri N. Marudachalam]

வரவு செலவுத் திட்டத்திலே முக்கியமாக விவசாயத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருக்கிறது. விவசாயமானது சென்ற வருஷத்திலே எந்த அளவிலே தானிய உற்பத்தியிலே அதிகரித்திருந்ததோ, அதைவிட பன்மடங்கு இந்த வருஷம் அதிகரித்திருக்கிறது என்பதை இந்த வரவு செலவுத் திட்டத்திலே இருந்து தெரியவருகிறது. அப்படி அதிகரித்திருந்தும், எவ்வளவுக்கெவ்வளவு அதிகரித்திருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு விலைவாசிகள் இரட்டிப்பாக உயர்ந்து கொண்டிருப்பதற்குக் காரணம் என்னவென்று தெரியவேண்டும். அதாவது இன்று தானியமானது விளைந்து, விவசாயினுடைய வீட்டிற்கு வரும் போது, அந்த தானியத்தின் விலையானது குறைந்துவிடுகிறது. அதே சமயத்தில் ஒரு வியாபாரியினுடைய கைக்கு அந்த தானியம் மாறுகின்ற போது விலைவாசி அதிகமாக உயர்ந்துவிடுகிறது. இதற்குக் காரணம் தனிப்பட்ட ஒரு முதலாளிக்கு ஊக்கம் கொடுப்பதுதான். அவர்கள் தங்கள் இஷ்டம் போல் விலைவாசிகளை உயர்த்துவதற்கு ஒரு சந்தர்ப்பமும், சூழ்நிலையும் ஏற்படுகிறது. அதே சமயத்தில் நாம் தொழில் துறையில் முன்னேறிக்கொண்டு வந்திருப்பது வாஸ்தவம்தான். அப்படி தொழில்துறையிலே நாம் முன்னேறி இருந்தாலும்கூட, வேலை இல்லாத் திண்டாட்டம் ஒழிந்த பாடில்லை. நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டுதான் வருகிறது. இந்த வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிப்பதற்கு, இன்றைக்கு அரசாங்கம் இந்த தனிப்பட்ட முதலாளிகளுக்கு சலுகைகள் எதுவும் கொடுக்கக் கூடாது. அப்படி சலுகைகள் கொடுக்காவிட்டால், இந்த வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழித்து விட முடியுமென்று கருதப்படுகிறது. ஆகவே இதைப் போக்குவதற்கு சர்க்கார் உடனடியாக ஒரு முறையைக் கையாள வேண்டும். அதாவது இன்றைக்கு ஒரு மில்லை ஒரு தனிப்பட்ட முதலாளி கட்டி, அதற்கு அனுமதி கொடுக்கவேண்டுமென்று சர்க்காரைக் கேட்டால், உடனடியாக எந்தவித நிபந்தனையும் இல்லாமல் அவர்களுக்கு அனுமதி வழங்கப்படுகிறது. சர்க்காரின் அனுமதியின் பேரில்தான் மில் கட்டப்படுகிறது. அப்படி மில்லைக் கட்டும்போது, வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்க வேண்டுமானால், இன்றைக்கு இந்த நாட்டிலே உள்ள ஹரிஜன மக்களுடைய வாழ்க்கைத் துறையையும், பொருளாதாரத் துறையையும் உயர்த்த வேண்டுமானால், அவர்கள் அப்படி மில்லைக் கட்டும்போதே ஒரு கட்டுப்பாட்டை விதிக்கவேண்டும். அதாவது 100-க்கு 35 சதவிகிதம் தாழ்த்தப்பட்ட மக்களை வேலைக்கு எடுத்துக்கொள்ள வேண்டும் என்ற ஒரு நிபந்தனையை விதித்து, அவர்களுக்கு லைசன்ஸ் கொடுப்பார்களேயானால், அதன்மூலம் இந்த நாட்டிலே வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்க முடியும். அதே சமயத்தில் தாழ்த்தப்பட்ட மக்களின் வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்துவதற்கு ஒரு வசதி செய்து கொடுக்க முடியும். இந்த முறையைச் சர்க்கார் கையாண்டு, முதலாளிகளுடைய சலுகைகளை ஓரளவு கட்டுப்படுத்த வேண்டும். இல்லாவிட்டால் அவர்களுக்கு வேலை கிடைப்பதிலே பல கஷ்டங்கள் ஏற்படுகிறது. நேரடியாக ஒவ்

[Sri N. Marudachalam] [4th March 1961

வொரு இடத்திலும் இதைச் சென்று பார்த்தால் தெரியும். இன்றைக்கு பாப்பநாயகன்பாளையத்தில் ஒரு மில் கட்டப்பட்டிருக்கிறது. அங்கு தாழ்த்தப்பட்ட மக்களுக்கு வேலை கொடுப்பதில்லை. தங்களைச் சார்ந்தவர்களைத்தான் அவர்கள் வேலைக்கு வைத்திருக்கிறார்கள். ஆகவே இப்படி ஒரு நிபந்தனை விதித்தால்தான் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுக்கக்கூடிய சூழ்நிலை ஏற்படுகிறது. இந்த முறையைச் சர்க்கார் உடனடியாக அமுலுக்குக் கொண்டுவர முயற்சி செய்யவேண்டும். தனிப்பட்டவர்களுடைய மூலதனத்திலே நாம் கை வைப்பது தவறு என்று சர்க்கார் எண்ணினால், தாழ்த்தப்பட்ட மக்களுக்கு இந்த நிபந்தனையால் நன்மை ஏற்படுகிறது என்று எண்ணும்போது இதில் இப்படி தலையிடுவதில் தவறில்லை என்று நினைக்கிறேன்.

அதே சமயத்திலே, இன்றைக்கு எங்கள் பகுதியிலே குளங்கள் மராமத்து செய்யப்படாமல் இருக்கிறது. ஆனால் பொதுவாக எல்லாப் பகுதிகளிலும் குளங்கள் மராமத்து செய்யப்படுவதாகப் பேசப்படுகிறது. சென்ற 10 ஆண்டு காலத்திலே 8 கோடி ரூபாய் இதற்காக செலவிடப்பட்டிருக்கிறது என்று குறிப்பிடப்படுகிறது. எங்கள் பகுதியிலே 15 குளங்கள் இருக்கின்றன. ஆனால் இப்படி 8 கோடி ரூபாய் செலவு செய்யப்பட்டும், அந்தக் குளங்களில் ஒன்றுகூட மராமத்து செய்யப்படவில்லை. காரணம் என்னவென்று தெரியவில்லை. எதிர்க் கட்சியைச் சேர்ந்தவன் என்பதால், அப்படி மராமத்து செய்யப்படாமல் விடப்பட்டிருக்கிறதோ என்னவோ. ஆகவே இன்றைக்கு இவைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும். எங்கள் பகுதியிலே எந்தவிதமான நீர்ப்பாசன வசதியும் கிடையாது. குளத்தை நம்பித்தான், கிணற்றை நம்பித்தான் அங்கு நஞ்செய் நிலங்களை பயிர் செய்கிறார்கள். அதற்காக வேண்டி குளங்கள் மராமத்து செய்ய வேண்டியது அவசியம். அப்படி மராமத்து செய்தால்தான் நாளடைவில் விளைச்சலை அதிகப்படுத்த முடியும். ஆகவே இதற்கு சர்க்கார் உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அதோடுகூட, இன்றைக்கு ஒவ்வொரு தாழ்த்தப்பட்ட மக்கள் வசிக்கின்ற பகுதியை எடுத்துக்கொண்டால், அங்கெல்லாம் காங்கிரஸ்காரர்களுடைய தலையீடு அதிகமாக இருக்கிறதை கண்கூடாகப் பார்க்கிறோம். அதாவது இன்றைக்கு சிறுவாணிப் பகுதியிலே பல தாழ்த்தப்பட்ட மக்கள் பகுதி இருக்கிறது. அங்கெல்லாம் தாழ்த்தப்பட்ட மக்கள் பல குடிசைகள் கட்டிக் கொண்டு வசித்து வந்தார்கள். அதை திடீரென்று ரெவின்யூ இலாகாவைச் சேர்ந்தவர்கள் பிரித்து எறிந்து விட்டார்கள். அது இப்போது சர்க்கார் நிலமா, அல்லது தனிப்பட்ட சொந்தக்காரர்களைச் சார்ந்ததா என்று பரிசீலனையில் இருக்கிறது. அப்படி பரிசீலனையில் இருக்கும்போது தாசில்தாரும், ரெவின்யூ இன்ஸ்பெக்டரும் சேர்ந்து கொண்டு பிரித்து எறிந்து விட்டார்கள். காரணம்

4th March 1961] [Sri N. Marudachalam]

தெரியவில்லே. அந்தப் பகுதிகளிலே இப்போது காங்கிரஸ்காரர் கள் புகுந்து, நீங்கள் எல்லாம் காங்கிரசிலே சேர்ந்து விட்டால், உங்களுக்கு மீண்டும் அதே இடத்தில் வீடுகள் கட்டிக் கொடுக் கிறோம் என்று கையெழுத்துப் போட்டு எழுதிக் கொடுத்திருக் கிறார்கள். காட்டவேண்டுமென்று சொன்னாலும் காட்டுகிறேன். இந்த மாதிரி நஞ்சுண்டாபுரத்திலே இருக்கக்கூடிய ஒரு இடத்திலே குடியிருப்புக்குப் பக்கத்தில் ஒரு கோயில் கட்டி வழிபட்டுக் கொண்டு வருகிறார்கள். அந்த ஊர்ப் பஞ்சாயத்துப் போர்டு தலைவர் ஒரு பெரிய காங்கிரஸ்காரர். அவர் அந்த நிலத்தை ஆக்கிரமிப்பதற்காக வேண்டி, அந்த இடத்திலே ஒரு பங்கு கட்ட வேண்டுமென்று சொல்லி அந்த இடத்தை ஆக்கிரமிக்க முயற்சி செய்கிறார். ஆகவே இந்த மாதிரி தாழ்த்தப்பட்ட மக்கள் அங்கு தோன்றிய நாள் முதற்கொண்டு, வழிபட்டுக்கொண்டு வருகிற இந்தக் கோவிலை, 10 ஆண்டு காலமாக அனுபவித்துக் கொண்டு வருகிற இந்தக் கோவிலை அவர்களுக்கே சர்க்கார் ஒதுக்க வேண்டு மென்று கேட்டுக் கொள்கிறேன். அவர்களும் தங்களுக்கு ஒதுக்க வேண்டு மென்று சர்க்காருக்கு பல விண்ணப்பங்கள் செய்திருக் கிறார்கள். நானும் அமைச்சர் அவர்களிடம் இதைப்பற்றி எடுத்துக் கூறி இருக்கிறேன். ஆகையினால் உடனடியாக இந்த மாதிரி தலையீடுகள் செய்யாமல் அவர்களுக்குத் தகுந்த வசதிகளை செய்து கொடுப்பதற்கு சர்க்கார் முன்வரவேண்டும். குறை கூறுகிறார்களே என்று சொன்னால், குறை இருந்தால் சொல்லத் தான் செய்வார்கள். இம்மாதிரியான குறைபாடுகள் அந்தப் பகுதியிலே இருக்கின்றன.

(Deputy Speaker in the Chair.)

தானியங்களின் விலைவாசிகள் இன்றைக்கு அதிகப்படியாக உயர்ந்து கொண்டே போகிறது. விலைவாசிக்குத் தகுந்தமாதிரி தானியம் அதிகமாக விளைச்சலாகிறது என்று கூறுகிறார்கள். ஒரு உபமானம் சொல்ல விரும்புகிறேன். தேனாறு பாய்கிறது, மக்கள் வயிறு காய்கிறது என்று சொல்லுவார்கள். சாதாரண மக்களுக்கு தானியம் கிடைப்பது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. ஆகையால் சர்க்கார் விலைவாசியைக் கட்டுப்படுத்துவதோடு அல்லா மல், தாழ்த்தப்பட்ட மக்களின் குறைபாடுகளை உடனடியாக சரிப் படுத்திக் கொடுக்க வேண்டும் என்று தாழ்மையுடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

SRI P. M. MUNUSAMI GOUNDER : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, 1960-61-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கையை சமர்ப்பித்து நிதி அமைச்சர் அவர்கள் ஆற்றியிருக்கும் உரையின் மீது என்னுடைய சில கருத்துக்களை சொல்லிக்கொள்ள ஆசைப் படுகிறேன். முக்கியமாக இந்த உரையானது ஒரு முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கிறது என்பதை அமைச்சர் அவர்களுடைய உரையிலேயே குறிப்பிட்டார்கள். காரணம் என்னவென்றால் இதுவரையில் சென்னை ராஜ்யம் என்று இருந்த பெயரை தமிழ்

நாடு என்று மாற்றியிருப்பதை குறிப்பிட்டார்கள். அதோடு அல்லாமல் எந்தவிதமான வரியும் இல்லாமல் இந்த வரவு செலவுத் திட்டத்தை அவர்கள் தயாரித்திருப்பது வரவேற்கக்கூடிய விஷயமாகும் என்பதையும் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். அந்த சந்தர்ப்பத்தில் 11-வது வகுப்பு வரை ஏழை மாணவர்களுக்கு இலவசக் கல்வி கொடுக்கவேண்டும் என்பதையும் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். இதேமாதிரி குறிப்புகள் அடங்கிய 9 ஆண்டுகளாக இல்லாத ஒரு வரவு செலவுத் திட்டத்தை கனம் நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்திருப்பதற்காக நாம் அவரைப் பாராட்டாமல் இருக்க முடியாது. இந்த வரவு செலவுத் திட்டத்தைப் பூராவும் படித்துப் பார்க்கும்பொழுது எந்த விதமான ஒரு குறைகுறை இல்லாமல் எல்லாவிதமான நல்ல அம்சங்களும் அடங்கியிருப்பதினால், எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் பேசும்பொழுது நல்ல விஷயங்களை விட்டுவிட்டு, ஏதோ அமைச்சர் அவர்கள் சுற்றுப் பிரயாணம் செய்கிறார்கள், ஏதோ பணம் வசூல் செய்கிறார்கள் என்று தவறான எண்ணத்தைக் கொண்டு பேசுகிறார்கள். அது மிக்க கண்டிக்கத்தக்க விஷயம். கட்சி நிலையில் அவரவர்களுடைய கட்சியை பலப்படுத்தவேண்டும் என்று அவரவருக்கு ஆவல் இருப்பதை ஒருவராலும் மறுக்கமுடியாது. அதுமாதிரி இருக்கும்பொழுது அவரவர்கள் தொகுதிக்குப் போகும்பொழுது அவரவர்கள் கட்சியை பலப்படுத்தவேண்டிய ஒரு நிலையும் ஏற்படுகிறது. அந்த நிலையை அவர்கள் உணர்ந்திருப்பார்களானால் இதுமாதிரியான குற்றச்சாட்டை ஒரு பொறுப்புள்ள அங்கத்தினர் சொல்லவேமாட்டார்.

இந்த நிலையில் அதை விட்டுவிட்டு நமது அமைச்சர் அவர்கள் உரையின் மீது குறிப்பாக சில விஷயங்களை எடுத்துக்கொண்டு அதுபற்றி சொல்ல ஆசைப்படுகிறேன். நமது முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களின் மூலமாக எல்லாவிதமான வேலைகளும் வெற்றிகரமாக நடந்த காரணத்தினால் தான் உணவு அதிகமான அளவிற்கு உற்பத்தி ஆகியிருக்கிறது என்பதை நிதி அமைச்சர் அவர்களுடைய உரையில் திட்டவட்டமாக எடுத்துக் கூறியிருக்கிறார்கள். 1950-51-ல் 30·94 லட்சம் டன்களாக இருந்த உணவு உற்பத்தி 1960-61-ல் 51·67 லட்சம் டன்களாக உயர்த்தப்பட்டிருக்கிறது. இது நம்முடைய திட்டத்தின் மூலமாக அடைந்த வெற்றியை எடுத்துக்காட்டுகிறது. நமது திட்டங்கள் வெற்றிகரமாக நடந்து மக்கள் அதன் மூலம் பலன் பெறாமல் இருந்திருந்தால் விவசாயத்தின் மூலம் உணவுப் பொருள்கள் அதிகமாக விளைச்சல் கண்டிருக்காது. ஏழைக் குடியானவர்களுக்கு கடன் வசதி செய்து கொடுப்பது, கிணறுகள் வெட்டிக் கொடுப்பது, நீர்ப்பாசன வசதிகள் செய்துகொடுப்பது, உரம் முதலிய சாதனங்கள் நல்ல முறையில் கிடைக்க வசதி செய்து கொடுப்பது ஆகியவைகள் மூலம் விவசாயம் நல்ல முறையில் முன்னேற்றம் அடையக்கூடிய நிலையை ஏற்படுத்தினார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. பல அங்கத்தினர்கள் சொன்னதிலிருந்து ரசாயன உரம் பற்றாக்குறை

4th March 1961] [Sri P. M. Munusami Gounder]

யாக இருக்கிறது என்பது தெளிவாகத் தெரிகிறது. ஆனால் அதே சந்தர்ப்பத்தில் நாம் யோசித்துப் பார்க்கவேண்டும். நமக்கு உற்பத்தி என்ன ஆகியிருக்கிறது, செலவு என்ன ஆகியிருக்கிறது என்று பார்க்கும்பொழுது, தேவையான அளவு ரஸாயன உரம் நமக்குத் தற்பொழுது கிடைக்கவில்லை. இதிலே பிளாக் மார்கெட் செய்கிறார்களா அல்லது சாதாரணமாகப் போய் வாங்கி விற்கிறார்களா என்பதையும் யோசித்துப் பார்க்கவேண்டும். கூட்டுறவு முறையில் அதைப் பெற்று அதில் ஏதோ லாபம் அடைய வேண்டும் என்ற முறையில் விற்கிறார்களே தவிர, மற்றபடி சர்க்கார் இம் மாதிரி ஏற்பாடுகள் செய்ததில் தவறு செய்துவிட்டது என்ற முறையில் கூறும்பொழுது அது வருந்தத்தக்க விஷயம் என்பதையும் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். உரத்தைப் பொறுத்த வரையில் நெய்வேலியிலும், தூத்துக்குடியிலும் தொழிற்சாலைகள் ஏற்பட்டு அதன் மூலம் உரம் அதிகமான அளவு கிடைப்பதினால் நமது பற்றாக்குறை நீங்கும் என்று நிதி அமைச்சர் அவர்கள் உரையில் தெளிவாக எடுத்துக் கூறியிருக்கிறார்கள்.

அடுத்தபடியாக, நீர்ப்பாசன வசதியை எடுத்துக்கொண்டால் சிறிய நீர்ப்பாசன திட்டங்களுக்கும் நல்ல முக்கியத்துவம் கொடுத்து வந்திருக்கிறோம். சென்ற இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களில் 8 கோடி ரூபாய் அளவிற்கு செலவு செய்துள்ளோம், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மேலும் 8 கோடி ரூபாய் செலவு செய்யத் திட்டமிட்டுள்ளோம் என்று அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். குறிப்பாக சேலம் ஜில்லாவில் இம்மாதிரி சிறிய நீர்ப்பாசன வசதிகள் செய்துகொடுக்கவேண்டும் என்று நான் இந்த சந்தர்ப்பத்தில் எடுத்துக்கூற ஆசைப்படுகிறேன். ஹொசூர் சின்னாற்றில் தொட்டஹல்லா என்ற இடத்தில் ஒரு சிறிய அணைக் கட்டு இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலேயே கட்டவேண்டும் என்று குறிப்பிடப்பட்டிருந்தது. அதை உடனடியாகக் கட்ட வேண்டும். ஊத்தங்கரையில் பாம்பாற்றில் ஒரு சிறிய அணைக் கட்டும், ஹரூரில் முள்ளிக்காட்டில் ஒரு சிறிய அணைக்கட்டும் கட்டிக்கொடுக்கவேண்டும். இது மாராமத்து இலாகா அமைச்சர் அவர்களுக்கு நன்றாகத் தெரியும். 8 கோடி ரூபாய் செலவழிக்கும் பொழுது இதுமாதிரி சிறிய அணைக்கட்டுகளை கட்டிக்கொடுத்தால் விவசாயிகளுக்கு நல்ல வசதியாக இருக்கும் என்பதை நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக, ரோடு வசதிகளைப் பார்க்கும்பொழுது, 1961-62-ம் வருடத்தில் 182 மைல் அளவிற்கு புதிய ரோடுகள் போடப்படும் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. மாராமத்து இலாகா அமைச்சர் அவர்கள் எங்கள் பகுதியில் சுற்றுப்பிரயாணம் செய்த பொழுது வேப்பனம் பள்ளியிலிருந்து 12 மைல் நீளம் உள்ள தீர்த்தம்-பேரிகை ரோடு போடவேண்டும் என்று ஜனங்கள் கூக்குரல் எழுப்பியதை அறிவார்கள். மூன்றாவது ஐந்தாண்டுத்

[Sri P. M. Munusami Gounder] [4th March 1961

திட்டத்தில் அதற்கு முதல் இடம் கொடுத்து இந்த 182 மைல் நீளம் உள்ள ரோடுகளில் அதுவும் அடங்கியிருக்கவேண்டும் என்று நான் அவர்களைக் கேட்டுக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக குடி நீர் வசதியைப் பார்க்கும்பொழுது சேலம் ஜில்லாவில் மிக்க மலைப்பாங்கான பிரதேசம் என்பதை நண்பர் சுப்பிரமணிய கவுண்டர் அவர்கள் எடுத்துச் சொன்னார்கள். அந்த மலைப் பிரதேசத்தில் பிளாஸ்டு யூனிட்ஸ் கொடுத்து ஆழப்படுத்தினால்தான் தண்ணீர் கிடைக்கும். இதை தனிப்பட்ட முறையில் பரிசீலனை செய்து நிதி அமைச்சர் அவர்கள் கிணறுகளை ஆழம் செய்து குடி தண்ணீர் வசதி செய்து கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, குடிதண்ணீர் வசதியைப் பற்றிச் சொல்லும் பொழுது கிருஷ்ணகிரியில் சுகாதார அமைச்சர் அவர்கள் வந்திருந்தபொழுது தெரியும், அங்கு குடிப்பதற்கு தண்ணீர் என்பதே கிடையாது. மூன்று மைல் அருகாமையில் கிருஷ்ணகிரி ரிசர்வாயர் பக்கத்தில் இருந்தும்கூட அங்கு குடிதண்ணீர் வசதி கிடையாது என்பதை அவர்கள் நன்கு அறிவார்கள். அதை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்துச் செய்வதாகக் குறிப்பிட்டார்கள். அதையும் செய்துதரவேண்டும் என்று கூறிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக சிறிய தொழில்கள் யூனிட்கள் கிண்டி எஸ்டேட்டில் இருப்பதைப் போன்று மற்ற ஜில்லாக்களிலும் பரவலாக ஏற்பாடு செய்யவேண்டும் என்று நிதி அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டிருப்பதில் கிருஷ்ணகிரியையும் குறிப்பிட்டிருப்பதை நான் வரவேற்கிறேன். அதற்காக அவருக்கு என் நன்றியைச் செலுத்தவும் கடமைப்பட்டிருக்கிறேன். அதேமாதிரி சிறு யூனிட்டுகளுக்கு ஏற்பாடு செய்யும்பொழுது, நமது ரயில்வேக்களையும் விஸ்தரிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். சேலத்தில் மூன்று இடங்களில் ரயில்வே எடுக்கப்பட்டது. திருப்பத்தூர்-கிருஷ்ணகிரி, சமால்பேட்டை-தருமபுரி, தருமபுரி-ஹோசூர் ஆகிய ரயில்வேக்கள். அடுத்த திட்டத்தில் இது மாதிரியான சிறு சிறு தொழில் யூனிட்டுகள் வரும்பொழுது ரயில்வே வசதி அவசியம். ஆகவே இந்த ரயில்வேக்கள் மறுபடியும் வரவேண்டியது அவசியம். அடுத்தபடியாக, கிருஷ்ணகிரித் தாலுகாவிலே வேப்பனப்பள்ளி பிர்காவில் தங்கம் கிடைக்கிறது. இரண்டொரு தரம் இதைப்பற்றி சட்டசபையில் குறிப்பிட்டிருக்கிறேன். ராசிபுரத்திலே ஒரு ரூபாய்க்கு 4 அணா தங்கம்தான் கிடைக்கிறது என்று சொன்னார்கள். வேப்பனப்பள்ளியிலே ஒரு ரூபாய்க்கு ரூபாய்த் தங்கம் கிடைக்கிறது. பேரிகை எஸ்டேட் இருந்த இடத்தில் அப்படியே இருக்கிறது. இந்த இடங்களை எல்லாம் பரிசோதனை செய்து, தங்கச் சுரங்கத்தை ஏற்பாடு செய்யவேண்டும், பெரிய பெரிய கைத்தொழில்களையும் ஏற்படுத்தவேண்டுமென்று கோட்டுக் கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

4th March 1961]

* SRIMATHI T. N. ANANDANAYAKI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இதுவரை இந்த சபை முன்பு வைக்கப்பட்ட வரவு செலவு அறிக்கைகளைக் காட்டிலும், இது மிகவும் தெளிவாகவும், விரிவாகவும் இருக்கிறது என்பதைப் பார்க்கும்பொழுது நமது நிதி அமைச்சர் அவர்களை யாரும் பாராட்டாமல் இருக்க முடியாது. சுருங்கச்சொல்லி விளங்கவைத்துப் பேசி இருக்கலாம் கனம் அமைச்சர். ஆனால் அப்படி விளங்கக்கூடிய ஆற்றல் எதிர்க்கட்சி களுக்கு இல்லை என்ற காரணத்தால்தான் இவ்வளவு தெளி வாகவும், விரிவாகவும் அவர் இந்த அறிக்கையைக் கொண்டு வந்தது மிகவும் பாராட்டத் தக்கது. அப்படிப் புரிந்து கொள்ளட்டும் என்று கொண்டுவந்தும்கூட இன்னும் குறை சொல்லுகிறார்கள் எதிர்க் கட்சிக்காரர்கள்.

இதைத் தேர்தல் பட்ஜெட் என்று அழைக்கிறார்கள். ஆம், இது தேர்தல் அறிக்கைதான். நமக்கு மாத்திரம் அல்ல, எதிர்க் கட்சிக்கும்தான். அவர்கள் ஐந்து ஆண்டுகளாகத் தொடர்ந்து முட்டுக்கட்டை போட்டும் கூட, இந்த அளவுக்கு தமிழகம் முன்னேறியிருக்கிறது என்றால், மக்கள் அவர்களைத் தேர்ந்தெடுப்பதா, வேண்டாமா என்று கட்டாயமாக முடிவு செய்யக்கூடிய வரவு செலவு அறிக்கைதான் இது என்பதை நான் மகிழ்ச்சியோடு தெரிவித்துக்கொள்கிறேன். ஆகவே இந்த வரவு செலவு அறிக்கை மிகவும் தெளிவாகவும், விரிவாகவும் அமைந்திருப்பது மிக மிகப் பாராட்டத் தக்கது என்பதை யாரும் மறுக்க முடியாது. இதே மாதிரி வெள்ளையர்கள் காலத்திலே ஆட்சி சிறந்ததாக இருந்தது என்று சொல்லி மக்களை ஏமாற்றலாமென்று நினைத்துக்கொண்டு ஏதாவது கோமாளித்தனமாகச் சொன்னாலும்கூட மக்கள் அதை அலசிப் பார்த்து முடிவு செய்யவேண்டுமென்ற முறையில், எந்த அளவுக்கு முன்னேறி இருக்கிறோம், எந்த அளவுக்கு சாதனை களைச் செய்திருக்கிறோம் என்பதை தெள்ளத் தெளிவாகப் புரிந்து நல்ல ஒரு நிலைமைக்கு வரக்கூடிய அறிக்கையாக இருக்கிறது. இதுபோன்ற அறிக்கை மீது பேசுவதற்குப் பதிலாக, அமைச்சர் நிதி திரட்டினார் என்று சொன்னால், அதற்கும் இதற்கும் எந்த விதமான சம்பந்தமும் இல்லாமல், சட்டசபையிலே நேரத்தை வீணாக்குகிறார்கள் என்றுதான் சொல்லவேண்டியிருக்கிறது. இப்படி உண்மைக்குப் புறம்பாகப் பேசி, கூட்டத்திற்கு வரி போட்டு வாங்குகிறார்களே, அவர்களுக்கு ஒரு வரி போடுங்கள், கட்டாயமாக நல்ல பணம் வசூல் ஆகும் என்று நான் தெரிவிக்க விரும்புகிறேன். ஆகவே, வரவு செலவுத் திட்டத்தைப் பற்றிப் பேசவேண்டியவர்கள், அமைச்சர் நிதி திரட்டினார், அதுவும் டெபுடி கலெக்டர் ஆதரவோடு திரட்டினார் என்று சொன்னால். மந்திரி வந்த நேரத்தில் டெபுடி கலெக்டரே கேட்கவேண்டு மென்று கேட்டாலும், அதைவிட அதிகமாகக் கிடைக்கும் அளவுக்கு காங்கிரஸ் குழு மக்கள் மத்தியிலே மதிப்புப் பெற்றிருக் கிறது என்பதே தவிர, அவர்கள் மாதிரி அரசாங்க ஊழியனைச்

சார்ந்துதான் வாழவேண்டுமென்ற நிலைமை எங்களுக்குக் கிடையாது என்பதை எடுத்துரைக்க விரும்புகிறேன். அத்தகைய ஒரு நல்லாட்சி நடத்துகிறோம் என்பதை இந்த வரவு செலவுத் திட்டம் மிகத் தீவிரமான முறையிலே எடுத்துக்காட்டுகிறது.

1953-54-லிலே விற்பனை வரி மூலம் நமக்கு 8 கோடி ரூபாய் கிடைத்தது. இன்றைக்கு 19 கோடி ரூபாய் விற்பனை வரி மூலம் மட்டும் வருகிறது என்று சொன்னால், அந்த அளவுக்கு வாங்கும் சக்தி மக்கள் மத்தியிலே வளர்ந்திருக்கிறது, அந்த அளவுக்கு உற்பத்தி பெருகியிருக்கிறது, அந்த அளவுக்கு வளமை பூத்திருக்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. அப்படியிருந்தும் இனிமேல் முன்னேற்றம் தேவையில்லை என்று சொல்லும் அளவுக்கு ஆளும் கட்சியினர் இல்லை. இன்னும் நல்ல முறையில் செய்ய வேண்டும், இன்னும் திறமையோடு நிர்வாகத்தை நடத்தவேண்டுமென்றுதான் சொல்லுகிறோம். அந்த முறையிலே, விற்பனை வரியிலே இன்னும் அதிகமாக அக்கறை செலுத்தினால் இன்னும் அதிக வருமானம் வரும் என்பதில் சந்தேகமில்லை. சமீபத்திலேதான் விற்பனை வரிச் சட்டத்தைத் திருத்தி அமைத்தோம். புதிய சட்டத்திலே ஏற்பட்டுள்ள சில தகராறுகளையும் சிக்கல்களையும் பார்க்கும்பொழுது, அமைச்சர் அவர்கள் அவற்றை சற்று மாற்றியமைப்பார்களேயானால், 18 கோடி அல்ல, சுமார் 40 அல்லது 50 கோடி ரூபாய் வருமானம் கிடைக்கலாமென்று நினைக்கிறேன். கண்ணாடி வளையல்களுக்கு பக்கத்து மாகாணத்திலே பல முனை வரி போட்டிருக்கிறார்கள். ஆந்திராவிலே 2 சதவிகிதம் வரி. மைசூரிலே வரி கிடையாது, மகாராஷ்டிரத்திலே வரி கிடையாது. மத்தியப் பிரதேசத்திலே வரி கிடையாது. வரி வேண்டாம் என்று நான் சொல்லத் தயாராக இல்லாவிட்டாலும், பக்கத்திலே இருக்கிற ஆந்திரா மாகாணம் 2 சதவிகிதம் பல முனை வரியைப் போட்டிருக்கும்பொழுது, அதேமாதிரி இங்கே போட்டால் ஓரளவுக்கு இந்த வியாபாரிகள் தமிழகத்தை விட்டுத் துரத்தப்படாமல் இருக்கலாம். தமிழகம், தெலுங்ககம் என்று வியாபாரிகள் பார்க்கமாட்டார்கள். பணத்தைத்தான் பார்ப்பார்கள். இப்படி தமிழ் நாட்டை விட்டு ஓடிவிடக்கூடிய சூழ்நிலை இருக்கிற ஒரு சில வியாபாரங்களுக்காவது நாம் பாதுகாப்பு அளிக்கவேண்டும். அந்தக் காலத்திலே அறியாமையினால் ஒரு முனை வரி வேண்டுமென்று கேட்டிருந்தாலும், இன்றைக்கு நடைமுறையில் இருக்கும் சிக்கல்களைப் புரிந்துகொண்டு வருகிறார்கள். ஆகவே இந்த விற்பனை வரியை சற்று மாற்றியமைப்போமேயானால் நலமாக இருக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அதுபோன்று வேறு சில பொருள்கள் இருக்கின்றன. ஒரு முனை வரி என்று போடும்போழுது அதிகமாகப் போட்டிருக்கிறார்கள். வைரத்திற்கு 6 சதவிகிதம் போட்டிருக்கிறார்கள். இரண்டாயிரம் ரூபாய்க்கு கம்மல் வாங்குகிறவர் இன்னும் 120 ரூபாய் மேலே

4th March 1961] [Srimathi T. N. Anandanayaki]

கொடுக்க முடியாதா என்று கேட்கலாம். அவருக்கு 2,000 ரூபாய் பெரிதாகத் தெரியாது. இந்த வரிதான் பெரிதாகத் தெரியும். ஆறு சதவிகிதம் கொடுப்பதற்கு பயந்துகொண்டு, வாங்குகிறவர் பில் போடவேண்டாமென்று சொல்லுகிறார். விற்பவரும் பில் போடுவதில்லை. கடைசியில் ஏமாறுவது யார் என்றால் அரசாங்கம். ஒரே அடியாக அதிக ஆசைப்பட்டு அதிக நஷ்டம் அடையாமல், 6 சதவிகிதம் என்பதைக் குறைத்து 1 அல்லது 2 சதவிகிதம் ஆக்கினால், அது நலமாக இருக்கும். ஒரு முனையிலே வசூலிப்பதில் கஷ்டமில்லாமல் இருக்கலாம். தமிழகத்தின் வருமானத்தை பெருக்க வேண்டுமானால் விற்பனை வரியிலே இன்னும் சற்று அதிக அக்கரை செலுத்தி வியாபாரிகளுக்கு கசப்புத் தட்டாமலும், நமக்கு கஷ்டமில்லாமலும் வசூலிக்கத் தகுந்த முறையில் நிதி இலாகா யோசனை செய்வார்களேயானால் நமக்கு அதிக வருமானம் கிடைக்கும்.

அடுத்தபடியாக நில வரி 1953-54-ல் வருமானம் ரூ. 6 6 கோடியாக இருந்தது. இன்றைக்கும் கிட்டத்தட்ட அதே வருமானம் தான் வருகிறது. ரூ. 6 கோடியிலேயே நின்று கொண்டிருக்கிறது. இதிலே மட்டும் ஏன் வசூல் செய்வதில் கஷ்டம் ஏற்படுகிறது என்று தெரியவில்லை. ரெவின்யூத் திட்டத்திலே இருக்கும் குறைபாடோ அல்லது அமல் நடத்துவதிலே உள்ள கஷ்டமோ என்னமோ தெரியவில்லை. இதற்கு கர்ணங்கள்தான் முக்கிய காரணம். அவர்கள் மனது வைத்தால் எதையும் செய்வார்கள். அவர்களுடைய குறைகளை நீக்கி நல்ல முறையில் இந்த நில வரியை வசூலிப்பதற்கு ஏற்பாடு செய்தால் அது சாலச் சிறந்ததாக இருக்கும். நமக்கும் வருமானம் அதிகரிக்கும் என்று நான் குறிப்பிட விரும்புகிறேன்.

பல துறைகளுக்கு நல்ல முறையில் பணத்தை ஒதுக்கியிருக்கிறார்கள். விவசாயம் வளர்ந்திருக்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. விவசாயத் துறையில் எவ்வளவு முன்னேறவேண்டுமோ அவ்வளவு முன்னேறியிருக்கிறோம். நல்ல விதைகள், நல்ல உரங்கள் கிடைக்கின்றன. ஆங்காங்கே சில குறைகள் இருந்தாலும் நல்ல முறையில் முன்னேறியிருக்கிறோம் என்பதை யாரும் மறுக்க முடியாது. குறிப்பாக லாண்டு ரெவின்யூவைப் பார்க்கும் பொழுது "gross receipt including portions due to irrigation" என்று கூறியிருக்கிறார்கள். புதிதாக நீர்ப்பாசன வசதி கொடுத்தும்கூட, பல லட்சக்கணக்கான ஏக்கர்களை சாகுபடிக்குக் கொண்டுவந்தும்கூட, வருமானம் அதிகரிக்கவில்லை என்றால் எங்கேயோ தவறு இருக்கவேண்டுமென்றுதான் தோன்றுகிறது. அதைப் பரிசிலனை செய்து சரிப்படுத்த வேண்டும்.

உணவு உற்பத்தியை எவ்வளவு பெருக்கவேண்டுமோ அந்த அளவுக்குப் பெருக்கியிருக்கிறோம். தழை எருவுக்கு ஆதரவு கொடுப்பது நல்லது. கேரள மாகாணத்திலே தழை எருவுக்காக அரசாங்கம் புறம்போக்கு குத்தகைப் பாட்டம் என்று கொடுத்து,

அவர்களுக்கு வேண்டிய உரத்தை அவர்களே உற்பத்தி செய்யலா மென்ற முறையை கொண்டுவந்திருக்கிறார்கள். அதுபோன்று நம் முடைய மாகாணத்திலே புறம்போக்கு நிலத்திலே ஒருசில ஏக்கர் களை விவசாயிகளுக்கு ஒதுக்கிக் கொடுத்து மரத்தை நட்டு தழை எரு உற்பத்தி செய்தால் அது வரவேற்கத் தகுந்தது. அது போன்று இன்று பஞ்சாயத்து யூனியன்களிலே "பாம் காடுகள்" திட்டம் வரவேற்கத் தகுந்தது. அதோடு மட்டுமல்லாமல் விதைப் பண்ணைகள் மிகவும் முக்கியம். அரசாங்கத்தின் மூலமாக விதைப் பண்ணைகள் நடத்தினால் எதிர்பார்க்கக்கூடிய அளவுக்கு வெற்றி கிடைக்குமோ, கிடைக்காதோ என்றாலும், நிலச் சீர்திருத்தம் செய்யும்பொழுது 30 ஏக்கர் என்று ஸீலிங் வைத்திருக்கிற நேரத் திலே விதைப் பண்ணைக்காக 2 ஏக்கர் நிலத்தை ஒதுக்கி அதற்கு உச்ச வரம்பிலிருந்து விதிவிலக்கு கொடுப்போமேயானால் அவர் களே நல்ல விதைகளை உற்பத்தி செய்ய முடியும்.

-2-30 -p.m, அப்பொழுது இரண்டு ஏக்கர் நிலத்தில் நல்ல விதை உற்பத்தி செய்வார்கள். அதை மற்ற விவசாயிகளுக்கு விற்பார்கள். ஆகவே விதைப் பண்ணைக்கென்று ஒதுக்கப்படும் நிலத்தை உச்சவரம் பிலிருந்து விதிவிலக்களித்தால் நலமாக இருக்கும்; இதனை உணவு இலாகா யோசித்து ஆவன செய்தால், விதைப் பிரச்சினை தீர்ந்த தாகும். 40 ஏக்கராவுக்கு வேண்டிய விதையை ஒரு ஏக்கர் நிலத்தில் உற்பத்தி செய்யலாம் என்கிறார்கள். ஆகவே, தாராள மாகவே நாம் இரண்டு ஏக்கர் என்று விட்டால், நலமாக இருக்கும் என்பதை உணவு இலாகா யோசிக்க வேண்டும் என்று சொல்ல விரும்புகிறேன்.

அடுத்தபடியாக ஆயில் ஸீட்ஸ். இன்றைக்கு புளி, மிளகாய் விலையெல்லாம் சற்று குறைந்திருக்கிறது. நாலு ரூபாய் விற்ற மிளகாய் 2½ ரூபாய்க்கு வந்திருக்கிறது. புளி விலையும் 1½ ரூபாய்க்கு இறங்கியிருக்கிறது. ஆனால், எண்ணெய் விலையோ ஏறிக்கொண்டே போகிறது. இன்றைக்கு அது 4¾ ரூபாய் ஆகி யிருக்கிறது. ஆகவே, எங்கோ, ஏதோ தவறு இருக்கிறது என்பது தெரிகிறது. பம்பாய், கல்கத்தா, சென்னை முதலிய முக்கிய நகரங்களில் சென்னையில்தான் விலைவாசிகள் மிகவும் அதிகமாக ஏறி இருக்கிறது என்பதைப் பார்க்கிறோம். ஆகவே இந்த விஷயத்திலும் சர்க்கார் அக்கரை காட்டி விலைக் கட்டுபாடு செய்தாக வேண்டும்.

நகர சபையைப் பற்றி ஓரிரண்டு வார்த்தைகள் சொல்லி, ஒரு நிமிடத்தில் முடிக்கிறேன். இன்று 1½ கோடி ரூபாயை ரோடுகளைச் செப்பனிடவும், ட்ரெயினேஜுக்காகவும், சேர்த்துக் கொடுத்திருக்கிறார்கள். காரியம் நடைபெறவேண்டுமானால், இப்படி சும்மா அவர்களிடம் பணத்தைக் கொடுத்துவிட்டால் மட்டும் போதாது. 30 லட்ச ரூபாயை வைத்துக்கொண்டு சும்மா இருந்த வர்களிடம் 58 லட்ச ரூபாயையும் கொடுத்தால் இந்தக் காலத்தில் வேலை நடக்காது. ஆகவே, இந்த ரூபாயை அவர்களை நம்பிக் கொடுத்து விடாமல், ஹைவேஸ் டிபார்ட்மெண்ட், ட்ராபிக் டிபார்ட் மெண்ட், கார்ப்பொரேஷன் எல்லோரும் சேர்ந்து, இந்த 58 லட்ச

4th March 1961] [Srimathi T. N. Anandanayaki]

ரூபாயை ஒழுங்காகப் பயன் படுத்துகிறார்களா, இந்தப் பணத்தைச் செலவழிக்கிறார்களா என்று பார்க்க ஒரு கமிட்டியை சர்க்கார் அமைத்தால், இந்தப் பணத்தை சென்னை நகரத்தின் நன்மைக்கு உபயோகிக்கலாம்.

வாட்டர் சப்ளை சம்பந்தப்பட்டவரை, 56-ல் செகண்ட் மெயின் போட்டோம்; அது இன்னும் முடியவில்லை. சொல்கிறார்கள், குழாய்க்கு பம்பு வாங்கி விட்டார்களாம். அதன் பிறகு அதற்கு பாரின் எக்ஸ்சேஞ்ச் இன்னும் எத்தனையோ தொல்லைகள். ஒரு பெரிய பம்புக்கு இரண்டு வருஷமாக அநியாயச் செலவு, மோசமான காரியம். ஆகையினால், வாட்டர் சப்ளை ஸ்கீமிலும் அக்கரை காட்டி கொடுக்கும் பணத்தை சரியாகச் செலவழிக்கிறார்களா என்று பார்த்தால்தான் நல்லது, இல்லாவிட்டால் பிரயோஜனம் இல்லை.

ரெயில்வே பாலம் வேண்டுமென்று ஐந்து வருஷகாலமாகச் சொல்லி வருகிறோம், திருவொற்றியூர் பக்கத்தில், ஒரு அஸ்தி வாரக் கல்கூட இன்னும் போடவில்லை. கார்ப்பொரேஷனும் சர்க்காரும் சேர்ந்து மக்கள் அவதியைப் போக்க அங்கு ஒரு ஓவர் ப்ரிட்ஜை கட்ட, அஸ்திவாரக் கல்லாவது போடவேண்டும் என்று கேட்டுக் கொண்டு நேரம் போதாததால் இத்துடன் முடிக்கிறேன். வணக்கம்.

* **SRI P. K. MOOKIAH THEVAR**: தலைவர் அவர்களே, 1961-62-ஆம் வருஷ நிதிநிலை அறிக்கையைப்பற்றி எனக்கு முன் பேசிய பல கனம் அங்கத்தினர்கள், குறிப்பாக ஆளும் கட்சியாளர்கள் "எதிர்கட்சிக்காரர்களுக்கு அறிவு கிடையாது, அறியும் திறனும் கிடையாது. ஆகவே 60 பக்கத்தில் விளக்கமாக விரிவான அறிக்கையை விரித்துக் கொடுத்திருக்கிறோம். மூன்றாவது திட்டம் வருகிறது. அதுபற்றியெல்லாம் மக்களுக்குத் தெரியப்படுத்தியிருக்கிறோம்" என்று இந்த நிலையில் அலட்சியமாக, கோபமாக, வேகமாகப் பேசினார்கள். எங்களுக்கு எல்லாம் தெரியும் என்று விரித்துக்காட்டத் தேவையில்லை. நிறை குடம் ததும்பாது என்பார்கள். சாதனைகள் செய்து சக்தி பெற்றிருந்தால், நிச்சயமாக இம்மாதிரி வேகம், கோபம் வராது. உண்மையான தாய் தன் கஷ்டத்திலும் தன் பிள்ளைகள் வேண்டுவனவற்றை கொடுக்கத்தான் நினைப்பாள். அதற்கு மாறாக கொடுமைப்படுத்துவாளானால் அவள் தாய் அல்ல, மாற்றாந்தாய். அந்த மாற்றாந்தாய் ரூபத்தில்தான் இன்று ஆளும் கட்சி எதிர்கட்சிகளை நடத்துகிறார்கள்.

முதல் ஐந்தாண்டுத் திட்டம் நிறைவேறிய பத்தாண்டுகளாக திட்டங்கள் நிறைவேறியிருக்கின்றன. உள்நாட்டிலும், வெளி நாட்டிலும் பணம் வட்டிக்கு வாங்கி 6 ஆயிரம் கோடி ரூபாய்களுக்கு மேல் செலவழித்திருக்கிறோம். இதை அரசாங்கப் பத்திரிகையே சொல்லுகிறது. அத்தனை பணமும் செலவழிந்து போய் இருக்கிறது. சாதனை பற்றியும் புள்ளிவிவரங்கள் கொடுக்கப் பட்டிருக்கின்றன. இவ்வளவு காலமும், பணமும் செலவழித்திருந்தும், காரியத்தில் ஒன்றுமே இல்லை. சாதனையின்

[Sri P. K. Mookiah Thevar] [4th March 1961

வெற்றியை மக்களின் முகத்தைப் பார்த்தால் தெரிகிறது. அவர்கள் முகத்தைப் பார்க்கத் தேவையில்லை. இன்னும் பசி பட்டினி குறைந்தபாடில்லை. பிச்சைக்காரர்கள் பெருக்கம் குறையவில்லை. மனச்சாட்சிக்கு விரோதமில்லாமல் கோபத் திற்குப் பதிலாக, உண்மையிலேயே சாதனை நடந்திருக்கிறதா என்று தயவுசெய்து நெஞ்சிலே கையைவைத்து பார்க்க வேண்டும் என்று நமது மந்திரிகளைக் கேட்டுக் கொள்ளு கிறேன். 1937-ல் வெள்ளைக்காரன் ஆண்ட காலத்தில் 75 ரூபாயில் நடத்திய குடும்பம் இன்று 375 ரூபாயிலும் முடியவில்லை என்று நிபுணர்கள் சொல்கிறார்கள். அதை இந்த அரசாங்கம் அனுமதிக் கிறது. குற்றங்களைப் பேசுவதே தவறு என்றால், அது ஜனநாயகத் தில் நடக்கக்கூடியது அல்ல. சர்வாதிகார ஆட்சியில் அப்படி நடக்கும். இங்கேயும் அப்படிச் சொல்வதானால், அது ஜனநாயக மாகாது. 47-ல் சுதந்திரம் வந்தவுடன், கட்சியின் பெயரைச் சொல்லி, காந்தியைச் சொல்லி, காரியங்களை நடத்தி வந்தார்கள். அதெல்லாம் போய்விட்டது. மக்கள் மனப்பான்மை மாறாமல், மாற்ற முடியாமல் 1952-ல் சோஷலிஸ்ட் பாட்டர்ன் திட்டமிட்ட பொருளாதாரத்தைக் கொண்டு வருகிறோம் என்று சொன்னார்கள். பொருளாதார நிபுணர்கள் எழுதியிருக்கிறார்கள், இதெல்லாம் சர்வாதிகார நாட்டில் நடக்கும், வற்புறுத்தலால்தான் நடக்கும் என்று புத்தகம் எழுதியிருக்கிறார்கள், சாதாரண ஜனநாயக நாட்டில் வரமுடியாது. நிபுணர்கள் சொல்கிறார்கள். "The control of the production of wealth is the control of the human life itself" என்று சொன்னால், காந்தியத்தைச் சொல்லி பின்னால் இன்று அதைச் செய்கிறோம், இதைச் செய்கிறோம் என்று மக்கள் மனதைத் திருப்புகிறார்கள். "ப்ளான் மாங்கர்ஸ்" களாகி, அதிகாரத்தையெல்லாம் தங்களிடம் குவித்துக் கொண்டு, அதிலும், மாகாண சர்க்காருக்கு ஒன்று மில்லாமல் மத்திய சர்க்காரிடம் கொடுத்து விட்டு, நம் மந்திரிகளும் எதுவும் செய்ய முடியாமல் இருக்கிறார்கள். விலைபோகும் மாடு வீட்டில் விலைக்கு போனால் சந்தைக்கு வரவேண்டிய அவசியமே இல்லை. எங்கே பார்த்தாலும் குறைகள். உங்களால் ஒன்றும் செய்ய முடியாத நிலைமை. இன்றைக்கு பஞ்சாயத்து போர்டுகளை ஏற் படுத்தி அதன் அதிகாரங்களை நீங்கள் பிடுங்கிக் கொள்ள பார்க் கிறீர்கள். இது ஈவு இரக்கம் இல்லாத செயல். இது எங்களுக்கு புரியாது என்கிறீர்கள். அறியாதவர்கள், புரியாதவர்கள் என்று கோபிக்கிறீர்கள். ஏன் இனி இந்த சட்டசபையில் பேசுவதே கூடாது, எதிர்கட்சிகளே கூடாது என்று சட்டமே போட்டாலும் போடுவீர்கள். இதையெல்லாம் பார்த்தால் குழாய் சண்டையைப் போல் இருக்கிறது இன்று சட்டசபை. இந்த நிலையில்தான் இருக்கிறோம்.

DEPUTY SPEAKER : The Honourable Member should withdraw that word என்ன சொன்னீர்கள், ஏதோ சண்டை என்று . . . .

SRI P. K. MOOKIAH THEVAR : வாட்டர் ஸ்கேர்ஸிடியின் போது பெண்கள் குழாயில் போடும் சண்டையைச் சொன்னேன் . . .

4th March 1961]

**DEPUTY SPEAKER : All right, the honourable Member may continue.**

SRI P. K. MOOKIAH THEVAR : இன்னும் அரசாங்கத்தில் அநேக டிபார்ட்மெண்டுகள் இருக்கின்றன. அவற்றைப் பார்த்தால் அவை அரசாங்க டிபார்ட்மென்டா அல்லது காங்கிரஸ் கட்சி டிபார்ட்மெண்டா என்று தெரியவில்லை. இன்பர்மேஷன் டிபார்ட்மெண்ட் இருக்கிறது. Development Department இருக்கிறது. இங்கு மினிஸ்டீரியல் சர்வீசுக்கு என்று சர்வீஸ் கமிஷனுக்குப் போகாமல், குறிப்பிட்ட, வேண்டிய சமுதாயத்தினருக்கே உத்தியோகங்கள் நிறைய கொடுக்கவும், வேண்டாத சமூகத்தினரைப் புறக்கணிக்கவும் உபயோகப்படுகிறது. மந்திரிகள் செய்வது சாதாரணக் காரியமாகயிருந்தாலும் நேரிடையாகச் செய்ய முடியாது. ஆகவே, காரியங்களைச் செய்யவேண்டுமானால் அதிகாரிகளை வைத்துத்தான் செய்யமுடியும். ஆகவேதான் மந்திரி கூடவே காங்கிரஸ் கட்சி வசூலுக்காக Revenue Inspector, Deputy Collector இவர்களை அழைத்துப் போகிறார்கள் என்ற புகாரும் வந்தது. அதற்கு நமது நிதி மந்திரி அவர்கள் மிகவும் கோபமாக சிறு அதிகாரிகள் தயவில் வசூலிக்க அவசியமில்லை என்று அதிகாரம் இருக்கிறபடியால் பதில் சொல்கிறார்கள். மந்திரி அவர்கள் கோபித்துக்கொள்ள தேவையில்லை. காரணம் ஆங்காங்கு அதிகாரிகளுக்குத்தான் எந்தெந்த இடத்தில் யார் யார் முக்கியஸ்தர்கள், யார் யாருக்கு என்னென்ன தேவை, எப்படி செய்தால் வசூலாகும் என்ற உள்விவகாரம் அத்தனையும் தெரியும். மந்திரிகளுக்குத் தெரியாது. உடனடியாக உத்தரவு போடுகிறார்கள். அதிகாரிகள்தான் தங்கள் ஜாதிக்காரர்களையே போடுகிறார்கள். உத்தியோகத்தில் அமர்த்துவதும், அம்மாதிரி, உத்தியோக உயர்வு கொடுப்பதிலும் அம்மாதிரியே செய்கிறார்கள். போலிஸ் டிபார்ட்மெண்டில் டிஸ்மிஸல்ஸ், சஸ்பென்ஷன்கள் காரணமில்லாமல் இருக்கின்றன. வெள்ளைக்காரன் காலத்தில், இன்று மந்திரியாக இருக்கும் அவரையே வேட்டியை உருவி, அடித்தவர்கள் இன்று உத்தியோகத்தில் மேல்பதவிகளில் போடப்பட்டு, அவர்களெல்லாம் மந்திரிகளோடு சுற்றுகிறார்கள்; மந்திரிகளுக்கு வேண்டிய ஜாதிக்காரர்கள் என்ற காரணத்திற்காக இதெல்லாம் நடக்கிறது. அதற்கு பதிலாக அந்த சமூகத்திற்கு தகுதியும் திறமையும், வசதியும், வாய்ப்பும் இருந்தும்கூட அந்த சமூகம் புறக்கணிக்கப்படுகிறார்கள் என்பது பகிரங்கமாகத் தெரிகிறது. கடந்த பத்து ஆண்டு காலத்தில் ஜாதிவாரியாக உத்தியோகங்களைக் கொடுத்து வந்ததைப் பார்த்தால், அந்த புள்ளி விவரங்களை எடுத்துப் பார்த்தால் இதன் உண்மை நன்றாகத் தெரிய வரும். ஆனால் அப்படிப்பட்ட புள்ளி விவரங்களை அவர்கள் கொடுக்க மாட்டார்கள். ஒரு குறிப்பிட்ட ஜாதி புறக்கணிக்கப்படுவது அவ்வளவு நியாயம் அல்ல. ஒரு குறிப்பிட்ட ஜாதிக்கு வேண்டிய சலுகைகளை கொடுக்காவிட்டாலும் பாதகம் இல்லை. அந்த ஜாதியை மிகவும் அவமானப்படுத்துகிறார்கள், கொடுமைப்படுத்துகிறார்கள். முக்குலத்தோர் ஜாதியைப்பற்றி மெட்ராஸ் இன்பர்மேஷனில் அவமானமாக எழுதியிருக்கிறார்கள். 1960-ம் வருஷம் ஜுன்-ஜுலை வெளி

[Sri P. K. Mookiah Thevar] [4th March 1961

யீட்டில் அவர்களைப்பற்றி அவதூருக எழுதியிருக்கிருர்கள். என்ன எழுதியிருக்கிருர்கள் என்பதைப்பற்றி வாசித்துக்காட்ட முடியும். ஆனுல் அதற்கு வேண்டிய அவகாசமும் இல்லை. ரொம்பவும் கேவலமாக எழுதியிருக்கிருர்கள். முக்குலத்த சமூகத்தினர் மாடு பிடிப்பவர்கள் என்றும் அவர்கள் சித்தப்பன், பெரியப்பன் மகளைக் கலியாணம் செய்துகொள்ளுகிருர்கள் என்றும் இன்னும் பலவகையில் அவர்களைப்பற்றி இழிவாகவும் அவமானமாகவும் எழுதியிருக்கிருர்கள். இந்த மாகாணத்தில் இருக்கக்கூடிய கள்ளர் கள் மொத்தம் ஐம்பதாயிரம் பேர்கள்தான் என்று எழுதியிருக் கிறது. இப்படியெல்லாம் பொய்யாக எழுதுவது சரியா? 1960-ம் ஆண்டில் அவர்களைப்பற்றி இப்படி இழிவாக எழுத வேண்டிய அவ சியம் என்ன? அதைப்பற்றி ஏதாவது மறுப்பு தெரிவித்தால் அதற்கு பதில் கிடையாது. பத்திரிகையில் எழுதினுலும் பதில் கிடையாது. அதைப்பற்றி மறுப்போ, பதிலோ கொடுக்காமல் இருக்கிருர்கள். இப்படியெல்லாம் செய்வ தற்குக் காரணம் என்ன? அந்த சமுதாயத்தை அழித்து விட வேண்டுமென்ற எண்ணம் இருக்கிறதா? இந்தக் காலத்தில் இப்படியெல்லாம் எழுதலாமா, நடக்கலாமா என்று கேட்கிறேன். எதிர் கட்சியில் முக்குலத்தவரைச் சேர்ந்தவர்கள் இருக்கிருர்கள் என்ற காரணத்திற்காக இப்படியெல்லாம் கேவலப் படுத்தலாமா? காங்கிரஸ் கட்சியில்தான் அதிகமாக 20, 22 முக் குலத்தவர்கள் இருக்கிருர்கள். எதிர்க்கட்சியில் 2, 3 பேர்கள்தான் இருக்கிறேம். அப்படியிருந்தும் எதிர்கட்சியில் இருக்கிறவர்களை அழித்து விடவேண்டும் என்று இப்படி எழுதலாமா? இந்த சமு தாயத்தை அவர்களுடைய அரசியல் விரோதிகளாகக் கருதலாமா?

அடுத்தபடியாக இன்னெரு முக்கியமான விஷயத்தைச் சொல்ல வேண்டியதாக இருக்கிறது. சமீபத்தில் போலீஸ் நூற்றுண்டு விழா நடைபெற்றது. அது சம்பந்தமாக ஒரு புத்தகத்தை வெளி யிட்டிருக்கிருர்கள். அதில் பல விஷயங்களைப்பற்றி எழுதி இருக் கிருர்கள். அதில் குறிப்பாக "Police and Politics" என்று வரும் தலைப்பில் தலைவர் முத்துராமலிங்க தேவரைப்பற்றி எழுதியிருக்கிருர்கள். முதுகுளத்தூரில் அவர்தான் கலவரத்தைத் தூண்டிவிட்டார் என்றும் அவரை பிடித்த பிறகு கலவரங்கள் எல்லாம் நின்று போய்விட்டன என்றும் அவரைப்பற்றி கேவல மாக எழுதி இருக்கிருர்கள். ஒரு தேசிய தலைவரைப்பற்றி இப்படி யெல்லாம் எழுதலாமா? ஒரு கொலை கேஸ் நடந்தது. அதில் சம்பந்தப்படுத்தத்தான் அவரை கைது செய்தார்கள். கேஸ் கோர்ட்டில் நடந்தது. அதன் பிறகுதானே அவர் குற்றமற்றவ ராய் வெளியில் வந்தார். வேண்டுமென்றே கொலை கேசுக் காகத்தான் அவரை கைது செய்தார்கள். வேறு ஒன்றுக்கும் இல்லை. கொலைக்கோ, கலவரத்திற்கோ அவர் சம்பந்தமில்லை. அவர் கைது ஆவதற்கு பத்து நாளைக்கு முன்னுலேயே கலவரம் நின்றுவிட்டது என்று பத்திரிகைகளெல்லாம் ஒரு முகமாக அப்பொழுதே எழுதியிருந்தது எல்லோருக்கும் தெரியும். இந்த நிலைமையில் அவரைப்பற்றி கேவலமாக

4th March 1961] [Sri P. K. Mookiah Thevar]

எழுதலாமா? இந்த காங்கிரஸ் கட்சி அரசாங்கத்தை நடத்துவதற்கு அவர்தான் பொறுப்பு என்பதை அவர்கள் மறந்து விட்டார்கள். அவரைப்பற்றி சத்தியமூர்த்தி அவர்கள்கூட எழுதியும் பேசியும் இருக்கிறார். தென்னாட்டில் இந்த மூன்று ஜில்லாக்களிலும் காங்கிரஸ் கட்சி வெற்றி பெற்றிருக்கிறது என்றால் அதற்குக் காரணம் முத்துராமலிங்கத் தேவர்தான் என்று 1937-ம் ஆண்டிலேயே மதுரையில் திலகர் திடலில் காமராஜ் அவர்கள்கூட உட்கார்ந்திருக்க சத்தியமூர்த்தி அவர்கள் பேசியிருக்கிறார். காங்கிரஸ் ஜெயித்து வந்திருப்பதற்கு அவர்தான் காரணம் என்று எல்லோரும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். இந்த நிலைமையில் அவர் இன்றைக்கு எதிர் கட்சியில் இருக்கிறார் என்ற காரணத்தினால் அவரைப்பற்றி இப்படியெல்லாம் கேவலமாக எழுதலாமா? இந்நாட்டிற்கு அவர் எவ்வளவோ பாடு பட்டிருக்கிறார். அப்படி தேசத்திற்காக பாடுபட்ட ஒரு தேசியத் தலைவரைப்பற்றி இப்படியெல்லாம் எழுதுவது அவ்வளவு நல்லதல்ல. அதற்காக சரித்திரத்தை மாற்றி எழுத வேண்டாம் என்பதைச் சொல்லி என் உரையை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

SRI A. VEDARATHNAM: On a point of information, முக்குலத்தவர்களைப்பற்றி இழிவாக எழுதியிருப்பதாக கனம் அங்கத்தினர் சில வார்த்தைகளைப் பேசியிருக்கிறார். எந்த இடத்தில் யாரால் அப்படி எழுதப்பட்டது என்பதை தெளிவாகச் சொல்ல முடியுமா என்று கேட்கிறேன்.

DEPUTY SPEAKER: The honourable Member Sri A. Vedarathnam wants clarification.

SRI P. K. MOOKIAH THEVAR: தலைவர் அவர்களே, வாசிக்கிறேன். 1960-ம் வருஷத்திய ஜூலை மாதம் மெட்ராஸ் இன்பர்மேஷன் என்ற பத்திரிகையில் வெளிவந்திருக்கிறது. அதை எழுதியவர் ஜெயதேவ் என்பவர்.

* SRI J. MATHA GOWDER: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 1961-62 ஆண்டினுடைய நிதி நிலை அறிக்கையை கனம் நிதி அமைச்சர் அவர்கள் இந்த மன்றத்தில் சமர்ப்பித்ததைக் கண்டு அதை நான் பாராட்டி, வரவேற்று சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த நிதி நிலை அறிக்கையை கனம் நிதி அமைச்சர் அவர்கள் இந்த மன்றத்தில் படித்த பிறகு அதைக் கண்டு எதிர்கட்சி அங்கத்தினர்கள் கதி கலங்கிப் போய் விட்டார்கள். கடைசி வருஷமாகிய இந்த வருஷத்தில் அதாவது 1962-தேர்தலுக்கு முன் இந்த சந்தர்ப்பத்தில் ஏதாவது ஒரு குறை இருந்தால் அதை வைத்துக்கொண்டு மக்களிடம் சென்று அதைப் பற்றி சொல்லி தேர்தலில் வோட்டுகள் வாங்கலாம் என்று நினைத்துக்கொண்டிருந்தவர்களுக்கு இந்த அறிக்கையில் எந்தவிதமான குறையும் இல்லாமல் இருப்பதைக் கண்டு அவர்கள் கதி கலங்கிப் போய் விட்டார்கள். அப்படி குறைகளைச் சொல்லி வோட்டுகளைப் பெற்று 1962-ம் ஆண்டுக்குப் பிறகும் இங்கே வந்து உட்காரலாம் என்று நினைத்துக்கொண்டிருந்தவர்களுக்கு ஏமாற்றத்தைக்

கொடுத்து விட்டது. ஆகவே இந்த அறிக்கையை வைத்துக் கொண்டு மக்களிடத்தில் அவர்களால் வோட்டு பெற முடியாது. ஆகவே இந்த அறிக்கையினுல் நிச்சயமாக அவர்களால் 1962-ம் ஆண்டுக்குப் பிறகு இங்கே வர முடியாது என்பதை அவர்கள் புரிந்து கொள்ளுவார்கள். இந்த பட்ஜெட் அறிக்கையைப் பார்த்த பிறகும்கூட எதிர்க் கட்சியின் பிரசாரத்தைக் கண்டு மக்கள் ஏமாறமாட்டார்கள். இதை வைத்துக்கொண்டு எதிர் கட்சிக்காரர்கள் மக்களை ஏமாற்ற முடியாது, வோட்டுக் கேட்க முடியாது என்பதை மட்டும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

ஆனுல் கனம் நிதி அமைச்சரை மட்டும் ஒரு விஷயத்தில் நான் குற்றம் சாட்ட விரும்புகிறேன். அதாவது இப்படிப்பட்ட ஒரு நிதி நிலை அறிக்கையை தயாரித்திருப்பதால் ஒருக்கால் எதிர்க்கட்சிகளே 1962-க்குப் பிறகு இல்லாமல் போய் விடுமோ என்று தோன்றுகிறது. அடுத்த தேர்தலுக்குப் பிறகு இந்த சட்ட மன்றத்தில் எதிர் கட்சியே இல்லாமல் போய் விடுமோ என்று எனக்கு சந்தேகமாக இருக்கிறது. மற்ற மாகாணத்தைப் பார்த்தால் எதிர்க் கட்சிகள் இருந்து கொண்டிருக்கும்போது தமிழக மன்றத்தில் மட்டும் எதிர் கட்சி இல்லாமல் இருக்கிறது என்ற ஒரு நிலை வந்து விடுமோ என்று கூட தோன்றுகிறது. அந்த அடிப்படையில் கனம் நிதி அமைச்சர் அவர்கள் இந்த அறிக்கையை தயாரித்திருக்கிறுர்கள். அதற்குத் தான் அவரை நான் குற்றம் சாட்ட வேண்டியதாக இருக்கிறது. கண்டிப்பாக இந்த அறிக்கையை வைத்துக்கொண்டு மக்கள் முடிவு கொடுக்கப் போகிறுர்கள். தேர்தலில் அவர்கள் வருவதற்கு ஒரு வாய்ப்புக்கொடுக்காமல் கனம் நிதி அமைச்சர் அவர்கள் பட்ஜெட் அறிக்கையை தயாரித்துவிட்டார்கள். அறிக்கையில் ஏதாவது ஒரு குறையை வைத்து தயாரித்து இருந்தால் அவர்கள் வந்து இங்கே உட்காருவதற்கு ஒரு வாய்ப்பு ஏற்பட்டிருக்கும். அப்படிச் செய்யாததால் அதைக் கண்டு நான் ரொம்பவும் வருத்தப்படுகிறேன்.

அடுத்தபடியாக விலைவாசிகள் உயர்ந்து கொண்டே போகிறது என்று குறை கூறுகிறுர்கள். அதே சமயத்தில் உணவு உற்பத்தி அதிகரித்திருக்கிறது என்பதையும் ஒப்புக்கொள்ளுகிறுர்கள் எதிர்க் கட்சியிலுள்ளவர்கள். ஜனப் பெருக்கத்தைப்பற்றி காங்கிரஸ் சொன்னுல் அதை வேறு விதமாக எதிர்க் கட்சிக்காரர்கள் ஜனங்களிடத்தில் சொல்லுகிறுர்கள். காங்கிரஸ் சர்க்கார் குழந்தை பிறப்பிக்கக்கூடாது என்று சொல்லுகிறுர்கள் என்று பிரசாரம் செய்கிறுர்கள். மற்றும் எதிர்கட்சி அங்கத்தினர் சொல்லுகிறுர், குழந்தை பிறந்து விட்டால் உடனே அரிசி சாப்பிடுகிறதா என்று கேட்கிறுர். அரிசிதான் சாப்பிடுகின்றன. ஆகவே ஜனப்பெருக்கத்தைக் குறைத்தால் விலைவாசிகள் குறையும் என்று சொன்னுல் அதற்கு விரோதமாக பிரசாரம் செய்கிறுர்கள். ஆகவே அவர்கள் பிரசாரம் செய்வதில் ஒன்றுக்கு ஒன்று வித்தியாசமாக இருக்கிறது. ஜனப்பெருக்கம் குறைந்தால் உணவு அதிகமாக கிடைக்கும், அதனுல் விலைவாசிகள் குறையும் என்பதை அவர்கள் ஒப்புக் கொள்ள மாட்டேன் என்கிறுர்கள். ஆகவே, ஜனப்பெருக்கம் குறைந்தால் நிச்சயமாக விலைவாசிகள் குறையத்தான் செய்யும் என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

4th March 1961] [J. Matha Gowder]

மத்திய சர்க்காரிடமிருந்து சண்டை போட்டு வாங்கி வர வேண்டும் என்றும், இப்பொழுது சண்டை போட்டு வாங்கி வருவதில்லை என்றும் குறிப்பிட்டார்கள். அப்படியேதான் கடந்த நான்கு ஆண்டுகளாகவும் சொல்லிக்கொண்டு வருகிறார்கள். எப்படி சண்டை போடுவது, இவர்களுக்குச் சண்டை போடத் தெரியாது தான். கனம் ஆசைத்தம்பி போன்ற சண்டை போடத் தெரிந்தவர்களைக் கொண்டு ஒரு குழுவை அமைத்து அவர்களை வேண்டுமானால் மத்திய சர்க்காரிடம் போய் சண்டை போட்டு வாங்கி வரச்சொல்லலாம் என்று தோன்றுகிறது. ஆகவே அந்த முறையிலாவது சண்டை போடக்கூடியவர்களைக் கொண்ட ஒரு குழுவை அமைத்து மத்திய சர்க்காருக்கு அனுப்பலாம் என்று தோன்றுகிறது.

அடுத்தபடியாக பள்ளிக்கூடத்தை எடுத்துக்கொண்டால் இந் நாட்டில் இதற்கு முன்பு 16,000 பள்ளிக்கூடங்கள் இருந்தன. இன்றைக்கு எவ்வளவு பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன என்று பார்த்தால் 26,700 பள்ளிக்கூடங்கள் இயங்கி வருகின்றன என்றால் எவ்வளவு பள்ளிக்கூடங்களை அதிகமாக ஏற்படுத்தியிருக்கிறோம் என்று தெரியவரும். இவ்வளவு பள்ளிக்கூடங்களை ஏன் அதிகமாக ஏற்படுத்தி இருக்கிறோம் என்றால் கிராமங்களிலுள்ள மக்கள் எல்லோரும் நன்றாகப் படித்து அரசியல்வாதிகள் அவர்களை ஏமாற்றாமல் இருப்பதற்காகத்தான் அவர்கள் எல்லோரும் படித்து விட்டு முன்னேற்றமடைய வேண்டுமென்ற எண்ணத்தில் இவ்வளவு பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தி இருக்கிறார்கள். அந்த முறையில் தான் இப்பொழுதுள்ள காங்கிரஸ் சர்க்கார் இயங்கி வருகிறது. அந்த முறையில்தான் காங்கிரஸ் சர்க்கார் எல்லா கிராமங்களிலும் பள்ளிக்கூடங்களை அமைத்து வருகின்றன. இதற்கு முன்பு இந்த மாகாணத்தில் 45 சத விகிதத்தினர்தான் படித்திருந்தார்கள் என்றால், இப்பொழுது 75 சத விகிதத்தினர் படித்திருக்கிறார்கள். இதைப் பார்த்தால் எவ்வளவு தூரம் நம் மாகாணம் படிப்பு விஷயத்தில் முன்னேற்றமடைந்து இருக்கிறது என்பது தெரிய வரும். இப்படி ஒவ்வொரு இனத்தையும் இந்த நிதி நிலை அறிக்கையில் கவனித்தால் ஒவ்வொன்றும் அதிகரித்துக்கொண்டே வந்திருப்பதைப் பார்க்கலாம். ஏழை மாணவர்கள் பத்தாவது வரைக்கும் இலவசக் கல்வி பெறலாம் என்று நமது முதல் அமைச்சர் அடிக்கடி சொல்லிக் கொண்டு வந்ததை இப்பொழுது காரியத்தில் செய்திருக்கிறார். அப்படி அவர் செய்வது இதில் மட்டும் அல்ல. பேச்சில் மாத்திரம் அப்படி இல்லை. காரியத்திலும் செய்துவிட்டார். இனி ஏழை மாணவர்கள் 11-வது வகுப்பு வரையில் இலவசமாகப் படிக்க முடியும். இனி எதிர்க் கட்சிக்காரர்கள் வோட்டு வாங்குவது எங்கே? "நீங்கள் உங்கள் குழந்தைகளை எப்படிப் படிக்க வைப்பீர்கள்? நாங்கள் வந்தால் உங்கள் பிள்ளைகளுக்கு இலவசக் கல்வி அளிப்போமே" என்று அந்த ஏழை மக்களிடம் இனி எதிர்க்கட்சிக்காரர்களுடைய ஏமாற்றுப் பேச்சுப் பலிக்காது. பணக்காரர்களிடத்திலாவது போகலாம் என்றால் அங்கும் சுதந்திரக் கட்சி ஊன்றிக்கொண்டிருக்கிறது. ஆகவே, இன்றைய தினம் நடுவில் இருக்கும் கட்சிகள் திண்டாடிக்கொண்டிருக்கின்றன.

[J. Matha Gowder] [4th March 1961

அடுத்தபடியாக ஒன்றிரண்டு கருத்துக்களை என்னுடைய தொகுதி சம்பந்தப்பட்டவரையில் சொல்லிக்கொள்ள ஆசைப் படுகிறேன். இன்று கேள்வி நேரத்தில் உதகையில் சிறிய வருமானம் உள்ளவர்களுக்கு ரெஸ்ட் ஹவுஸ் கட்டப்போவதாக அமைச்சர் சொன்னார். உதகை, கோத்தகிரி, குன்னூர் ஆகிய மூன்று இடங்களிலும் அம்மாதிரி கட்டவேண்டியது அவசியமாகும். குன்னூரும் சுகவாசஸ்தலமாக இருப்பதால் அங்கு அவசியம் ஒரு ரெஸ்ட் ஹவுஸ் குறைந்த வருமானக்காரர்களுக்குக் கட்டித் தரவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

ஆசிரியர்களைப் பொறுத்தவரையில் முன்பு நீலகிரி ஜில்லாவில் வேலை செய்த ஆசிரியர்களுக்கு சம்பளத்தில் பாதி மலை அலவன்சாகக் கொடுக்கப்பட்டு வந்தது. அவர்களுக்குக் கொடுக்கப் படுகிற சம்பளம் போதவில்லை என்றுதான் சம்பளத்தை உயர்த்தினோம். ஆனால் சம்பளத்தை உயர்த்திவிட்டு மலை அலவன்சு அங்கு வேலை செய்பவர்களுக்கு இன்றும் கொடுக்கவில்லை. அதனால் பி.டி. ஆசிரியர்கள் நீலகிரி ஜில்லாவில் உள்ள உயர்நிலைப் பள்ளிகளுக்கு வரமாட்டேன் என்கிறார்கள். சமவெளிப் பிரதேசத்தில் கொடுக்கப் படுகிற சம்பளம்தான் அங்கும் என்றால் சமவெளிப் பிரதேசத்தில் இருப்பவர்களைவிட மலைப் பிரதேசத்தில் வசிப்பவர்களுக்குச் செலவு அதிகமாகிறது. ஆகவே, கண்டிப்பாக சம்பளத்தை உயர்த்தியதுபோலவே மலை அலவன்சை உயர்த்திக் கொடுக்க வேண்டும். அப்படி உயர்த்திக் கொடுப்பதுதான் நியாயம். அடிப் படைச் சம்பளத்தில் பாதியாவது மலை அலவன்சாக அவர்களுக்குக் கொடுக்க வேண்டும் என்று இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்கிறேன். இன்னும் அவ்விஷயம் பரிசீலனையில் இருப்பதாக காலம் தாழ்த்திக்கொண்டிருக்காமல் உடனடியாக அந்த அலவன்சைக் கொடுக்க முன்வரவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக சென்ற போகத்திலே கிழங்குகள் விலை மிகவும் குறைந்துவிட்டது. மற்ற உணவு தானியப் பொருள்களின் விலை உயர்ந்திருக்கும்போது கிழங்குகள் மிகவும் பாதிக்கப்பட்டு விலை இறங்கிவிட்டது. இதனால் சாகுபடிக்காக அந்த கிழங்கு சாகுபடியாளர்கள் சர்க்காரிடம் இருந்து கடன் வாங்கிப் போட்ட பணத்தைக்கூட எடுக்க முடியாது போய்விட்டது. ஆகவே, தயவுசெய்து ரெவின்யூ அமைச்சர் அவர்கள் அந்தக் கடனைத் திருப்பிக் கொடுக்க ஒரு வருஷ வாய்தாவாவது கொடுக்கவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக நீலகிரியில் 6 ஆயிரம் டன் கெட்டி அட்டை உற்பத்தி செய்கின்ற வசதி இருப்பதாக சென்னை ராஜ்ய தொழில் நிபுணர்களே சொல்லியிருக்கிறார்கள். அந்தத் தொழிலையும் உடனடியாக ஆரம்பிக்க நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

4th March 1961] [Sri J. Matha Gowder]

அடுத்தபடியாக ஒரே ஒரு வார்த்தை. தேயிலையைப் பொறுத்த வரையில் பச்சைத் தேயிலைக்கு விற்பனை வரி இவ்வாண்டு முதல் கிடையாது என்று வைத்திருக்கிறோம். ஆனால் சென்ற 1959-ம் ஆண்டில் முதலில் ஒரு முனை வரி என்றும், அக்டோபர் முதல் பல முனை வரி என்றும், திரும்ப டிசெம்பரில் ஒரு முனை வரி என்றும் பலமாதிரியாகப் போட்டு அவர்களைத் தொல்லைக்கு உள்ளாக்கி யிருக்கிறோம். சின்னச்சின்ன விவசாயிக்குக்கூட ஐந்து ரூபாய், பத்து ரூபாய் வருமானமுள்ளவர்களுக்கும் வரி போடப்பட்டது. அதை வாங்கக்கூடாது என்று சொல்லவில்லை. அவசரப்படாமல், மெதுவாக, நிதானமாக வாங்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு எனக்குப் பேச சந்தர்ப்பம் அளித்த தலைவருக்கு வணக்கம் தெரி வித்துக்கொள்கிறேன்.

* SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 1961-62-ம் வருஷத்து நிதி நிலை அறிக்கையை இந்த மன்றத்தில் நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப் பித்திருப்பதை நான் பாராட்டி சில கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன். இந்த நிதி நிலை அறிக்கை இந்த மாநிலத்தில் உள்ள சகல மக்களுக்கும், குறிப்பாக பின் தங்கிய மக்கள், ஹரிஜன மக்கள், எல்லா தாழ்த்தப்பட்ட மக்கள்—இதுபோன்றவர் களுடைய வாழ்க்கைத் தரத்தை நல்ல முறையில் உயர்த்துவதற்கு, ஏற்ற வகையில் அமைந்திருக்கிறது. எல்லோராலும் பாராட்டத் தக்க பெருமதிப்பு வாய்ந்ததாக இருக்கிறது என்பதை நம் மாநிலத்தில் உள்ள மக்கள் அனைவரும் தெளிவாக உணருவார்கள். இந்த பெருமதிப்பு வாய்ந்த அறிக்கையைப்பற்றிக்கூட மாற்றுக் கட்சி அங்கத்தினர்கள் சோஷலிஸ்ட், தி.மு.க. கம்யூனிஸ்டுகள் பலவிதமான குறைகளைச் சொன்னார்கள். இந்த அறிக்கையில் ஒன்றும் இல்லை என்று சொன்னது ஒருபுறம். இந்த அறிக்கையில் ஒன்றும் காணோம் என்று சொன்னது ஒருபுறம். அறிக்கையில் பொதுத் துறையில் பல தொழில்களை ஆரம்பிக்காமல் எல்லாம் தனி யார் துறையில் ஆரம்பிக்க இருப்பதாகக் கூறப்பட்டிருக்கிறதே என்று சொன்னது ஒருபுறம். இப்படி ஒவ்வொரு வகையில் ஒவ் வொரு கட்சியைச் சேர்ந்த தலைவர்களும் தெரிவித்தார்கள். இது எல்லாம் எதைக் குறிப்பிடுகிறது என்றால் இவர்கள் சென்ற காலத் தையும், தற்காலத்தையும் சரியான முறையில் சீர்தூக்கிப் பார்க்க வில்லை என்பதைத்தான் குறிப்பிடுகிறது. சென்ற காலத்தில் உள்ள நிலைமைக்கு எவ்வளவோ மாற்றம் ஏற்பட்டிருக்கிறது. குறிப்பாக ஒரு ஹரிஜனப் பெண்மணியை மிராசுதார் பிடித்து இழுத்துவந்து வாயில் வந்தபடி திட்டுவதோடு ஆட்களையும் விட்டு அடித்து தலை விரிகோலமாக்கி அவளை ரத்தம் சொட்ட நிற்க வைத்திருக்கும் போது அவள் புருஷன் அங்கே வந்தாலும் "இன்னும் அடியுங்கள், அப்போதுதான் அந்த பெண்பிள்ளைக்கு நல்ல புத்தி வரும்" என்று பயத்தோடு தானும் சேர்ந்து சொன்ன நிலைமை மாறிப் போய் இன்று அதே நிலச்சுவாந்தார்கள் ஹரிஜனப் பெண்மணி களிடம் பேசும்போது மரியாதையாக "அம்மா" என்று அழைப் பதைத் தவிர வேறு ஒரு சின்ன வார்த்தை சொன்னாலும்கூட தன்

மான உணர்ச்சியோடு கிளர்ச்சி முற்றி நிலச்சுவாந்தார் சிறைக்குப் போகக்கூடிய நிலைமைக்கு நாட்டு மக்களின் நிலைமை, அதுவும் விவசாயப் பெருங்குடி மக்களின் நிலைமை முன்னேற்றம் அடைந் திருக்கிறது என்பதை மறைத்துப் பேசிப் பயன் இல்லை என்பதை எதிர்க்கட்சி அங்கத்தினர்களுக்கு ஞாபகப்படுத்துகிறேன். குறை காண்கிறவர்கள் நாட்டில் இருந்த குறை என்ன, அவை நீக்கப்பட் டிருக்கின்றனவா, இல்லையா என்று பார்த்து குறைகளைச் சொல்லி அவைகளைத் தீர்க்கவேண்டும் என்று சொன்னால் நலமாயிருக்கும். விவசாயிகள் சம்பந்தப்பட்ட வரையில் நிலச்சீர்திருத்தத்தைப் பற்றியும், நில உச்சவரம்புச் சட்டத்தைப்பற்றியும் குறிப்பிட வில்லையே என்று குறைபட்டுக் கொண்டவர்கள், நல்லதொரு நிலச்சிர்த்திருத்தச் சட்டத்தை வகுத்துக்கொண்டிருக்கும் நிலை யில், அதை அவசரப்பட்டு கொண்டுவராவிட்டாலும் இன்றைய நிலைமை என்ன, முன்பு இருந்த நிலைமை என்ன என்பதைப் பார்க்க வேண்டாமா? நிலத்தில் சாகுபடி செய்து கொண்டிருந்த ஒரு சாதாரண ஹரிஜன் சென்ற காலத்தில் நிலத்தில் உழைத்த தோடு சரி, ஆண்டை நினைத்தால் நிலத்தைவிட்டு வெளியேற்றலாம், மிகக் கெஞ்சினால் உழைத்த கூலியில் பாதி பெறலாம் என்று இருந்த நிலைமை மாறி, இன்றைக்கு தன் உழைப்புக்கேற்ற கூலியைப் பெறுவதோடு, நிலத்தில் இருந்து நினைத்தபோது வெளியேற்ற முடியாது என்கிற பாதுகாப்பைப் பெற்றதோடு—இந்த உரிமையும் பாதுகாப்பும் மீறப்படும்போது ரெண்ட் கோர்ட்டில் இருந்து சுப்ரீம் கோர்ட் வரையிலும்கூட சென்று தன் உரிமையை நிலை நாட்டிக்கொள்ள வசதியும், வாய்ப்பும், விழிப்பும் பெற்றிருக்கிறான் என்பதை யாரும் மறுக்க முடியாது, மறைக்கவும் முடியாது. இன்றைக்கு வள்ளுவர் சொன்னதுபோல

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்று எல்லாம்
தொழுதுண்டு பின் செல்பவர்."

என்கிற நிலைமையை நாம் உண்மையாக ஆக்கியிருக்கிறோம் என்றால் இது ஒரு பெரிய முன்னேற்றம் இல்லையா? இன்றைக்கு ஒரு நிலச்சுவாந்தார் தன் இஷ்டம்போல சாகுபடியாளரை நிலத்தில் இருந்து வெளியேற்ற முடியாது என்றால் அதற்குக் காரணம் இந்தச் சர்க்கார் சாகுபடியாளர்களுக்கு, விவசாயப் பெருங்குடி மக்களுக்கு அளித்திருக்கும் பாதுகாப்புத்தான் என் பதை எல்லோரும் உணர்வர். நிலச்சுவாந்தார் வீட்டு வாசலிலே நாள் கணக்காக தான் உழைத்த உழைப்புக்குச் சேரவேண்டிய கூலியைப் பெறுவதற்காக தவம் கிடந்த நிலைமை மாறி தன்னுடைய உரிமை, தன்னுடைய ஊதியம் மறுக்கப்படுகிறது என்றால் தன் உரிமையை நிலைநாட்டிக்கொள்ள சாதாரண விவசாயி கூட ஹைகோர்ட் வரையில்கூட சென்று வெற்றியோடு திரும்பு கிறான் என்றால் அதற்காக இந்தச் சர்க்காரை எல்லோரும் பாராட்டத்தான் வேண்டும்.

மேலும் எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் சிலர் வெள்ளையர் காலத்தில் எவ்வளவோ நல்லதாக இருந்தது என்று சொன்னார்கள். வெள்ளையர் ஆட்சியில் சௌகரியம் அடைந்தவர்கள் சொல்லலாம்.

4th March 1961] [Sri T. R. Ramamirtha Thondaman]

வெள்ளையர் காலத்தில் எனக்குத் தெரியாதா என்ன? இந்த நாட்டில் பெரிய ஜமீன்தார்களாக இருந்தவர்கள் நம் நாட்டைக் காட்டி கொடுத்த பட்டதாரிகள் சமஸ்தான மன்னர்கள்தான் வெள்ளையர் காலத்தில் இந்த மன்றத்தில் இருந்தார்கள். அந்த பெரிய பெரிய ஜமீன்தார்கள் மற்றவர்கள்கூட ஒரு சாதாரண வெள்ளை உத்தியோகஸ்தனைக் காணச் சென்றால் அங்குள்ள டவாலி ப்யூன் "துறை தீனி தின்கிறார், இப்போது பார்க்க முடியாது, போ" என்றுதான் விரட்டி அடித்திருக்கிறான். ஆனால் இன்றைக்கு அமைச்சர்களில் இருந்து, பெரிய அதிகாரிகள் யாராக இருந்தாலும் சரி—யாரை வேண்டுமானாலும், எப்போது வேண்டுமானாலும் யாரும் காணலாம், கண்டு பேசி குறைகளைச் சொல்லிக் கொள்ளலாம் என்கிற நிலைமை நாட்டில் உண்டாக்கப்பட்டிருக்கிறது என்றால் இது முன்னேற்றம் இல்லையா என்று கேட்கிறேன். கல்வி சம்பந்தப்பட்ட வரையில் எடுத்துக்கொண்டால் என்னுடைய தொகுதியையே எடுத்துக்கொண்டாலும் ஆரம்பப் பள்ளிகளில் இருந்து ஆரம்ப உயர்நிலைப்பள்ளிகள், உயர்நிலைப்பள்ளிகள் பல வளர்ந்துகொண்டே போவதோடு, ஆடுதுறையில் ஒரு கல்லூரி ஏற்படுத்த வேண்டும் என்கிற கோரிக்கை வரும் அளவுக்கு, எல்லா ஏழை மாணவர்களுக்கும் இலவசமாக 11-வது வரையில் படிக்கலாம் என்கிற நிலைமை அளவுக்கு முன்னேற்றம் வளர்ந்துகொண்டே போகிறது என்றால் இதை யார் மறுக்க முடியும்? இவையெல்லாம் வளர்ச்சி இல்லையா? நாட்டு மக்களிடையே இத்தனை விழிப்பு உணர்ச்சி உண்டாவதற்குக் காரணமாக இருந்தவர்கள் யார்? ஏதோ வெள்ளையர் காலத்தில் போட்ட திட்டத்தைத்தான் இவர்கள் நிறைவேற்றுகிறார்கள் என்று சொன்னார்கள். வெள்ளையன் காலத்தில் நாமோ, பேசுகிற நண்பர்களோ இங்கு இருக்க முடியாது. நாம் நம் நாட்டுக்குகந்த திட்டத்தைத் தீட்டுகிறோம். வெள்ளையன் காலத்தில் இருந்தது என்ன? அதைப்பற்றியே பேசுகிறார்களே தவிர இங்குள்ள நிலைமை என்ன? இங்கு அடைந்திருக்கும் முன்னேற்றம், வளர்ச்சி என்ன இவற்றைப் பார்க்காதவர்களைப்பற்றி என்ன சொல்வது என்று எனக்குப் புரியவில்லை. அவர்களை ஜன்னி கண்டவர்கள் என்றுதான் நினைக்கிறேன். சாதாரணமாக ஒரு புருஷன் தன் வீட்டிற்கு வேண்டிய எல்லா சாமான்களும் வாங்கிப்போட்டு, தன் வீட்டிற்கு வேண்டிய எல்லா வசதி சாதனங்களையும் வாங்கிப் போட்டு, தன் மனைவிக்கு வேண்டிய ஆடை அணிகளை எல்லாம் வாங்கிக் கொடுத்து, குடும்பத்தை நல்ல முறையில் ரட்சிக்கும் போது அந்தப் பெண் சொந்த புருஷன் முன் அடுத்த வீட்டுக்காரனது குணத்தையும், அவனுடைய அழகு அந்தஸ்தையும் பற்றி பேசுவாள் என்றால் அந்தப் பெண்ணைப்பற்றி அவள் புருஷன் என்னவிதமாக நினைக்கவேண்டும்? ஒன்று அவன் விவாகரத்து செய்துகொள்ள வேண்டும் அல்லது அவளை துலைத்து கட்ட வேண்டும் அல்லது அவளை மணந்துகொண்டதற்காக தற்கொலை தான் செய்துகொள்ள வேண்டும். நம்முடைய நாட்டை அடிமைத் தனத்திலிருந்து விடுதலை அடையச்செய்ய பலவிதமான தியாகங்களைப் புரிந்ததோடு சுதந்திரம் பெற்றபின் நாட்டு மக்கள் ஒருவரை

ஒருவர் அடிமைப்படுத்தி வைத்திருக்கும் அவல நிலையைப் போக்குவதற்கும், உயர்ந்தவன், தாழ்ந்தவன், பணக்காரன், ஏழை என்ற வித்தியாசத்தை ஒழிப்பதற்கும் பலவிதமான காரியங்களைச் செய்து தாழ்த்தப்பட்ட, பின் தங்கிய, ஹரிஜன ஏழை பாட்டாளி மக்கள், விவசாயப் பெருங்குடி மக்கள் இவர்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்தப் பலவிதமான சட்டங்களையும், திட்டங்களையும் வகுத்து, கல்வியில் எல்லா ஏழை மக்களும்கூடச் சிறந்து நிற்க வழிவகை வகுத்து, சுகாதார வசதி, வைத்திய வசதி எல்லாவற்றையும் பெருக்கி, அதுவும் காலரா போன்ற நோய்க்கு நூற்றுக் கணக்கான, ஆயிரக்கணக்கான மக்கள் பலியாகிக்கொண்டிருந்த பகுதிகளில் எல்லாம் அந்தத் தொத்து நோய் தோன்றுதவாறே ஒடுக்க தீவிர நடவடிக்கை எடுத்து—இப்படி ஒவ்வொரு துறையிலும் பலவிதமான காரியங்களைச் செய்து நாட்டை சுபீட்சப் பாதையில் இட்டுச் செல்கிற ஒரு சர்க்காரைப் பார்த்து எவ்விதமான முன்னேற்றமும் செய்யவில்லை என்று இவர்கள் சொன்னால்—நாம் பரிதாபப்படாமல் என்ன செய்வது? எதிர்க்கட்சிக்காரர்களுக்கு வரும் தேர்தலில் ஒரு சீட்கூட கிடைக்கமுடியாத நிலையில் அவ்வளவு நன்மைகளையும் வரி போடாமல இந்த சர்க்கார் நிறைவேற்றிவிட்டதே என்று பார்க்கவுடன் இந்த நிலையில் எதிர்க்கட்சிகள் மோதுகின்றன என்பதைத்தான் உணரவேண்டியிருக்கிறது. மேலும் இந்த நிலை ஒன்றுமேயில்லை என்று சொல்வது

1 p.m. எதைக் குறிக்கிறது என்று சொன்னால் எதிர்க்கட்சிகளுக்கு இருந்த சுரம் வியாதி ஜன்னியாக மாறி உளறல் இங்கே ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது என்பதைக் காட்டும் முறையில்தான் எதிர்க்கட்சி அங்கத்தினர்களின் பிரசங்கங்கள் இருக்கின்றன என்பதைத் தவிர வேறு எதுவுமிருப்பதாகத் தெரியவில்லை. பொருளாதார வளர்ச்சி ஏற்படவில்லை, முன்பெல்லாம் விலைவாசி குறைந்திருந்தது, இப்பொழுது அவை ஏறிவிட்டது என்றெல்லாம் கூறுகிறார்கள். மதிப்பிற்குரிய எனது எதிர்க்கட்சி நண்பர் கருணாநிதி அவர்கள் பேசுவதற்கு, சிறப்புக் கூட்டம் போடுகிறார்கள். ஒரு ரூபாய் கட்டணமும் வாங்குகிறார்கள். பேச்சுக்குப் பணம் வாங்குவது என்ற முறையில் பார்த்தால் அவர் பேச்சைக் கேட்பதற்கு ஆயிரக்கணக்கில் மக்கள் போகிறார்கள். டிக்கட் வாங்கிக்கொண்டு போவதோடு போக்குவரத்து • சிலவு வேறு. ஆயிரக்கணக்கில் பொருளாதாரம் வளர்ச்சியடையவில்லை யென்றால் பின் அவர்கள் டிக்கட் வாங்கிக்கொண்டு பெருமளவில் எப்படி அவர் கூட்டத்திற்கு போக முடிகிறது? இதைக் கண்டால் பார்த்தும்கூட பொருளாதார வளர்ச்சியில்லையென்றால் அது நியாயமா? ஆகவே, இது ஜன்னியின் உளறல் என்பதைத் தவிர வேறு எதுவுமாகயிருக்க முடியாது. கல்வித்துறையிலும், பொருளாதாரத் துறையிலும், கூட்டுறவுத் துறையிலும் இப்படி பல்வேறு துறைகளில் இந்த அரசாங்கம் அபிவிருத்தி செய்து வருவது கண்டு அதை எதிர்க்க முடியாது, தனிப்பட்ட முறையில் எதிர்த்து கட்சி சேர்த்து முறியடிக்க முயற்சித்தும் அதுவும் முடியாததால் கூட்டு சேர்த்தும்

4th March 1961] [Sri T. R. Ramamirtha Thondaman]

முடியாமல் சிதைந்து விடுமோ என்று அஞ்சித்தான் இப்படிப் பேசுகிறார்களோ, என்னவோ தெரிய முடியாது திகைக்க வேண்டிய நிலையில்தான் இருக்கிறது இன்றைய நிலை.

நம் நாடு பல துறைகளில் முன்னேறியிருக்கிறது. கல்வித் துறை, தொழில்துறை, சுகாதாரத்துறை, போன்ற எல்லாத் துறைகளிலும் முன்னேறியிருப்பதைக் கண்டும் அதைப் புரிந்துகொள்ள முடியாவிடில் சமுதாய நலத் திட்டப் பகுதிகளில் செயல்படும் செயல்களை அவர்கள் பார்க்கட்டும். (மணியடிக்கப்பட்டது.) விவசாயம் சம்பந்தமாக ஒரு வார்த்தை. தீவிர உணவு திட்டம் அமுலில் இருக்கும் என் பகுதியில் பந்தநல்லூர் சரகம் கருப்பூரில் கலப்பு உரம் தயார் செய்வதற்கு ஏ. கே. ரங்கநாத அய்யர் மனு போட்டிருக்கிறார். அதை கவனித்து அங்கு கலப்பு உரம் தயார் செய்யும் ஒரு தொழிற்சாலை நிறுவ வேண்டும். அதுபற்றி அநேக மனுக்கள் கொடுக்கப்பட்டும் அவை சிபார்சு செய்யப்படாமலிருக்கிறது. இப்பொழுது அந்த ஏ.கே.ஆர். பண்ணையில் ஏக்கருக்கு 60 கலம் சாதாரணமாக விளைகிறது. ஆகவே, அதைக் கவனித்து அதற்கு ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதை அனுமதித்தால் சுமார் 3,000 ஏக்கருக்கு உரம் அதன்மூலம் கிடைக்கும். பின்னர், இப்பொழுது விவசாயிகள் வெளியேற்றப்படுவதாக புகார்கள் வருகின்றன. குறிப்பாக பாபனாசம் தாலூகா கீழ விட மடல் கருப்பூரில் நிலச்சுவாந்தார்கள் உழவர்களை வெளியேற்றுவதை தடுக்கவேண்டும். பின்னர், உடையார்பாளையம் தாலூகாவில் குடி தண்ணீர் இன்றியும், பாசன வசதியின்றியும், பாதிக்கப்பட்டிருக்கும் பிரதேசங்கள் அநேகம் இருக்கின்றன. மின்சார அமைச்சர் அவர்களின் முயற்சி காரணமாக அங்கு மின்சார வசதி செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது. அங்கு அமைச்சர் அவர்களின் சிலகூட கட்ட ஏற்பாடுகள் செய்கிறார்கள் என்று நம்புகிறேன். கீழே இருக்கும் நீரை மேலே கொண்டுவந்து குடி தண்ணீர் வசதிகள், பாசன வசதிகள் செய்யவேண்டும். மேலும் வேண்டிய வசதிகளை உடையார்பாளையம் தாலூகாவில் ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் என் தொகுதியில் சோழபுரத்தில் ஒரு ஹைஸ்கூலும், பந்தநல்லூரில் ஒரு ஹைஸ்கூலும், திருப்பனந்தாளில் ஒரு ஹைஸ்கூலும் கேட்டு விண்ணப்பங்கள் வந்திருக்கின்றன. அதை இந்த வருஷமே ஆரம்பிக்க அங்கீகாரம் அளிக்க கேட்டுக்கொள்வதோடு, ஆடுதுறையில் ஒரு காலேஜ் ஏற்படுத்த திருப்பனந்தாள் மடாதிபதி உதவியால் நடைபெறும் முயற்சிக்கு உதவியாக அங்கு ஒரு கல்லூரி ஏற்படுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

* **SRI K. ANBAZHAGAN** : சட்டமன்றத் **துணைத் தலைவர்** அவர்களே, இந்த ஆண்டு நிதிநிலை அறிக்கையை வெளியிட்ட அமைச்சர் அவர்கள் அந்த அறிக்கையைப் படிக்கிறபோதே தன்னையும் அறியாமல் தளர்ச்சியடைந்ததை அவர் அறிக்கையைப் படிக்கும்போது நான் கவனித்துக் கொண்டிருந்தேன். நீண்ட அறிக்கையைத் தயாரித்ததாலும் படித்ததாலும் ஏற்பட்ட

[Sri K. Anbazhagan] [4th March 1961

களைப்போ அல்லது இவ்வளவு நீண்ட அறிக்கையைத் தயாரித்தும் நாட்டு மக்கள் அதற்குரிய முழுப் பலனையும் பெற மாட்டார்களே என்ற நினைப்பினால் ஏற்பட்ட சலிப்போ அவர் தளர்ச்சியடைந்தார். அவர் அவ்வறிக்கையைப் படிக்கும்போது அதைக் கேட்டுக் கொண்டிருந்த நாமும் தளர்ச்சியடைந்தோம். இந்த அறிக்கையைப் பின்னர் படித்த நாட்டு மக்களும் தளர்ச்சியடைந்திருக்கிறார்கள். ஆகவே, இதனால் அனைவருக்கும் ஏற்பட்டுள்ள தளர்ச்சியை மாற்றுவதற்கு அமைச்சர் அவர்கள் புனராலோசனை செய்ய வேண்டுமென்று வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன். இந்த ஆண்டு நிதிநிலை அறிக்கை ஓரளவு இழப்புக் கணக்கைக் காட்டுவதாகயிருந்தாலும் ஒருவேளை காங்கிரசுக்கு அது லாபக் கணக்கைக் காட்டுமென்று எதிர் பார்க்கிறார்களோ என்று ஐயுறுகிறேன். இழப்புக் கணக்கைக் காட்டியும் புதிய வரி விதிக்காமல் இருப்பதால் நாட்டு மக்களுக்கு நன்மை செய்து தருவதாக, வரி விதிக்காமலேயே அவர்களுக்காகத் தாங்கள் அரசு நடத்துகிறோம் என்பதைக் காட்ட இந்த அறிக்கை பயன்பட்டிருக்கிறது. சட்டமன்றக் கூட்டங்களில் பேசுகிறபோது அமைச்சர்கள் இதை ஒரு தனி அரசாங்கமாகக் கருதிப் பேசினாலும் டெல்லி சர்க்கார் இந்நாட்டு மக்களுக்கு நாளும் பல அறிவிப்புகள் தந்து கொண்டிருப்பதை மக்கள் நன்கு அறிவார்கள். இங்குகூட ஒரு உறுப்பினர் பேசியதற்கு மறுப்பளித்த அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார்கள், சமஷ்டி சர்க்கார் அப்படித்தான் இருக்க முடியுமென்று. நான் தமிழ்நாட்டு மக்கள் சார்பில் பேசுகிறேனே தவிர எட்டு அமைச்சர்களின் சார்பில் அல்ல. அவர்கள் சார்பில் யாரும் நீண்ட நாட்கள் பேசவும் முடியாது. தமிழ்நாட்டு மக்கள் இன்றையதினம் டெல்லி சர்க்காரின் நிதிநிலை அறிக்கைக்கு உட்பட்டவர்களாகத் தான் இருக்கிறார்கள். டெல்லி சர்க்காரின் நிதிநிலை அறிக்கை வெளியானவுடன் மண்ணெண்ணெய் விலை ஏறிவிட்டது. மக்கள் பயன்படுத்தும் மண்ணெண்ணெய் விலை ஏறாது என்று மத்திய அரசாங்க அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். ஆனால் அதை வாங்கச் செல்லும் மக்கள் அதற்குக் கடைகளில் அதிகம் விலை தரவேண்டிய நிலை இரண்டு நாட்களாக ஏற்பட்டிருக்கிறது. தீப்பெட்டியின் விலையும் ஏறுவதாகயிருக்கிறது. காப்பியின் விலை ஏறிவிட்டது. உணவும் விலை ஏறிவிட்டது. பாக்கும்—புகையிலையும் விலை ஏறுகின்றன. அமைச்சர்களின் மதிப்பைத் தவிர மற்றவைகளெல்லாம் இப்பொழுது விலை ஏறிக் கொண்டிருக்கின்றன. மத்திய அரசாங்கத்தின் புதுவரி விதிகள் காரணமாக நம் நாட்டு மக்கள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். மத்திய அரசாங்க வரி விதிப்பு காரணமாக நம்நாட்டு மக்கள் எவ்வளவு பொருள் இழக்கப் போகிறார்கள், எவ்வளவு இலாபம் நன்மை அடைந்திருக்கிறார்கள் என்பது குறித்து நிதியமைச்சர் அவர்கள் ஒரு புள்ளிவிவரம் தருவார்களேயானால் நான் மகிழ்ச்சியடைவேன். வரி போடுவது மத்திய சர்க்கார் அல்லவா, அப்படியிருக்க நீங்கள் ஏன் எங்களைக் குறை கூறுகிறீர்கள் என்று நிதியமைச்சர் அவர்கள் கேட்கக் கூடும். டெல்லி சர்க்கார் வரி போடுவதினால் பஞ்சாப் பாதிக்கப்

4th March 1961] [Sri K. Anbazhagan]

படுவதை விட, மத்திய அரசினர் வரி விதிப்பினால் மேற்கு வங்காளமும், உத்தரப் பிரதேசமும் பாதிக்கப்படுவதைவிட தமிழ் நாட்டு மக்கள்தான் குறிப்பாகத் தென்னாட்டு மக்கள்தான் மிகுதியாகப் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். எந்தப் பகுதிகளில் பின்தங்கிய மக்கள் வாழ்கிறார்களோ அந்தப் பகுதிகள் தான், இந்த வரிகளால் மிகுதியாகப் பாதிக்கப்படும். ஏழைகள் மடியில் இருக்கும் பணத்தை—சில்லரைக் காசுகளைக் கைப்பற்றும் முறையில்தான் டெல்லி சர்க்கார் வரி போட்டிருக்கிறதே தவிர இது பணக்காரர்களுக்குப் போடப்பட்டிருக்கும் வரி அல்ல. காங்கிரஸ்காரர்களாகிய நாங்கள் சோஷியலிஸ தர்மத்தைக் கடைப்பிடிக்கிறோம் என்று சொல்கிறார்களே அதே சோஷியலிஸத்திற்கே இன்று வரி போடுகிறது மத்திய அரசு. பணக்காரர்களுக்கு வரி போடவில்லை, ஆனால் சம தர்மத்திற்கு வரி போடுகிறது. இதை முதலாளிகளுக்கு போட்ட வரியாக யாரும் கருத மாட்டார்கள். நாங்கள் வரி போடவில்லையே என்று நீங்கள் சொல்லலாம், ஆனால் மற்றார் வரி போடுவதைப் பார்த்துக்கொண்டே இருந்துவிட்டு, நாங்கள் ஒன்றும் வரி போட வில்லையே என்று சொல்லுவது அரசியல் தந்திரமாக இருக்கலாமே தவிர வேறு அல்ல என்பது அரசியல் தெரிந்தவர்களுக்கு நன்கு விளங்கும். காங்கிரஸ் ஆட்சி வரி போடுகிறது. அது மொரார்ஜி தேசாயாகயிருந்தாலும் சரி அல்லது நிதியமைச்சர் சுப்பிரமண்யம் அவர்களாகயிருந்தாலும் சரி, காங்கிரஸ் ஆட்சி வரி போட்டு மக்களை கசக்கிப் பிழிகிறார்கள் என்ற உண்மை மக்களுக்குத் தெரியாமல் போகாது. ஆனால் நிதியமைச்சர் சுப்பிரமண்யம் அவர்கள் சொல்லக்கூடும் நானா வரி போட்டேன் என்று. அதற்கு நான் சொல்லக்கூடிய பதில், நீங்கள் இல்லாவிட்டால் உங்கள் அண்ணன் வரி போட்டிருக்கிறார், அதுவும் மக்களுக்குத் தொல்லை, தீமை விளைவிக்கக் கூடியதென்று. இப்படி மத்திய அரசாங்கம் நடந்து கொண்டிருக்கும்போது இம்மாநில அரசாங்கமாவது தமிழ்நாட்டு மக்களை முன்னேறுவதற்கு ஏதாவது புது திட்டத்தை மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தக்கூடிய திட்டங்களை நிறைவேற்றியிருக்கிறார்களா என்றுதான் எவரும் கேட்பர். மக்களின் சராசரி வருமானத்தை எடுத்துப் பார்த்தால் மற்ற மாநிலங்களில் இருப்பதை விட நம் மாநிலத்தில் மனிதனின் சராசரி வருமானம், "பெர்காப்பிட்டா இன்கம்" இரண்டணா அல்லது நாலணா அதிகமாகியிருந்தால் அதை நான் நிச்சயமாகப் பாராட்டுவேன். 1950-ல் இருந்ததைவிட அதிகமாகியிருக்கலாம் இப்பொழுது. ஆனால் அதேசமயத்தில் விலைவாசி ஏற்றம் எந்த அளவிற்கு இருக்கிறது, எந்த அளவு விலைவாசி ஏறியிருக்கிறது என்பதை ஒப்பிட்டுப் பார்க்கவேண்டும். இந்த விலைவாசியேற்றத்தினால் பாதிக்கப்படக்கூடிய மக்கள் யார்? நடுத்தர மக்களும், பிற்பட்ட மக்களும்தான். எந்த எந்த திட்டங்களால் சராசரி வருமானத்தை உயர்த்தினோம் என்பது குறித்து விளக்கம் கொடுத்தால் அது மகிழ்ச்சியளிக்கக் கூடும். ஆனால் இதுபற்றிய கருத்தை நிதியமைச்சர் அவர்கள் திட்டவட்டமாகத் தெரிவிக்கவில்லை. பொருளாதார வளர்ச்சிக்கு அடிப்படையாயிருப்பது விவசாயம்

[Sri K. Anbazhagan] [4th March 1961

என்று தொடங்கி, அதை மட்டும் நம்பி நாம் முன்னேற முடியாது என்பதை ஒப்புக்கொண்டு, தொழில் துறை வளர்ச்சி மூலம்தான் நாம் முன்னேற முடியுமென்று குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆனால் தமிழ் நாட்டில் தொழில் வளர்ச்சிக்கு என்று மொத்தமாக எவ்வளவு மூலதனம் போடப்பட்டிருக்கிறதென்று எங்கேயாவது காட்டியிருக்கிறார்களா என்றால் இல்லை. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் நம் மாநிலத்திற்காக 291 கோடி ஒதுக்கப்பட்டிருக்கிறது நம் பங்காக. அமைச்சர் அவர்கள் அதையே திரும்பத் திரும்பச் சொல்கிறார்களே தவிர மற்ற துறைகளில் நமக்குக் கிடைக்க வேண்டிய நிதி கிடைப்பதற்கு என்ன வழி செய்துள்ளார்கள்? அந்த வழியில் கிடைக்கவேண்டிய தொகை கிடைக்காவிட்டால் தமிழ்நாடு எப்படி முன்னேற முடியும்?

நான் ஆட்சியாளர்களைக் கேட்டுக் கொள்வதெல்லாம், மாநில அரசாங்கத் துறையில் மூன்றாவது திட்டத்தில் 300 கோடி செலவு செய்யப் போகிறோம் என்று சொன்னாலுங்கூட, அது மத்திய அரசாங்கம் நேரடியாகச் செலவிடும் மூலதனம், நெய்வேலியில் நிலக்கரிச் சுரங்கம் ஏற்படுத்துவதாக இருந்தாலும் சரி, அல்லது அதை ஒட்டிய வேறு தொழிற்சாலைகள் ஏற்படுத்துவதாக இருந்தாலும் சரி, சேலம் இரும்பு உருக்குத் தொழிற்சாலை ஏற்படுத்துவதற்கு 25 கோடி செலவிடப்போவதாக இருந்தாலும் சரி, மொத்தத்தில் எவ்வளவு என்பதும், இத்தனையும் தவிர, தனியார் துறையில் தொழில் வளர மூலதனம் போடுவதாக இருந்தாலும் சரி, மொத்தமாகத் தமிழ்நாட்டுக்கு என்று எத்தனை கோடி அளவு மூலதனம் போடப்படுகிறது என்பதற்கு அமைச்சர் அவர்கள் கணக்குக் கூற வேண்டும். எந்தத் துறையில் மூலதனம் போடுகிறார்கள் என்பது கூட ஒரு பக்கத்தில் இருக்கட்டும். பஸ் முதலாளிகள் மூலம் போடும் முதலாக இருந்தாலும், கணக்கு வேண்டும். பஸ் முதலாளிகளுக்குத் தரும் புதுப்புது அனுமதி எந்த அளவுக்கு அமைச்சர்களுக்குப் பயன்படுகிறது, அல்லது பஸ் முதலாளிகளிடத்தில் சென்று நிதி வசூல் செய்வதற்குப் பயன்படுகிறது என்பதை நாங்கள் அறிந்திருக்கின்றோம். அவர்களிடத்தில் சென்று நிதி வசூல் செய்கிறார்கள் என்று எடுத்துச் சொன்னால், அதைப் பார்த்து அமைச்சர்கள் வெட்கப்படாத அளவுக்குச் சமாளிக்கிறார்கள். அது மட்டுமல்ல, இதைப்பற்றிப் பேசுவதே இவர்களுக்கு வழக்கம் என்று சிரித்துக்கொண்டே சொல்லுகிறார்கள். இந்த நிலைமையில் இந்த நாட்டுக்குக் கிடைக்கவேண்டிய தொகை தனியார் துறையில் கிடைத்தாலும் சரி, தொழில் வளர வழியுண்டு என்று எண்ணலாம். ஆனால் அதே நேரத்தில் இதற்கான பல கருவிகள் வரவழைக்கவேண்டும் என்று மத்திய அரசைக் கேட்கின்ற நேரத்தில் வெளிநாட்டுச் செலாவணி இல்லை என்று சொல்லி மறுத்துவிடுகிறார்கள், இந்த நிலையில் தமிழ் நாட்டில் போடப்படுகின்ற மூலதனம் எந்த அளவுக்குப் பயன்படும் என்பது பலருக்கும் நன்றாகத் தெரிந்திருந்தாலும்கூட இந்த நாட்டினுடைய தொழில் வளர்ச்சிக்காக மொத்தமாக எவ்வளவு தொகை

4th March 1961] [Sri K. Anbazhagan]

ஒதுக்கப்படுகிறது என்பதை நிதி அமைச்சர் அவர்கள் விளக்கமாகச் சொல்ல முன்வரவேண்டும். எனக்கும் நிதி அமைச்சர் அவர்களுக்கும் ஏற்பட்டுள்ள நட்பின் விளைவோ என்பது தெரியவில்லை, பெரும்பாலும் நான் பேசும்போது நிதி அமைச்சர் அவர்கள் இந்த சபையில் இருப்பதில்லை. இவர் இங்கு இல்லாவிட்டாலும்கூட நான் கூறுகின்றவைகளுக்குப் பதில் அளிப்பார்கள் என்றால் நான் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். இப்படிப்பட்ட உரிமையான காரியங்களில் கவனம் செலுத்தாமல் இந்த நாட்டில் உணவு உற்பத்தி அதிகமாகியிருக்கிறது என்று சொன்னால், அதற்கு நான் சொல்லக்கூடியது இதுதான். இந்த நாட்டு மக்களுடைய சொந்த வாழ்க்கையில்தான் உற்பத்தியின் திறமையையும் பலனையும் காண முடிகிறதே தவிர, நாட்டில் விவசாய உற்பத்தியில் தக்க பலன் ஏற்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. முன் கிடைத்ததைவிட அதிகப்படியான விளைச்சல் ஏற்பட்டிருக்கிறது என்றால், விலைவாசி ஏற்றம் தடைபட்டிருக்கிறதா என்றால் இல்லையே. விலைவாசி ஏறிக்கொண்டே இருக்கிறதே என்று நாம் கேட்டால், மக்களிடத்தில் வாங்கும் சக்தி அதிகமாகியிருக்கிறது என்று காரணம் சொல்லப்படுகிறது. அப்படியென்றாலும் கொடுக்கும் காசு அதிகமானதே தவிர, கொடுக்கப்படும் காசுக்கு வாங்கப்படும் பொருட்கள் அதிகமாகக் கிடைக்கிறதா என்றால் இல்லையே. ஒரு ரூபாய்க்கு ஒரு படி அரிசி வாங்கிக் குடும்பம் நடத்தியோர், இப்போது ஒன்றேகால் படி அரிசி வாங்கும் சக்தி பெறவில்லை. ஐந்து ரூபாய்க்கு ஒரு வேட்டியும் ஒரு துண்டும் வாங்கியிருந்தோம் என்றால் இப்போது அதே ஐந்து ரூபாய்க்கு ஒரு வேட்டியும், ஒரு துண்டுங்கூட வாங்கவில்லை. குடும்பச் செலவு எவ்வளவு ஆகும் என்று தெரியாத அமைச்சர்களும் நம்மிடத்தில் இருக்கிறார்கள், அவர்கள் மற்றவர்கள் சொல்லித்தான் குடும்பச் செலவைப்பற்றித் தெரிந்துகொள்ளவேண்டும். உண்மையிலேயே வாங்கும் சக்தி அதிகமாகியிருக்கிறது என்றால் கொடுக்கிற காசுக்கு வாங்குகிற பண்டம் தேவையை நிறைவேற்றக் கூடியதாக இருக்கவேண்டும். சராசரி வருமானம் உயர்ந்திருந்தால்தான் அது முடியும். ஆகவே இன்றைய நிலையில் சராசரி வருமானம் தாழ்ந்துதான் இருக்கிறது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அதற்கு அடுத்து, எனக்கு முன்னால் பேசிய மதிப்பிற்குரிய உறுப்பினர் ஒருவர் மின்சாரத் துறையில் நாம் மகத்தான வளர்ச்சியை அடைந்திருக்கிறோம் என்று குறிப்பிட்டார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில் நான் 'டெக்னோ எக்னமிக் சர்வே ஆப் மெட்ராஸ்' என்ற நூலில் குறிப்பிட்டிருப்பதைக் கருத்து அளவில் சொல்ல விரும்புகிறேன். இங்கே நீர்விசையினால் கிடைக்கின்ற மின்சார சக்தியின் அளவானது மற்ற தெர்மல் முறைகளினால் கிடைக்கின்ற மின்சார சக்தியைவிட மிகவும் அதிகமாக இருக்கிறது, மொத்தத்தில் ஏறத்தாழ 75 விழுக்காடாக இருக்கிறது. அகில இந்திய ரீதியில் கணக்கெடுத்துப் பார்த்தால் 45 சதவிகிதம் என்று இருக்கிறது. ஒரு பக்கத்தில் நீர்விசை முறையில் மின்சாரம்

அதிகமாக உற்பத்தி செய்தும்கூட, அதனால் முழுப்பயன் கிடைக்கவில்லை. காரணம் என்னவென்றால் மின்சாரத்தை நெடுந் தூரம் கொண்டு செல்லுகிறபொழுது, அப்படிச் செல்வதால் ஏறத் தாழ 21 சதவிகிதம் (விழுக்காடு) கழிவு ஏற்படுகிறது. நீர்விசையில் இருந்து எடுப்பதால் நெடுந்தொலைவு கொண்டு செல்ல நேருகிறது. **'In Madras, however, the loss in transmission and distribution was 21 per cent higher than in any other State and can be directly ascribed to the longer distances over which the hydro-electricity is to be transmitted.'** என்று சொல்லப்பட்டிருக்கிறது.

உற்பத்தி செய்கின்ற மின்சாரத்தில் ஐந்தில் ஒரு பங்கு இடையில் பாழாகிறது என்று இந்த சர்வே செய்தவர்கள் தெரிவித்து இருக்கிறார்கள். கிராமங்களில் அதிகமாக மின்சாரம் பரப்பப் பட்டு, விளக்கு போடப்படுகிறது என்று வேண்டுமானால் சொல்ல லாம். கிராமங்களில் அமைச்சர்கள் போகும்போது இருட்டில் போகாமல் மின்சார வெளிச்சத்தில் போய்க்கொண்டிருக்கிறோம் என்று வேண்டுமானால் சொல்லலாம். ஆனால் தொழில் துறையில் அதிகப்படியான அளவுக்கு மின்சாரம் உபயோகப்படுத்தப்பட வேண்டுமானால், மற்ற வழிகளில் மின்சார உற்பத்திக்கான திட்டங் களை மேற்கொண்டாக வேண்டும். அமைச்சர்கள் வேண்டுமென்றால் கிராமங்களில் சுற்றுப் பயணம் செய்யும்போது அதிகாரிகளை யும் அழைத்துக் கொண்டுபோய் தேர்தல் நிதி வசூலிப்பதற்கு மின்சார வெளிச்சம் இப்பொழுது பயன்படலாம். அந்த அளவுக்கு அரசியல் நிலைமை தடுமாறிப் போய்க்கொண்டிருக்கிறது. இந்தச் சட்டமன்றத்தில் எனக்கு முன்னால் பேசிய தி.மு.க. உறுப்பினர் நண்பர் திரு. ப. உ. சண்முகம் அவர்கள் கூறியதை அமைச்சர்கள் கூர்ந்து கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அவர்கள் கொஞ்சம் உணர்ச்சியோடு கூறியதற்காக வேண்டுமென்றால் அமைச்சர் அவர்கள் கோபம் அடையலாம். அதே நேரத்தில் இந்த நிலைமைதான் நாட்டில் இருந்து கொண்டிருக்கவேண்டும் என்று நிதி அமைச்சர் அவர்கள் கருதுகிறார்களா என்று நான் கேட்க விரும்புகிறேன். நிதி அமைச்சர் அவர்கள் சொல்லுகிறார் கள், தேர்தல் நிதி வசூல் செய்வதற்கு அமைச்சர்களுக்கு வேண்டிய ஆற்றல் இல்லை என்று எண்ணுகிறீர்களா? அமைச்சர் களை விடவா கலெக்டர் அவர்கள் சக்தி படைத்தவர்கள் என்று கருதுகிறீர்கள்? நாங்கள் கலெக்டர் அவர்களுடைய ஆதாரவைத் தேடவேண்டிய அவசியமில்லை—எங்களுக்கு டெப்டி கலெக்டர் தேவையில்லை, தனியாகவே நிதி வசூல் செய்ய முடியும் என்று. நிதி அமைச்சர் அவர்கள் இதைப்பற்றிக் கொஞ்சம் அமைதியாக இருந்து ஆத்திரப்படாமல் சிந்தித்துப் பார்த்தால் இந்த நிலைமை யைக் கண்டு மக்கள் கைகொட்டிச் சிரிப்பார்கள் என்கிற முடி வுக்கு நிச்சயமாக வருவார்கள். அதுவும் அமைச்சராக இருந்து கொண்டிருக்கிற நேரத்தில் அதிகாரிகளுடன்போய் நிதி வசூலிப்பது அமைச்சர்களுக்கு அழகல்ல, முறையுமல்ல. அமைச்சர்களுக்கு அழகு (மந்திரிக்கழகு) வரும் பொருள் உரைத்தல், வரும் பொருள் திரட்டல் அல்ல. அதுவும்

4th March 1961] [Sri K. Anbazhagan]

கட்சிக்குப் பொருள் திரட்டல் அல்ல, வேண்டுமென்றால் நாட்டுக்கு நிதி திரட்டலாம். அமைச்சராக இருந்துகொண்டு தங்களுடைய கட்சிக்கு நிதி திரட்டுவது என்று சொன்னால் அது அமைச்சர் திரு. மாணிக்கவேலு அவர்களாக இருந்தாலும் சரி, வேறு எவராயினும் அது குற்றம்தான். இப்படித் தான் செய்வோம் என்று வேண்டுமானால் அவர்கள் சொல்லக் கூடும். காங்கிரஸ் கட்சிக்கு அது பெருமைதான் என்று வேண்டு மானாலும் வாதிடக்கூடும். நல்ல காலமாக மகாத்மா காந்தியார் அவர்கள் உயிரோடு இல்லாத காரணத்தால் அமைச்சர்கள் தைரிய மாகவே பேசலாம். "அமைச்சராக இருந்துகொண்டு தேர்தல் நிதி வசூலிப்போம், அதிகாரிகள் அமைச்சர்களோடு வந்தார்கள் என்றால் அவர்கள் நிதி வசூலித்தார்கள் என்று பொருளா? நாங்கள் போகும்போது அவர்கள் எங்களோடு வருகிறார்கள், அதனால் அவர்கள் நிதி வசூலிக்கப் பயன்பட்டார்கள் என்று அர்த்தமா?" என்று கேட்கிறார்கள். உங்களோடு வருகின்ற டெப்யூடி கலெக்டர் போன்றோர் நாளைய தினம் நீங்கள் இல்லாதபோதும் இந்த செல்வாக்கைத் தவறாகப் பயன்படுத்த மாட்டார்கள் என்று அமைச்சர் அவர்களால் உறுதி சொல்லமுடியுமா? காங்கிரஸ் கட்சித் தலைவர்கள் நிதி வசூல் செய்யட்டும், வேண்டாமென்று யாரும் சொல்லவில்லை. ஒவ்வொரு பஸ் முதலாளியினிடத்திலும் போய் வசூல் செய்யட்டும். ஐந்து ஆயிரம் அல்ல, பத்தாயிரம் வரை கேளுங்கள். அவர்களும் எந்த எந்த 'ரூட்டுகள்' கேட்க வேண்டுமோ அதற்கேற்ப கொடுப்பார்கள். ஒவ்வொரு வணிகரிடத் திலும் போய்க் கேளுங்கள். எவ்வளவு தொகை கொடுத்தால் எத்தனை ரூபாய் வருமான வரியிலிருந்து தள்ளுபடி கிடைக்கும் என்று அவர்களுக்கும் தெரியும். அதற்கு மாறாக காங்கிரஸ் கட்சித் தேர்தல் நிதிக்காக அமைச்சர்களே நேரடியாகப் புறப்பட்டுப் போவது என்று சொன்னால் அது நாட்டு மக்களிடத்தில் உண்மை யிலேயே மனக்கசப்பை வளரச் செய்யும் என்பதை அமைச்சர் களுக்கு எச்சரிக்கையாகத் தெரிவித்துக்கொள்கிறேன். அரசாங் கக் காரியத்திற்காகப் போகும்போது அமைச்சர்கள் ஓய்வு இருந்தால் கட்சிக் காரியத்தில் ஈடுபடக் கூடாதா என்று கேட்கப் படுகிறது. அமைச்சர்களில் யாராவது கட்சிக்காரியங்களுக்காக விடுமுறை எடுத்துக்கொண்டிருக்கிறார்களா? வேண்டுமென்றால் 15 நாட்கள் விடுமுறை எடுத்துக்கொண்டு கட்சி வேலையில் ஈடுபடுவது தானே? யார் வேண்டாம் என்று சொன்னார்கள். அவ்விதம் முறைப்படி செய்யாமல் இருப்பதுடன் அதிகாரத்தை உபயோ கித்து தங்கள் கட்சியைக் காப்பாற்றி விடலாம் என்ற நம்பிக்கை யில் அமைச்சர்கள் இருந்தால், அது ஒரு நாளும் நிறைவேறாது. அதிகாரத்தால் கட்சியை வளர்த்துவிட எண்ணி வீழ்ச்சி அடைந்த வர்களை நாம் பார்த்திருக்கின்றோம். ஆகவே அதிகாரத்தில் இருந்து கொண்டு இவ்வாறு தவறு செய்வது முறையல்ல என் பதை அமைச்சர்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன்.

கடைசியாக மிகவும் வருத்தத்தோடு ஒரு செய்தியைத் தெரி வித்துக்கொள்கிறேன். இந்த ஆட்சி தமிழர்களைக் காப்பாற்று வதற்காகத்தான் இருக்கிறது என்று பேசப்படுகிறது. தமிழர்

களுக்காகவே பல காரியங்களைச் செய்து கொண்டிருக்கிறது என்று சொல்லப்படுகிறது. இப்படி அமைச்சர்கள் அரிய திட்டத்தை நிறைவேற்றிவிடுவதால் எங்கே எதிர்க்கட்சியே பூண்டோடு இல்லாமல் போய்விடுமோ என்று கவலைப்படுவதாக ஆளும் கட்சி உறுப்பினர் ஒருவர் பேசினார். ஒரு வேளை எதிர்க்கட்சியைக் காப்பாற்ற, அவரே நாளைக்கு எதிர்கட்சிக்கு வந்து விடுவாரோ என்று ஐயுறுகிறேன் நான். இன்றைக்கு அமைச்சர்களாக இருப்பவர்களில் எத்தனை பேர்கள் திரும்பியும் அமைச்சர்களாக வரப்போகிறார்கள் என்பதையும் நான் அறிய மாட்டேன். இந்த நிலையில் ஆளும் கட்சி உறுப்பினர்கள் எதிர்க்கட்சிக்காகவே கவலைப்பட்டுக்கொள்வதை இன்றுதான் நான் கண்டேன். எதிர்க் கட்சி உறுப்பினர்களைக் காப்பாற்றப் புறப்படுகிற இவர்கள் இலங்கையில் உள்ள தமிழர்களுடைய நிலையைப்பற்றி ஆட்சியாளர்கள் செய்தது என்ன என்று கேட்டார்களா? அவர்களுக்காக இந்த அரசாங்கம் அல்லது இந்த சட்டசபை போராட வேண்டும் என்றுகூட நான் கூறவில்லை. ஆனால் இங்குள்ள அமைச்சர்கள் டெல்லி சர்க்கார் மூலமாக இலங்கை சர்க்காருக்கு தங்கள் வருத்தத்தை, தங்கள் கண்டனத்தைத் தெரிவிக்க வேண்டாமா? இலங்கையில் மனித நீதி கொல்லப்படுகிறது, தமிழ் மக்கள் அவமானப்படுத்தப் படுகிறார்கள், தமிழ் இனம் அடிமைப்படுத்தப்படுகிறது, தமிழ் மொழி புறக்கணிக்கப்படுகிறது. இந்நிலையில் இதை நாங்கள் ஏற்றுக்கொள்ள முடியாது. அங்கே நடைபெறுகின்ற அநீதிகளை நீக்குவதற்கு நாங்கள் முயற்சி செய்கிறோம் என்றாவது தெரிவிக்க வேண்டும் நமது அரசாங்கம். இங்கே அமைச்சர் திரு. சுப்பிரமணியம் அவர்கள் காட்டுகிற தமிழ்ப்பற்று, அவர் போடுகிற கதர் சட்டையோடு அந்தப்பற்று ஒட்டிக்கொண்டு விடுகிறது என்றுதான் நான் நினைக்கிறேன். தமிழர்கள்மீது அவர்களுக்கு ஆழ்ந்த பற்று இருக்கிறது என்றால் இலங்கையில் கண்ணீர் வடித்துக்கொண்டிருக்கும் தமிழர்களுக்காக அவருடைய கடமையை ஆற்றவேண்டுமல்லவா? அது அந்நிய நாட்டுப் பிரச்னை என்று சொல்லக்கூடும். இதில் தமிழ் நாட்டு மக்களுக்கு அதிகத் தொடர்பு இருக்கிறது—பொறுப்பு இருக்கிறது. சென்னை அரசாங்கம் நல்ல அரசாங்கமாக இருந்தால் இந்தப் பிரச்னையைத் தீர்த்து வைக்க முயன்றிருக்க வேண்டும். இந்தச் சென்னை மாநிலத்தில்—இது வரையில் சென்னை மாகாணம் என்று அழைக்கப்பட்டு, தமிழ்நாடு என்றுகூடப் பெயர் வைக்க இசையாதிருந்து இப்போது ஏதோ ஒப்புக்குத் தமிழ்நாடு என்று வாயளவில் அழைக்கப்படுகின்ற இந்த மாநிலத்தின் சட்டசபை உறுப்பினராக வாழ்கின்ற நான் இலங்கைக்குச் செல்லவேண்டுமென்று விண்ணப்பித்தால் இந்திய அரசாங்கத்தால் அனுமதியும் (பாஸ்போர்ட்) மறுக்கப்படுகிறது. அந்த அதிகாரம் கூட இங்கே இல்லை. மந்திரிகளுக்கு—கனம் மந்திரிகளுக்கு இந்த லேசான சீட்டுத் தரும் அதிகாரம்கூட—பயண அனுமதி வழங்கும் உரிமை கூட—இந்த நாட்டில் இல்லை என்றால் இந்த வெட்கக்கேடான

நிலைமை நீங்கி தமிழ்நாட்டு மக்கள் உரிமை பெற்றால்தான் இலங்கையில் வாழக்கூடிய தமிழர்களைத் துயரத்திலிருந்து காப்பாற்ற முடியும்—மலேயாவிலும், பர்மாவிலும் வாழக்கூடிய தமிழர்களையும் காப்பாற்ற முடியும். ஆக இவர்களைக் காப்பாற்ற வழியற்ற நிலையில் இங்கு வழங்கப்பட்டுள்ள நிதிநிலை அறிக்கை அவல நிலை பட்ஜெட்டே தவிர ஆட்சி நிலை பட்ஜெட் ஆகாது என்ற கருத்தைத் தெரிவித்து எனது உரையை முடிக்கின்றேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : As my name has again been drawn, I have to explain the position. என்னமோ தெரியவில்லை, முன்னமேயே சொல்லியும் என் பெயரை மறுபடியும் இழுத்திருக்கின்றார். அவருக்கு ஒரு mirage ஏற்பட்டிருக்கிறது. ஒரு அமைச்சருக்குத் தன்னுடைய தொகுதிக்குப் போக உரிமை உண்டு. தொகுதிக்குப் போகும்போது பள்ளிக்கூடம் திறப்பது போன்ற அலுவல்கள் இருந்தால் செய்யலாம். அவர் சாப்பிடலாம். ஒரு மணி நேரம், 2 மணி நேரம் நடக்கலாம். "நீ ஆபீஸ் வேலையாய்ப் போனாயே என் சாப்பிட்டாய், என் நடந்தாய்?" என்று கேட்பது மாதிரி இருக்கிறது. உத்தியோகஸ்தர்கள் நிதி வசூலில் ஈடுபடக்கூடாது—அவர்கள் ஈடுபடவும் இல்லை. ஈடுபட வேண்டிய அவசியமும் இல்லை. காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்களோடு போய்ச் செய்தேனே தவிர, உத்தியோகஸ்தர்களை உபயோகிக்கும் சுபாவம் என்னிடத்தில் கிடையாது—எங்கள் கட்சிக்காரர்கள் வேறு யாரிடமும் கிடையாது.

* SRI V. ARUNACHALA THEVAR : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்த 1961-62-ம் ஆண்டின் வரவு செலவு அறிக்கையை நமது நிதி அமைச்சர் சமர்ப்பித்திருக்கிறார்கள். அதை வரவேற்று சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன்.

இந்த வரவு செலவுத் திட்டத்தை யாரும் வரவேற்காமல் இருக்கமுடியாது. இந்த மாகாணத்திலுள்ள ஏழைப் பிள்ளைகள் எல்லோருக்கும் இனமாகப் படிப்பு வசதி கொடுக்கப்படும் என்று சொல்லியிருப்பதை யாரும் வரவேற்காமல் இருக்க முடியாது. ஆரம்பப் பள்ளிகளும், ஹைஸ்கூல்களும் நூற்றுக் கணக்கில் அல்ல, ஆயிரக் கணக்கில் நமது மாகாணத்தில் கடந்த 10 வருஷங்களிலே ஆரம்பித்திருக்கிறார்கள். அதிலும் குறிப்பாக இந்த 2 வருஷங்களிலே 300 ஜனத்தொகை இருக்கக்கூடிய கிராமங்களில் ஏராளமான பள்ளிகளை அமைத்து இங்கேகூட பிள்ளைகளுக்கு இடமில்லாமல் இருப்பதை நாம் கண்கூடாகக் காண்கின்றோம். அவர்களுக்கு கஷ்டத்தின் காரணமாக பள்ளிக்குப் போய் படிக்க வசதி இல்லையே என்றெண்ணி பகலுணவு அளிப்பது பாராட்டத் தக்கது.

கடந்த 10 ஆண்டுகளில் நமது நாடு முன்னேறவில்லையே என்று எதிர்க் கட்சியினர் சொல்லுகிறார்கள். ஆனால் நம் மாகாணத்தில் 10 வருஷங்களுக்கு முன்னதாக எத்தனை பஸ் ஸர்வீஸ்கள் ஓடிக்கொண்டிருந்தன, இன்று எத்தனை பஸ் ஸர்வீஸ்கள் ஓடிக்கொண்டி

ருக்கின்றன, இவைகள் எல்லாம் ரோட்டில் சும்மா ஓடுகின்றனவா அல்லது மக்களை ஏற்றிக்கொண்டு செல்லுகின்றனவா அல்லது இனமாக ஓடுகின்றதா. கையில் காசில்லாமல் போக்குவரத்து வசதியில்லாமலிருந்த மக்கள் யாவரும் இன்று எப்படிக் காட்சி யளிக்கிறார்கள் என்பதைக் காண்கின்றோம். அதிலும் கூட்டுறவு முறையில் பார்க்கப்போனால் 10 ஆண்டுகளுக்கு முன்பு இருந்த நிலையோடு இன்றைய நிலையை ஒப்பிட்டுப் பார்க்கும்போது இன்று ஒவ்வொரு கிராமத்திலும் ஆயிரக்கணக்கான மக்கள் பயனடையக் கூடிய முறையில் கூட்டுறவு சொஸைட்டிகள் ஏற்பாடாகி நிலம் இல்லாதவர்களும் விவசாயம் செய்யச் சக்தியில்லாதவர்களும்கூட கடனை வாங்கிப் பயன் அடையும் காட்சியைக் காண்கின்றோம். இதெல்லாம் நம் நாட்டின் சாதனை என்பதில் சந்தேகம் இல்லை. அடுத்தபடியாக நமது நாட்டில் எத்தனையோ அணைக்கட்டுத் திட்டங்கள் நிறைவேறியிருக்கின்றன. எத்தனையோ கோடிக் கணக்கில் செலவு செய்து லட்சக் கணக்கான ஏக்கர்களில் உணவு தானியம் விளைகிறது. அதிலும் குறிப்பாக மணிமுத்தாறு, ஆரணி யாறு, சாத்தனூர், கிருஷ்ணகிரி, அமராவதி, வைகை, பவானி திட்டங்களிலே கோடிக்கணக்கான ரூபாய் செலவு செய்து நம் அரசாங்கம் அணைக்கட்டுகளைக் கட்டி லட்சக்கணக்கான ஏக்கர் களில் சாகுபடி செய்வதால்தான் ஏராளமாக உற்பத்தி செய்யப் படுகிறது. ஆனால் அந்த உணவு தானியங்கள் எல்லாம் எங்கே போகின்றன ? நமது மக்கள்தான் சாப்பிடுகிறார்கள். ஏராளமான குழந்தைகளைப் பெறுகிறார்கள். ஒரு வயது ஆனவுடனேயே குழந்தைகள் சாப்பிட ஆரம்பிக்கின்றன. மக்கள் தொகை அதிகமாவதன் காரணமாக மறுபடியும் பற்றாக்குறை ஏற்படு கிறது. பாலைவனம் போன்று இருந்த இந்த இடங்களில் அணைக் கட்டுகளின் காரணமாக ஏராளமான நிலங்களில் சாகுபடி செய்து தானியம் விளைகின்றது. இதையெல்லாம் பார்த்தும்கூட நாடு முன்னேறவில்லை என்று எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் சொல்வது ஆச்சரியமாக இருக்கிறது.

அடுத்தபடியாக என்னுடைய பகுதியைப் பொறுத்தமட்டில் அடிக்கடி சொல்லியும் எந்தத் திட்டங்களும் நிறைவேற்றப்பட வில்லை. இவ்வளவு நேரம் முன்னேறி இருக்கிறது என்று சொல்லி விட்டு எந்தத் திட்டங்களும் நிறைவேறவில்லை என்று சொல்லு கிறேனே என்று நினைக்கலாம். மற்ற பகுதிகள் முன்னேறி இருந் தாலும் சில பகுதிகளில் திட்டங்கள் நிறைவேற்றப்படாமல் இருக்கின்றன. அதைத்தான் எடுத்துச் சொல்லவேண்டியிருக் கிறது.

நமது சர்தார் வேதரத்னம் பிள்ளை அவர்கள் குறிப்பிட்டுச் சொன்னார்கள், காவிரித் தண்ணீர் சமுத்திரத்திற்கு வீணாகப் போகிறது, அதைப் பயன்படுத்தலாம் என்று. நிபுணர்கள் தண்ணீர் போகவில்லை என்று சொல்லுகிறார்கள். நாங்கள் சொல்லு கிறோம் தண்ணீர் போகிறது என்று. அதை எங்களுக்குக் கொடுங்கள் என்று 10 ஆண்டுகளாகச் சொல்லிக்கொண்டிருக் கிறோம். எங்கள் பகுதியில் மணப்பாறையில் ஆரம்பித்து, புதுக்

4th March 1961] [Sri V. Arunachala Thevar]

கோட்டை வழியாக அரந்தாங்கி வரையில் ஏராளமான குளங்கள் இருக்கின்றன. ஆடிமாத வாக்கில் ஒரு முறை கொடுக்க இந்தத் தண்ணீர் பயன்பட்டாலும் புரட்டாசி, ஐப்பசி காலத்தில் மழை பெய்யும்போது சாகுபடி பூர்த்தி செய்யலாம். காவிரித் தண்ணீர் வருவதற்கு லெவல் இல்லையென்று சொல்லுகிறார்கள். ஜேடர் பாளையத்திலிருந்து லெவல் சாதனங்கள் எல்லாம் இருக்கின்றன. அதை அரசாங்கம் செய்யவில்லையே என்ற குறையை எடுத்துச் சொல்லவேண்டியிருக்கிறது. அப்படி இல்லையானாலும்கூட எங்கள் பகுதியில் அக்கினியாறு, கோரையாறு, வெள்ளாறு போன்ற காட்டாறுகள் இருக்கின்றன. அந்தக் காட்டாறுகளில் அணைக்கட்டுகளைக் கட்டினால் மக்கள் பயனடைவார்கள் என்பதைக் கடந்த 10 ஆண்டுகளாக எடுத்துச் சொல்லியும் அது பரிசீலனை செய்யப்படுகிறது என்றும், எஸ்டிமேட் தயார் செய்யப்படுகிறது என்றும் சொல்லி இதுவரையில் இன்ஜினியர்கள் எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லையே என்று வருத்தத்தோடு சொல்ல வேண்டியதாக இருக்கிறது.

அடுத்தபடியாக புதுக்கோட்டைப் பகுதியை ஒரு ஜில்லாவாக ஆக்க வேண்டுமென்று சொல்லிக்கொண்டிருக்கிறோம். இதற்காக மக்களால் மாநாடு போடப்பட்டிருக்கிறது. அங்கே அநேக சர்க்கார்க் கட்டிடங்கள் இருக்கின்றன. உயர்நிலைப் பள்ளிகள் இருக்கின்றன. ஆஸ்பத்திரிகள் இருக்கின்றன. அரசாங்கக் கட்டிடங்கள் ஏராளமாக இருக்கின்றன. முன்பு இந்த புதுக் கோட்டை ஒரு சமஸ்தானமாக இருந்தது. அதற்கு ஒரு முக்கியத் துவம் கொடுக்க வேண்டுமென்று எத்தனையோ தடவைகள் சொல்லியதோடல்லாமல் மாநாடுகளில் தீர்மானங்கள் போட்டும் அமைச்சர்கள் வந்தபோதும்கூட எடுத்துச் சொல்லப்பட்டது.

ஆனால் புதுக்கோட்டைப் பகுதியிலே பிறந்து அடிமை 1-30 p.m. விலங்கை அறுத்தெறிந்து, இந்த நாட்டின் விடுதலைக்காகப் பாடு பட்ட நமது ஸ்ரீமான் சத்தியமூர்த்தி அவர்களின் சொந்த ஊராகிய இந்தப் புதுக்கோட்டைப் பிராந்தியத்தை ஒரு தனிப்பட்ட ஜில்லாவாக்க நமது அமைச்சர்கள் தக்க நடவடிக்கை எடுக்கக் கூடாதா என்று கேட்கிறேன். அவர் செய்த சாதனைகளுக்காவது அல்லது அவர் செய்த தியாகங்களுக்காவது அல்லது அவர் இந்த நாட்டிற்காகப் பட்ட கஷ்டத்திற்காகவும், சுதந்திரம் வாங்கு வதற்கு முக்கிய காரணகர்த்தாவாக இருந்த இப்பகுதியை ஒரு தனி ஜில்லாவாக ஆக்கக்கூடாதா? இதை இனிமேலாவது அவசியம் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

எங்கள் பகுதியிலே இப்போது எங்கள் ஜில்லாவைச் சேர்ந்த கனம் மின்சார அமைச்சர் அவர்கள் சுற்றுப்பிரயாணம் செய் தார்கள். பன்னிரண்டாயிரம் கிராமங்களுக்கு நாம் மின்சார வசதி செய்து கொடுத்திருக்கிறோம் என்று சொல்கிறோமே, அதே போல் எங்கள் கிராமங்களுக்கும், எங்கள் பகுதிகளுக்கும் மின்சார வசதி செய்து கொடுங்கள் என்று இரவு 3 மணி வரை யிலும் மக்கள் மகஜர்கள் கொடுத்தார்கள். அதை நான் ரொம்ப வருத்தத்தோடு சொல்லவேண்டியிருக்கிறது. தஞ்சாவூர் பக்கத்

[Sri V. Arunachala Thevar] [4th March 1961

திலே உள்ள கந்தர்வகோட்டையிலிருந்து, புதுக்கோட்டையிலுள்ள எல்லாப் பகுதிக்கும் சரியான முறையில் இந்த மின்சார வசதி விஸ்தரிக்கப்படாமல் விடப்பட்டிருக்கிறது. இதை அமைச்சர் அவர்களே பார்த்தார்கள். இதைப்பற்றியே நாங்கள் சென்ற ஒவ்வொரு கிராமத்திலும் உள்ள மக்கள் சொன்னதைப் பார்த்தால் தெரியும். ஆனால் மக்கள் அரசாங்கத்தைக் குறை கூறவில்லை. அரசாங்கம் செய்கின்ற வேலைகளுக்காக அவர்கள் சந்தோஷப்படுகிறார்கள். எதிர்க் கட்சியினர் கூறுவதைப்போல் அல்ல. இரவு மூன்று மணி வரையிலும் காத்திருந்து எங்களுக்கு இன்னும் அனேக நன்மைகளைச் செய்யவேண்டுமென்று கேட்கிறார்கள். அவர்கள் கேட்பது என்னவென்றால், "எங்களுக்கு ஏரிகள் மராமத்து செய்ய இல்லை. காட்டாறுகளில் அணை கட்ட இல்லை. இருக்கின்ற கிணறுகளிலுள்ள தண்ணீரை உபயோகப்படுத்தி விவசாயம் செய்வதற்காவது மின்சார வசதி செய்து கொடுங்கள்" என்றுதான் கேட்கிறார்கள். நமது காருண்யமுள்ள அரசாங்கம் இதைக் கூடிய சிக்கிரத்தில் கவனிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக . . . . . . . . . .

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again at 8-30 a.m., on Monday, the 6th March 1961.

The House then adjourned.

## V. PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### *A.—Statutory Rules and orders.*

172. *Notification issued with G.O. Ms. No.* 1980, ***Public*** *(General-M), dated 14th December* 1960, *regarding the introduction of Tamil in Government Offices up to District level. (Laid on the table of the House under section 6 of the Madras Official Language Act*, 1956 *(Madras Act XXXIX of* 1956*).*

### *B.—Reports, Notifications and other papers.*

*Nil*